# தனிப்பாடல் நகைச்சுவை




உரை விளக்கம் :

வேட கபிலன்




அருணோதயம்
இராயப்பேட்டை :: சென்னை-14.

அருணோதயம் வெளியீடு : 57
முதற் பதிப்பு : ஏப்ரல், 1959
2-ம் பதிப்பு : டிசம்பர் 1963


விலை ரூபா 3-00

## பொருளடக்கம்



ஸ்ரீநிவாஸ் பிரிண்டிங்பிரஸ், 329, தங்கசாலைத்தெரு, சென்னை-1.




# தனிப்பாடல்

## நகைச்சுவை

காளமேகம், நாவீறு படைத்த புலவன்; நகைச்சுவை மன்னன்; அவனுக்குநிகர், அவனேதான்! அவன், எந்த ஊரிலும் ஓரிரு நாளைக்குக்கூட தங்கிப் போகான். எங்கேனும் ஓர் ஊரில் இரண்டு மூன்றுநாள் தங்கிவிடுகிறனென்றால் பெரும் வியப்பிற்குரிய செய்தியேயாகும். 'யாதும் ஊரே!' என்பது அவனுக்குத்தான் பொருந்தும்; வேறு யாருக்கும் பொருந்தாது. எந்த ஊரையும் சொந்த ஊராகக் கருதுபவன். விண் மாரி பொழிகின்ற காளமேகம் அவன். அவனைப் பற்றிய வரலாறு நமக்குச் சரியாகக் கிடைக்கவில்லையென்றுதான் சொல்லவேண்டும். சமீபகாலமாகக் காளமேகத்தைக் குறித்து ஒரு பொய்க் கதை நிலவி வருகின்றது.

அதாவது 'வரதன்' என்ற பரிசாரகன் திருவரங்கம் கோயிலில் பணிசெய்து கொண்டிருந்ததாகவும், திருவானைக்காவிலுள்ள சம்புகேசுவரர் கோயிலுக்கு விலைமகளாகவுள்ள மோகனாங்கி என்பவள், அவன்மீது மோகங்கொண்டதாகவும், அதனால், அவ்விருவருக்கும் ஒருமித்த அன்பு ஏற்பட்டு இணைந்து வாழ்ந்ததாகவும் கூறப்படுகிறது. 'அம்மட்டுமா?' என்றால், 'இல்லை' என்றுதான் சொல்லவேண்டும்.

மார்கழித் திங்கள்!

சம்புகேசுவரர் கோயிலில் திருவெம்பாவை பாடும் நாள் வந்துற்றதாம்! யாருக்கு? அந்த மோகனுங்கிக்குத்தான்! அவள் வந்தாளாம்! திருவெம்பாவைக் கொத்த முறையில் ஆடலில் இறங்கினுளாம்! பாடலும் பாடத்தொடங்கினுளாம்! 'உங்கையிற் பிள்ளை' என்று பாடுவதற்கு மாருக 'எங்கொங்கை நின்னன்பரல்லார்தோள் சேரற்க'எனப்பாடினுளாம்; அவையிலிருந்த ஏனைய விலைமகளிரும் மற்றவரும் 'கொல்' எனச் சிரித்தார்களாம்! வெட்கமுற்ருளாம், அந்த விலைமகள்! தன்னைத் தானே நினைத்துப்பார்க்கத் தலைப்பட்டாளாம்! 'அடடா! என்ன காரியம் செய்துவிட்டோம்? 'உங்கையிற் பிள்ளை' என்பதற்கு மாருக, 'எங்கொங்கை...' என்று எண்ணியவாறே தம் மார்பகத்தைப் பார்த்தாளாம்; மேன்மேலும் வெட்கமுற்றுத் தலை சாய்த்தாளாம். அவளையொத்த பதிவிரதைகள், 'அடீ! அவன் நினைவா? அந்தப்பயல் அணைப்பா? வைணவன் செய்த வழியா இது?'' என, எள்ளிநகையாடினுர்களாம்! மேலும், 'கொட்டைப்பாக்கடீ உன் கொங்கை' என்று கூறினுர்களாம்.

அவளென்ன செய்வாள்? அவளுக்கு அமைந்தது அப்படி! சிவந்த முகத்தோடும் சோர்ந்த கொங்கையோடும் சோர்வடையாத 'பல' அறிகுறிகளோடும் வீடுவந்து சேர்ந்தாளாம்! அப்போது அவளுக்கிருந்த வெறுப்பு சொல்லக் கூடியதல்லவாம்! அவ்வளவு ஆத்திரம் இருந்ததாம்! யார் மீது? அந்தப் பரிதாபத்திற்குரிய பரிசாரகன் மீதுதான்!

இரவு வந்தது!

அவளுள்ள அந்த வீதி முழுமையிலும் முற்றுகையிட்டுள்ள-முற்றும் துறந்த பரத்தையர்கள் ஒவ்வொருவரும் கொவ்வைச் செவ்வாயைக் காட்டி, செங்காந்தள் விரல்களை உறவாக நீட்டி, காட்டவேண்டியதைக் கணக்கோடு காட்டி, சேர்க்க வேண்டியதை ஒழுங்காகச் சேர்த்துக் கொண்டு கைகோர்த்துக் கொண்டிருக்கும் கைலாயக் காட்சியைக் கண்டவாறே அவன், அவள் வீட்டிற்கு வந்தானும்! மூடிக்

அங்கொரு மரத்தைக் கண்டான். அதுவும் ஆமணக்கு மரம்! அந்த மலையடிவாரத்தில், அப்போது ஒரு களிறு போய்க் கொண்டிருந்தது. அதையும் அவன் கண்டான். இந்த இரண்டையும் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினுன். ஒளி தெரிந்து விட்டது. மேகமாக மாறினுன்! கவி மழை பொழியத் தொடங்கினுன்.

1. முத்திருக்கும் கொம்பசைக்கும் மூரித்தண் டேந்திவரும்
கொத்திருக்கும் நேரே குலைசாய்க்கும்—எத்திசைக்கும்
தேமணக்குஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆமணக்கு மால்யானை யாம்.

இந்தப் பாடலுக்குள் இரு பொருள் உள்ளது. அந்த இரண்டையும் பொருத்தி வைத்துக் காட்டும் ஆற்றல், தனக்குத்தான் உரியது!' என்ற முறையில் படைவீடு அமைந்துள்ளான். இவ்வாறு இருபொருளும் சேர்ந்து நிற்பதற்குச் 'சிலேடை' எனப் பெயர்வழங்கும். இப்போது பாருங்கள், அவனது நுண்ணிய அறிவை!

## ஆமணக்கு

**முத்திருக்கும்...**

முத்தையொத்த வெண்ணிற வித்துக்கள் ஆமணக்கில் உண்டு.

**கொம்பசைக்கும்...**

வளர்ந்துள்ள ஆமணக்கானது, தன்னிடத்திலேயுள்ள கொம்புகளை அசைத்துக் காட்டும்.

**மூரித்தண் டேந்திவரும்...**

நிலத்தைக் கிழித்துக்கொண்டு தண்டுகளை ஏந்தியவாறு ஆமணக்காக வளர்ந்துவரும்.

**கொத்து இருக்கும்...**

கொத்துக் கொத்தான அழகிய பூக்கள் ஆமணக்கில் உண்டு.

**நேரே குலைசாய்க்கும்...**

காய்த்து முற்றிய குலைகளை, ஆமணக்கானது அழகாகச் சாய்த்துக் காட்டும்

## மால்யானை

**முத்திருக்கும்...**

யானையும் முத்தையொத்த வெண்ணிறத்தை தந்தமாகப் பெற்றுள்ளது. அதுவும் வித்தைப் போன்றதே!

**கொம்பசைக்கும்...**

யானையும் அவ்வாறுதான். தன்னிடத்திலேயுள்ள தந்தங்களை (கொம்புகளை) அசைத்துக் காட்டும்.

**மூரித்தண்டு ஏந்திவரும்...**

யானையும், ஓங்கி வளர்ந்துள்ள தந்தத்தில், தேக்கு போன்ற மரங்களை ஒடித்து, தன் தும்பிக்கையால் ஏந்தி. மதத்தோடு ஓடிவரும்.

**கொத்தி (இ)ருக்கும்...**

மதத்தோடு திரிகின்ற யானையை அடக்குவதற்காகப் பாகன் முனைவான்; அங்குசத்தால் அதன் தலையைப் பார்த்துக் குத்துவான். அதனால் அதன் தலையில் வடுக்கள் உண்டு. அவ்வடுக்களானது பார்ப்பதற்குப் பூங்கொத்துக்கள்போல தோற்றஞ்செய்யும்

**நேரே குலைசாய்க்கும்...**

யானையும் தன் எதிரே தெரிந்த வாழைக் குலைகளை வேரோடு சாய்த்துக் காட்டும்.

ஆக இவ்வித ஒற்றுமையால், ஆமணக்கு மால் யானையாம்...' என வழங்கியுள்ளான்.

இக்காட்சியை எங்கு கண்டான் தெரியுமா? 'தேமணக்குஞ் சோலை திருமலைரா யன்வரையில்' என்னும் இன்ப இடத்தில் தான் கண்டான்,

ஒரு பொருளை மற்றொரு பொருளோடு பொருத்திக் காட்டுவதற்கு நுண்ணிய அறிவு வேண்டும். அந்த அறிவு அவனிடத்தில் பரந்து இருந்ததால்தான் ஆமணக்கும் மால் யானையும் ஒன்றென்பதற்குத் தக்க முறையில் எடுத்துக் காட்ட முடிந்தது. இக்காலத்தில் சில கவிஞர்கள், ஏதேனும் ஒன்றைப் பொருத்திக்காட்ட முனைந்து தோல்வி காண்பதைப்

பலர் அறிவர். ஆனால் காளமேகம் அப்படியல்ல! குற்றங் குறை காண இயலா வகையில் நகைச்சுவையோடு நமக் களித்துள்ளான். இந்த, 'கொத்திருக்கும்...' என்பதைப் பிரித் தால் கொத்து இருக்கும் (ஆமணக்கில் பூங்கொத்து இருக்கும்) எனவும், கொத்தி இருக்கும் (பாகனால் குத்தப்பட்ட வடுக்கள் யானையின் தலையில் பூங்கொத்தைப்போல இருக்கும்) எனவும் பொருள்படும். இந்த இரு வகையில் சுவையிருப் பதால்-நகைச்சுவை அமைந்திருப்பதால்—அதுவே நமக்கு நகைச்சுவையாகும். அவர் நினைத்த சுவையும் அதுவேயாம்.

அம் மட்டுமா? அந்தக் காட்சியைக் கண்டு எழுதிக் கொண்டு அங்கிருந்து புறப்படுகிறான். ஏதேதோ காட்சிகள். அப்போது அங்கொரு புரவி தென்பட்டது. அது, ஓடி வரும் காட்சியை அவனது புறக்கண் கண்டு அகக் கண்ணுக்கு உணர்த்தியது. உடனே,

2. ஓடுஞ் சுழிசுத்த முண்டாகுந் துன்னலரைச்
சாடும் பரிவாய்த் தலைசாய்க்கும்—நாடறியத்
தேடு புகழான் திருமலைரா யன்வரையில்
ஆடுபரி காவிரியா மே.

என்று பாடினான். அதையே ஓலையிலும் பொறித்தான். அவன் பார்த்தது குதிரையை! அந்தப் புரவியை அங்கிருந்து இழுத்துப் போகிறான். எங்கே தெரியுமா? காவிரி ஆற்றங் கரைக்கு! இரண்டையும் ஒற்றுமைப் படுத்துகிறான்; ஒழுங் காக அமைகிறது.

## குதிரை

ஓடும்...

வீரப் புரவி (குதிரை)யானது வேகமாக ஓடக்கூடிய தாகும்.

சுழி சுத்தம் உண்டாம்...

குதிரையானது குற்றமில்லாத சுழிகளை உடையதாகும்.

துன்னலரைச் சாடும்...

அத்தகைய ஆற்றல் மிக்க புரவியின் முன்னே மாற்றுப் பகைவர் கிடைப்பாரானால் அக்கணமே கொல்லும்.

பரிவாய்த் தலைசாய்க்கும்...

அது என்ன செய்யுமாம் தெரியுமா? மிக மிக இரக்கத்தோடு தன் தலையைச் சாய்த்துக் காட்டுமாம்! எது? அந்தக் குதிரை.

## காவிரி

ஓடும்...

அவ்வாறே காவிரி நதியானது வேகமாக ஓடக் கூடிய ஆற்றலுடையதாகும்.

சுழி சுத்தம் உண்டாம்...

காவிரியும் கருத்தள்ளும் நீர்ச் சுழிகள் பலவற்றால் காண் போரது உள்ளத்தை யள்ளிக் கொண்டு ஓடும்.

துன்னலரைச் சாடும்...

அவ்வாறே காவிரியும் சுழலில் சிக்கிய மலர்களைச்சாடி இழுத்துச்செல்லும்.

பரிவாய் தலைசாய்க்கும்...

அது போன்ற காவிரியும் மாந்தரனைவரும் நீர் வேட்கை கொள்ளும்போது தலை சாய்த்து, 'வாடா, தம்பி; குடித்துப் போடா தம்பி!' எனச் சொல்லுவது போல பணிவோடு தலைச்சாய்ந்து ஓடுமாம். ஆடவரைக் காணும் போது நாணித் தலைசாய்த்துக் கொண்டு தமிழ்ப் பெண் போல ஓடும் என்று பொருள் கொண்டாலும் தவறில்லை.

இப்படி ஒப்புமைப் படுத்தி விட்டு,—நாடறியத் தேடு புகழான் திருமலைராயன் "வரையில் ஆடுபரி காவிரியாமே," என்று முடிக்கிருன். எல்லோருடைய மனக் கண்களுக்கும் தெரியும் வண்ணம் புகழைத் தேடிக் கொண்டுள்ள திருமலைராயன் மலையின்கண் வாழ்கின்ற, 'ஆடுபரி' 'காவிரியாமே', அதாவது காவிரிக்குச் சரியாக இயங்கக் கூடியதாம்! என்ன அமைப்பு?! 'தலைசாய்க்கும்...' என்ற சொல்லில் தான் எத்துணை குழைவு? நகைச் சுவை!

காவிரித் தாய் தன் தலையைச் சாய்த்து கொடுப்பாளாம்; குதிரையும் அவ்வாரும்!—இவ்வாறு கூற காளமேகத்தை விட வேறு யாருளர்? பரி+வாய்=பரிவாய் என்று ஆயிற்று.

பரி—குதிரை; வாய்—குதிரையின் வாய்; அவ்வாய்க்கு இடையே அமைத்துள்ள தலையை அது அசைத்துக் காட்டு மாம்! காவிரியும் பரிவாய் (பண்புத்தொகை) தலைசாய்த்து ஓடுமாம். அஃது எப்படி இருக்கிறதாம் தெரியுமா? நாணித் தலைசாய்த்துக் கொள்ளும் தமிழணங்கைப் போல் உள்ளதாம்! என்ன திறன்; அறிவின் கூர்மை தான் என்னே!

மலையை விட்டு இறங்கி வருகிறான், காளமேகம்! அவன் கண்களுக்கு நெற்களஞ்சியம் தென்படுகின்றது. இதற்கு முன்னே அவனால் போர்க் களத்தில் காணப்பட்ட களிறின் நினைவு வருகிறது. உடனே, அவன் கற்பனைத் திறனுக்கு முன்னே இரண்டும் ஒரு சேர இணைகிறது.

வாரிக் களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்
போரிற் சிறந்து பொலிவாகும் - சீருற்ற
செக்கோல மேனித் திருமலைரா யன்வரையில்
வைக்கோலு மால்யானை யாம்.

## வைக்கோல்

**வாரிக் களத்தடிக்கும்...**

வயலிலிருந்து கொண்டு வந்து நெற் களத்தில் ஓங்கி அடிப்பார்கள்; எதை? வைக்கோலை.

**வந்துபின்பு கோட்டை புகும்...**

அவ்வாறு அடிக்கப்பட்ட வைக்கோல் புரியாகத் திரிக்கப் பட்டு, நெற்களஞ்சியத்தைப் பாதுகாக்கும் பொருட்டு அரணாக (கோட்டையாக) விளங்கும்.

**போரிற் சிறந்தது பொலிவாகும்...**

போர் போல் குவிக்கப் பட்டுள்ள நெல் மணிகளுக் கிடையே பொலிவோடு—(அழகோடு) திகழும்; மலை போலத் தோற்றஞ் செய்யும்.

## யானை

**வாரிக் களத்தடிக்கும்...**

யானையும் மாற்று முகாமினரை நிலத்திற்கு இழுத்து வந்து தன் தும்பிக்கையால் ஓங்கி அடிக்கும்.

வந்துபின்பு கோட்டை புகும்...

களத்திலே விளையாடிய களிருனது, போர் முடித்தவுடன் தம் மன்னரின் அரணுகத் துலங்கும் கோட்டையில் வந்து புகும்...

போரிற் சிறந்து பொலிவாகும்...

அணிதேர் புரவி, ஆட்பெரும் படை போன்றவைகளைக் காட்டிலும் போரிலே பொலிவோடு இருக்கும்; களிறு, தன் கம்பீரமான தோற்றத்தைப் பிறருக்கு எடுத்துக் காட்டும்.

இதுவே பாட்டுக்குள் அடங்கிய இரு பொருள்! நமக்கெல்லாம் வைக்கோலைப் பற்றித் தெரியும். அதை ஒரு பெரும் பொருளாக நாம் கொள்வதில்லை. ஆனுல் அப்படி நம்மால் அலட்சியமாகக் கருதப்படும் ஒன்றைத் தான் பெரிதாக்கிக் காட்டியுள்ளான். யானைக்கு ஈடாகவும் தீட்டியுள்ளான். ஒப்புமையில் தான் என்ன நயம்!

சிறப்பான புகழையுங், கண்டவரனைவரும் காதல் கொள்ளத்தக்க மேனியையும் பெற்றுள்ள திருமலைராயன் மலையின்கண் அல்லவா, இக்காட்சி! அதனுல் தான்,— சீர்உற்ற செக்கோல மேனித் திருமலைரா யன்வரையில் வைக் கோலும் மால்யானையாம்!' என்ருன் போல இருக்கிறது! 'வைக்கோலும் மால்யானைக்கு' ஈடாகும் என்பதில் என்ன அழகான பொருள் அமைந்திருக்கிறது?

இதில் 'வந்துபின்பு கோட்டை புகும்' என்ற வரியில் தான் நகைச் சுவை நின்று நம்மையெல்லாம் நகைக்கவைக்கின்றது அல்லவா?! நெற்களத்திலிருந்து வந்த வைக்கோல் புரி யானது, நெல்மணிகளுக்குப் பாதுகாப்பாகத் துலங்குமாம்; கோட்டைபோல் காட்சி செய்யுமாம்! இன்னெரு பொருளையும் காணலாம். அடித்ததால் தரையில் விழுந்த நெல்மணி களானவை. போரிற்சிறந்து, பொலிவோடு வந்துற்ற படை வீரர்களுக்கு, உணவாக அமைய கோட்டைக்குள் புகுமாம்! எனவேதான் 'வந்து, பின்பு, கோட்டைக்குள் புகும்' என நயம்பட சொற்களை அமைத்துள்ளார்.

அடுத்த பாடல்!

பாம்புக்கும் எள்ளுக்கும் பொருத்தி வைத்துக் காட்டும் அழகு! நாமெல்லாம் 'பாம்புக்கும் எள்ளுக்கும் எப்படி ஒப்புமை கூறமுடியும்?' என்று கருதுவோம். காள மேகமோ, 'அறிவுடையார் எல்லாம் உடையார்!' என்ற வள்ளுவர் மணிமொழிக்கொப்ப இனிப்போடு வழங்கியுள்ளான்.

3. ஆடிக் குடத்தடையு மாடும்போ தேஇரையும்
மூடித் திறக்கின் முகக்காட்டுப்—ஓடிமண்டை
பற்றிற் பரபரெனும் பாரிற்பிண் ணாக்குமுண்டாம்
உற்றிடுபாம் பெள்ளெனவே யோது.

## பாம்பு

ஆடிக்குடத்தடையும்...

பாம்பானது படமெடுத்து ஆடியபடி குடத்திற்குள், அல்லது பெட்டிக்குள் புகுந்து கொள்ளும்.

ஆடும்போதே இரையும்...

பாம்பு, படமெடுத்து ஆடும் போது சீத்து சீத்தென்று இரையும்!

மூடித்திறத்தின் முகங்காட்டும்...

மூடப்பட்ட பாம்பை திரும்பவும் பார்க்கவேண்டு மென்று யாரேனும் மேல் மூடியை எடுத்தால், முதலில் தன் முகத்தைத் தான் காட்டும்.

ஓடிமண்டைபற்றில்

மனிதனுடைய உடலில் தனது நச்சுப் பற்களால் தீண்டினுல் என்ன செய்யும் தெரியுமா? ஓடுமாம்! எங்கே? இரத்தத்திற்குள்! பின்னர் மண்டைக்குள் நுழையுமாம்...அவ்வாறு புகுந்தவுடன்...

பரபரெனும்...

ஒருவித உணர்ச்சி உண்டாகும்.

பிள்நாக்கு உண்டாம்...

பாம்பிற்கு பிளவுபட்ட நாக்கும் இருக்கிறதாம்.

## எள்ளு

ஆடிக்குடத்தடையும்...

எள்ளும் செக்குக்குள் அகப்பட்டு ஆடியபின் குடத்திற்குள் நுழைந்து கொள்ளும்.

ஆடும்போதே இரையும்...

அதுபோலவே செக்குக்குள் அகப்பட்டு ஆடும் எள்ளானது இரைச்சலிடும்; ஒருவித ஓசையை வெளிக்காட்டும்.

மூடித் திறக்கின் முகங்காட்டும்...

குடத்திற்குள் உள்ள எள்ளெண்ணெயைப் பார்க்க விரும்பினுல், அதன் மீதிலுள்ள மூடியை எடுக்க வேண்டும். எடுத்தவுடன் என்ன தோன்றும்? நம் முகத்தை—நமக்கே காட்டும்.

ஓடிமண்டை பற்றில்...

எள்ளெண்ணெயைத் தலையில் ஊற்றித் தேய்த்தால் ஒரு விதக் குளிர்ச்சியைத் தோற்றுவிக்கும்; சூட்டைக் குறைக்கும்.

பரபரெனும்...

தலையில் தேய்த்த சில விநாடிக்குள் ஒருவகையான உணர்ச்சி பிறக்கும்.

பிண்ணுக்கும் உண்டாம்...

எள்ளிலிருந்து எண்ணெய் எடுக்கப்பட்டவுடன் கழிவுப் பொருளாகப் பிண்ணுக்கு விளங்கும்.

இவ்வளவையும் மூன்று வரிக்குள் முழுக்கக் காட்டிவிட்டு, 'உற்றிடுபாம் பெள்ளெனவே யோது' என்று முடித்துள்ளார், காளமேகப் புலவர். 'இதனுல் இது பொருந்தி யுள்ளது!' என, யாருக்கோ சொல்லும் முறையில் நமக்கு விளக்க மாக்கி யுள்ளார்.

இவ் வெண் பாவில் நகைச்சுவைக் கென்று அமைந்துள்ளது, மூடித் திறக்கின் முகக்காட்டும்' என்பதாகும். அப் பட்டமான எண்ணெயைப் பாருங்கள். அதில் முகம் தெரியும். 'முகம்காட்டும் '—என்ற அமைப்பலிருந்து, அந்நேரத்தில்

அதைத் திறந்து பார்ப்போரின் முகச்சாயலை அப்படியே—அவருக்கேத் திருப்பிக்காட்டும். இந்த நகைச் சுவைக்கு ஈடாக 'பாம்பின் தலை'யைப் பொருத்தி வைத்துள்ளார்.

சுவைக்குச் சுவை!

காளமேகத்தின் புலமைக்கு எத்தனையோ எடுத்துக் காட்டுகள்! அவற்றுள் ஒன்றுகத்தான், பனைமரத்திற்கும் பரத்தைக்கும் உள்ள ஒற்றுமை நமக்குத் தெள்ளத்தெளிய தெரியவைக்கிறது. கீழ்வரும் பாடலானது விலைமகளின் நிலையைக் குறித்தது.

4- கட்டித் தழுவதலாற் கால்சேர வேறுதலால்
எட்டிப் பன்னாடை இழுத்தலால் முட்டப்போய்
ஆசைவாய்க் கள்ளை யருந்துதலால் அப்பனையும்
வேசையென லாமே விரைந்து.

## பனைமரம்

கட்டித் தழுவுதலால்—

கள்ளைக் குடிக்க வேட்கை கொள்வோர், பனைமரத்தைக் கட்டித் தழுவியபடி ஏறுவர்.

கால் சேர ஏறுதலால்—

மரத்தின் மீது ஏறும்போது இருகால்களும் ஒரு சேரப் பொருந்தி இருக்கும்.

எட்டிப் பன்னாடை (இ)ழுத்தலால்...

மரத்தின் மீது ஏறி, அருகாமையில் செல்லும் எவரும் பாளைச் செருவலை எட்டி இழுந்துக் கட்டுவர்.

முட்டப் போய்...

கள்ளை அருந்த அருகில் சென்று.

ஆசைவாய்...

மதுவருந்த விருப்பங் கொண்டு.

கள்ளை அருந்துதலால்—

அந்தக் கள்ளைக் குடிப்பதால் வேட்கை நிறை வேற்றிக் கொள்ளவேண்டுமென்ற ஒரே எண்ணத்தால், மனதாரச் சுவைப்பதால்.

## பரத்தை

கட்டித் தழுவுதலால்...

பரத்தையிடம் இன்பங் காண விழைவோர், அவளை இறுகக் கட்டித் தழுவிக் கொள்வர்.

கால் சேர ஏறுதலால்...

அவளிடம் இன்பங்காணும் போது இருகால்களும் ஒரு சேர இணைந்து நிற்கும்.

எட்டிப் பன்னாடை (இ)ழுத்தலால்—

காசு பறிப்பதில் கண்ணோட்டம் செலுத்து கின்ற கணிகை தன்னோடு கொஞ்ச வந்தவனுடைய ஆடையைப் பிடித் திழுப்பாள்.

முட்டப்போய்—

அவளோடு இன்பம் பருகக் கருதிச் செல்வோர், அருகில் சென்று.

ஆசை வாய்க்...

ஆசை வயப்பட்டு, அவளது வாயில் ஊறுகின்ற இன்ப நீரை விரும்பி.

கள்ளை அருந்துதலால்...

கள்ளையொத்தப் போதை நீரைப் பலமுறை பருகித் தீர்க்க விரைந்து துடிதுடித்துச் செல்லுவதால்.

ஆகவே, 'அப்பனையும்; வேசையெனலாமே விரைந்து' என, முடிக்கிருன். பனையைப்போலவே பரத்தையும் இருப்பதால் ஒன்றெனக் கூறலாமென்று முடிக்கிருன்.

இந்தப் பாடலில் நகைச்சுவையும், விலைமகளிர் குண நலனும், சிறப்பாகவும் விறுவிறுப்பாகவும் அமைந்துள்ளது. பனையும் வேசையும் ஒன்றென்று விரைந்து சொல்லலாமென் பது இப்பாட்டின்கண் அமைந்துள்ள இறுதிக் குறிப்பு.

'எட்டிப் பன்னாடை' இழுப்பதால், பனைமரத்திலுள்ள கள்ளைச் சுவைப்பதற்கு வேட்கை மிகும், அதுபோலவே வேசியும், தன்னிடத்திலே இன்பசுகம் அனுபவிப்பதற்கு வந்த வனுடைய மேலாடையைச் 'சட்'டென்று இழுப்பாள் அப்

போதுதான் அவனுக்கு அவள் மீது அதிக ஆசையும் காசைப் பறிப்பதற்கு தக்க வழியும் கிடைக்குமென்பது அவள் கருத்து. சிலர், 'எட்டிப் பன்னுடை இழுத்தலால்' என்ற வரிக்கு, அவளுடைய பல்வகையான அழகோடு விளங்கும் ஆடையை, செல்லும் ஆடவன் இழுத்து, இன்பங் காண விழைவானென்றும் கூறுவர். எது எப்படியானாலும் 'எட்டிப் பன்னுடை' என்ற இருசொல்லும் நகைச்சுவைக்குரியது. அதுமட்டும் உண்மை.

வேசியின் வேட்கை!

பனைமரத்தின் மீது ஏறி கள்ளைக் குடிக்கக் கருதும் மனிதனின் மனம்!—இவ்விரண்டும் இருவகையாக, இருந்தாலும் பொருள் ஒன்றே. காசுக்கு வருகின்ற வேசிக்கு எதையும் தாங்கிக் கொள்ளும் இதயம் உண்டு. ஒரே வேளையில் அவளுக்கு இருவகை இன்பம். ஒன்று தனக்குள்ள வேட்கை; மற்றொன்று காசு. என்னே திறன்!

இந்தத் திறனுக்கு மெருகேற்றும் வண்ணம் மேலும் சில சிலேடைப் பாடல்கள் :—

தென்னைக்கும் பரத்தைக்கும்—இந்த இரண்டிற்கும் பெயரளவில் வேற்றுமையே யொழிய குணநலனில் அல்ல வென்பது இனிவரும் பாடலால் தெரியவரும்.

5. பாரத் தலைவிரிக்கும் பன்னுடை மேற்சுற்றும்
சோர விளநீர் சுமந்திருக்கும்—நேரேமேல்
ஏறியிறங்கவே யின்பமாம் தென்ன மரம்
கூறுங் கணிகையென்றே கொள்.

## தென்னை மரம்

**பாரத்தலை விரிக்கும்...**

மரத்தின் உச்சியிலே நாற்புறமும் ஓலைகள் பரந்து இருக்கும்.

**பன்னுடை மேல் சுற்றும்...**

அதன்மீது பரவலாகச் செருவல் (பன்னுடை) சூழ்ந்திருக்கும்,

சோர இளநீர் சுமந்திருக்கும்...

ஓலைகளால் மறைக்கப்பட்டு, சோர்ந்த நிலையில் இளநீர் இருக்கும். அக்காயின் பாரம் தாங்கொணுத வகையில் காட்சியளிக்கும்.

நேரே மேல் ஏறி இறங்கவே இன்பமாம்...

மரத்தின் அடியிலிருந்து முடிவரையில் ஏறி இறங்குவதற்கு இன்பமாகவே இருக்கும்.

## பரத்தை (கணிகை)

பாரத்தலை விரிக்கும்...

பரத்தையின் தலையிலுள்ள கூந்தலானது நெடுகத் தொங்கிப் பரவலாக இருக்கும்.

பன்னுடை மேல் சுற்றும்...

ஆடவர் பார்த்து ஆசை கொள்ளும் அளவில் அழகான உடைகளை உடலின் மீது சுற்றிக் கொண்டிருப்பாள்.

சோர இளநீர் சுமந்திருக்கும்...

இடைகுறுகிப் போகத்தக்க அளவில்—சோர்வு கொள்ளும் வகையில் கொங்கை பெருத்திருக்கும்.

நேரே மேல் ஏறி இறங்கவே இன்பமாம்...

அவளின் சேர்க்கைப் பேரின்பந்தரும்

எனவே, தென்னமரம் கூறுங் கணிகையென்றே கொள்' எனச் சொல்லியுள்ளான். தென்னைமரமானது பரத்தைக்குச் சமமாகும் என்பதற்கு எத்துணை விளக்கம் பார்த்தீரா? 'நேரே மேல் ஏறி இறங்கவே இன்பமாம்!' என்ற வரிக்குள் அவன் அனுபவித்துக் கண்ட கருப்பொருள் விளங்குகிறது! பெண் இன்பம் கொண்டது உண்மை என்பது புரிகிறது! ஆனல்?

தென்னைமரத்தின் மீது இறங்கி இருப்பானே? இருக்கும், இருக்கும்! 'இல்லையென்ருல், 'இதுவும் அதுவே' என்பானு? காளமேகமென்ன கொக்கா? கொக்கென்று நினைத்தக் கொங்கணவனு அவன்? இல்லை, இல்லை! காமுகனுக இருந்திருப்பானே?! சேச்சே! இருக்கவே, இருக்காது! காமுகருடை

மனதை அறிந்தவனாக இருந்திருப்பான்!! அதனால்தான் பச்சையாகப் பாடிவைத்திருக்கிறான். இப்படிப் பாடி இருப்பதில், 'பன்னாடை மேற்சுற்றும்' என்ற இரு சொற்களில்தான் அலங்காரமும் நகைச்சுவையும் ஒருங்கே உள்ளன.

தென்னமரத்தின் மேலே பன்னாடை சுற்றிக்கொண்டிருக்கும்; கணிகையும் தன் உடலின் மீது பலநிறப்பட்ட ஆடையை அணிந்திருப்பாள். இந்த இரண்டில் தென்னை மரம் ஆடை அணிந்து கொண்டிருப்பதாகச் சொல்லியுள்ளானே, அதில்தான் நகைச்சுவை!

காளமேகம், பலே பேர்வழியாகத்தான் இருக்கவேண்டும். கணிகையரின் கூடாரத்தில்தான் அவனது முற்றுகை இருந்திருக்கவேண்டும். இருந்தான் என்பதற்கு கதை உண்டு; அதிகமாகத் தொடர்பு கொண்டிருந்திருப்பான் என்பதற்கு அவனது பாடல்களே போதிய சான்று.

அப்பப்பா! விலைமகளிரின் மானத்தையே விலைக்கு வாங்கி இருக்கிறான். வைப்பதும் எடுப்பதும், உள்ளத்தைத் தைப்பதும் அவனது வேடிக்கைக் காட்சியாக இருந்திருக்க வேண்டும். 'ஊ...ம்! மேலும் செல்லுவோம்! அப்படிச் செல்லும்போது வெற்றிலைக்கும் விலைமகளுக்கும் ஒற்றுமைபடுத்தியுள்ள பாடலே நம் கண்ணுக்குத் தெரிகிறது. இதையும் பார்ப்போம்! அவன்தான் வரிக்கு வரி வேடிக்கை காட்டுகிறானே!

6. கொள்ளுகையா னீரிற் குளிக்கையான் மேலேறிக்
கிள்ளுகையாற் கட்டிக் கிடக்கையால் - தெள்ளுபுகழ்ச்
செற்றலரை வென்ற திருமலை ராயன்வரையில்
வெற்றிலையும் வேசை யாமே!

## வெற்றிலை

**கொள்ளுகையால்...**

வெற்றிலையானது பாய்ந்துவரும் நீரை உணர்வாக உட்கொண்டு செழிப்போடு வளர்வதால்.

**நீரில் குளிக்கையால்...**

அவ்வெற்றிலையைக் கொய்வோர், அதை நீரில் குளிப்பாட்டுவதால்.

மேல் ஏறிக் கிள்ளுகையால்...

வெற்றிலையின் மேலேயுள்ள காம்பைக் கிள்ளிச் சுவைப்பதால்.

கட்டிக் கிடக்கையால்

விற்பனைக்காக கட்டு கட்டாகக் கட்டி, தனித்தனியாக வைத்திருப்பதால்.

## விலைமகள்

கொள்ளுகையால்...

விலைமகள் பிறர் தரும் பணத்தால் வளர்ந்து. மேன்மேலும் பணங்கொண்டு வருவோரைத் தன் இருகைகளால் வரவேற்பதால்.

நீரில் குளிக்கையால்...

அவரோடு சேர வருவோர் இன்பநீரில் குளிப்பதால்.

மேல் ஏறிக் கிள்ளுகையால்...

விலைமகளின் மார்பகத்தில் அழகாக அமைந்துள்ள முலைக் காம்பை, மெல்லிய விரலால் கிள்ளிச் சுவைப்பதால்.

கட்டிக் கிடக்கையால்...

இருவருமே படுக்கையில் கட்டிப் புரளுவதால்,

வெற்றிலையும் வேசை யாமே" என்று முடிக்கிறான். இந்தக் காட்சியை எங்கு கண்டானும் தெரியுமா? பகைவர்களை வென்று, வாகைமாலை சூடி, வெற்றிக்கொடி நாட்டும் திருமலை ராயன் மலையின்கண்தான்! அதற்காகவே 'செற்றலரை வென்ற திருமலைராயன்வரையில்' என்றதொரு வரியை, மூன்றாவது அடியில் பொருத்தி வைத்துள்ளான்.

'வெற்றிலைதானே!' என, அலட்சியமாக நம்மால் நினைக்கப்படுவதுதான் அவனுக்குப் பெரிதாகத் தெரிந்துள்ளது. 'சிறு துரும்பும் பல் குத்த உதவும்' என்பதை நினைத்துக் கொண்டுதான் வெற்றிலையைப் பயன்படுத்தி யுள்ளான். எதற்குப் பயன்படுத்தியுள்ளான்? விலைமகளுக்கு! இதற்கும் அவளுக்கும் வேற்றுமையே இல்லை யென்பதற்குரிய ஆதாரங்களை அடுக்கடுக்காகக் காட்டியுள்ளான்.

அவன் அறிவைப் புகழவேண்டுமானுல் காலம் போதாது; இல்லையென்ருல், 'கட்டிக் கிடக்கையால்' என்பதை நகைச் சுவையோடு அமைத்திருப்பானு ? கட்டிப்புரளும் கன்னி கைக்கும், கட்டுக் கட்டாகக் கட்டிவைக்கப் பட்டுள்ள வெற்றி லைக்கும் முடிபோட்டு வைத்திருப்பானு? இப்போது விலைமகளுக் கும் குரங்குக்கும் முடிச்சுப்போட்டு வைப்பதைப் பாரீர்? வாரீர், அந்தக் காட்சிக்கு !

7. ஒட்டங்கடியதானுள்ளவரை மேவுதலால்
சேட்டை யெவரிடத்துஞ் செய்தலால்—நாட்டமுடன்
காத்திரத்திற் குட்டியுறக் கட்டுதலாற் றெட்டுதலால்
கூத்தியர்க்கு நேராங் குரங்கு.

## விலைமகள்

ஒட்டங் கடியதால்...

ஆடவனுல் உதடு கடிக்கப் படுவதால்

உள்ளவரை மேவுதலால்...

பணமுள்ளவரை நாடிச் சேர்வதால்

சேட்டை எவரிடத்தும் செய்தலால்...

பொதுவுடமை எண்ணத்தோடு எல்லோரிடத்திலும் சைகை செய்து விளையாடுவதால்

நாட்டமுடன்...

விருப்பமுடன்

காத்திரத்தில்..

தன்னை வந்து அடைந்தவருடைய தேகத்தின் மீது.

குட்டியுறக் கட்டுதலால்...

தன்னுடைய மார்பகத்தில் இணைத்து, அணைத்துக் கட்டித் தழுவுதலால்

தெட்டுதலால்....

தன்னை நாடி வந்தவனிடத்திலுள்ள காசைப் பறிக்கச் சூழ்ச்சி செய்வதால்

## குரங்கு

ஒட்டங் கடியதால்—

குரங்கானது விரைவாக ஓடும் ஆற்றல் பெற்றுள்ளதால்

உள்ளவரை மேவுதலால்—

மலையை நோக்கி ஏறுவதால்

சேட்டை எவரிடத்தும் செய்தலால்—

எல்லோரிடத்திலும் குறும்புத் தனமான சில சைகைகள் காட்டுவதால் (குறும்புத்தனமாக விளையாடுவதால்).

நாட்டமுடன்—

விருப்பமுடன்

காத்திரத்தில்—

தன்னுடைய உடலின் மீது

குட்டியுறக் கட்டுதலால்—

தான்பெற்ற குழந்தையை மார்பகத்தில் இணைத்துவைத்துக் கொள்ளுவதால்

தெட்டுதலால்—

குரங்கானது, சமயம் பார்த்துப் பிறர் கையில் உள்ள பொருளைக் கவர்ந்து செல்லச் சூழ்ச்சி முறையைக் கைக் கொள்ளுவதால்

'கூத்தியர்க்கு நேராங் குரங்கு" எனப் பாடலின் பொருள் முடிகிறது.

கூத்தியர்க்குச் சரியான நிலையில் விளங்குவது குரங்கு என்பதற்கு, எடுத்துக் காட்டிய சான்றுகள், கவித்திறனுக்கோர் ஊன்றுகோல் அல்லவா? ஓடுதல்; நாடுதல்; விருப்பம் கொள்ளுதல்; சூழ்ச்சி செய்தல்; அதற்காகவே இணைந்தவாறு இருத்தல்—இத்தனையும் பொதுச் சொத்தாக விளங்கும் விலைமகளிருக்கு உடமை. அவர்களைப் போன்றவைகளே குரங்குகளும் என்பதற்கு ஓடுதல், மலையின் மீது ஏறுதல், குறும்பு செய்தல், விருப்பமுறல், தன் குழந்தையை அணைத்துக் கொள்ளல், பிறர் பொருளைக்கவர சமயம் பார்த்தல்—ஆக, அத்தனையும் குரங்கின்பகுதி, 'சேட்டை எவரிடத்துஞ் செய்தலால்' என்பது நகைச்சுவைக் குரியது.

குரங்கை நோக்கினுல் காளமேகத்தின் எடுத்துக் காட்டிற்குத் தக்க சான்ருகும். நம்மைக் கண்டால் இல்லாத வேடிக்கை யெல்லாம் காட்டும்! விலைமகளும் அப்படித்தான்! பணமுள்ளவன் என்ற கண்ணேட்டம் விழுந்து விட்டால், தன்னை அழகு படுத்திக் கொண்டு நிற்பாள். தன் வலைக்குள் சிக்க வைக்கப் பல்வகையான வேடிக்கைகளை—குறும்புகளைச் செய்வாள். அப்படிச் செய்ததைக் கண்டு தான் விலை மகளுக்கும், மரத்திற்கு மரம் தாவும் குரங்குக்கும் ஒற்றுமைப் படுத்திப் போயுள்ளான். காளமேகம் தான் அனுபவசாலி யாயிற்றே! இல்லையென்ருல் இப்படியெல்லாம் கவி பாடி இருப்பாை? இருந்தாலும் உண்மை இருக்கிறது.

இந்தப் பாடல்களை யெல்லாம் நோக்கும்போது பல பெண்கள், காளமேகத்தைப் பழி வாங்கி இருக்க வேண்டு மென்ற எண்ணமே எழுகிறது; இல்லையென்ருல் இப்படியா புனைந்திருப்பான்? அதுவும் அல்குல் தாை அவனுக்குக் கிடைத்திருக்கும்? சேச்சே! ஏதோ ஒரு விபத்து அவன் வாழ்க்கைக்குள் புகுந்து விளையாடி இருக்கிறது. ஆகையினுல் தான் இப்படியெல்லாம் எழுதி வைத்துப் போயுள்ளான்.

இனி, சிலேடைப் பொருளமைந்த பாடல்களுள் இறுதி யொன்றைத் தொட்டு விட்டு, அவன் காட்டியுள்ள சில கோணங்களை ஆராயப் புறப்படுவோம். அந்தப் பயணம் தொடங்குவதற்கு முன்னே இந்தப் பயணத்தை முடிப்போம். இப்போது கண்ணுடிக்கும் மன்னனுக்கும் பொருத்திக் காட்டி யுள்ள பாடலுக்கு வருகிருேம்; இதோ, பாடல் :—

8. யாவருக்கும் ரஞ்சனைசெய்தி யாவருக்கு மவ்வவராய்ப்
பாவனையாய்த் தீதகலப் பார்த்தலால்—மேவும்
எதிரியைத்தன் னுள்ளாக்கி யேற்ற ரசத்தால்
சதிருறலா லாடியரசாம்.

## கண்ணுடி

யாவருக்கும் ரஞ்சனை செய்து—

அனைவரையும் ஆனந்தத்தில் மூழ்க வைத்து

யாவருக்கும் அவ்வவராய்ப் பாவனையாய்—

தன் முன்னே நிற்கின்றவர்களுடைய முகங்களை, அவரவருக்குரிய அளவில் பிரதிபலித்துக் காட்டி.

தீதகல—

நிற்பவரின் முகத்திலுள்ள மாசு நீங்க—பொலிவு தோன்ற

பார்த்தலால்—

பார்ப்பதற்குரிய முறையிலே ஆடிக் காட்டுவதால்

மேவும் எதிரியை—

தன் முன்னே வந்து நின்றிருப்போரை

தன்னுள்ளாக்கி—

தன்னுள்ளே அடக்கிக் காட்டி

ஏற்றரசத்தால்—

தன் பின்னால் பூசி மெழுகப்பட்ட பாதரசத்தால்

சதிர் உறலால்—

சிறப்பு பொருந்திக் காணப் படுவதால்

## மன்னன்

யாவருக்கும் ரஞ்சனை செய்து—

எல்லா மக்களிடத்தும் அன்பு வைத்து, அவர்களின் உள்ளமெல்லாம் குளிரத்தக்க வகையிலே நற்காரியங்களைச் செய்து இன்பத்தில் மூழ்க வைத்து

யாவருக்கும் அவ்வவராய் பாவனையாய்—

தன்னை நாடி வருவோரின் மனநிலைக்கேற்ப தன்னுடைய தோற்றத்தைக் காட்டி

தீது அகல—

வந்தவரின் குறைகளைக் கவனித்து, அக்குறைகள், அவர்களை விட்டு விலகும்படி

பார்த்தலால்—

தன் குடையின் கீழ் உள்ள மக்களின் குறைகளைக் கவனிப்பதால்

மேவும் எதிரியை—

தன்னை எதிர்த்து நிற்கும் பகைவனை

தன்னுள்ளாக்கி—

தன் கீழ் அடங்கி ஒழுகித் தலை வணிங்கி நிற்கும்படிச் செய்து

ஏற்றரசத்தால்—

நவரசப் பொருள்களால் சுகம் அனுபவித்து

சதிர் உறலால்—

சிறப்பான குண நலன்களோடு பொருந்தி இருப்பதால் கண்ணுடிக்கு ஒப்பாக அரசனும் ஆவான்''—என்பது பாட்டின் முடிந்த முடிபாகத் துலங்குகிறது. 'அவ்வவராய்'—என்ற சொல்லுக்குள் கொல்லெனச் சிரித்து மகிழத்தக்க அளவில் பொருள் அமைந்துள்ளது. அவரவருவடய தோற்றத்தைக் காண்பிக்குமாம், கண்ணுடி; மன்னனும் தன் முன்னே வந்துள்ளவரின் தோற்றத்தைக் கண்டு விடுவானும்! இந்த இரண்டையும் இணைத்து வைத்துக் காட்டியுள்ளான் காளமேகம்!

காள மேகத்தின் புலமைக்கு எத்தனையோ மேற்கோள் களைக் காட்ட முடியும். குறிப்பாக,

9. ஒன்றிரண்டு மூன்றுநான் கைந்தாறு ஏழெட்டு
ஒன்பது பத்துப் பதினென் றுபன்னி
ரண்டுபதின் மூன்றுபதி நான்குபதி னைந்துபதி
னாறுபதி னேழ்பதி னெட்டு.

எனச் சுருக்கமாக முடித்துள்ள வெண்பாவை நோக்கும்போது புலமை வெளிப் படுகிறது. 'ஒன்றிரண்டு மூன்று எனச் சொல்வதற்கு எளிமை தான்! அதுவே வெண்பாவாகக் காட்சி தரும்போது நம்மை நகைச் சுவை உலகத்திற்கே அது அழைத்துச் செல்லுகிறது.

காளமேகத்தின் கவித் திறமைக்கு.

10. ஒ, கா, மா, வீ, தோ, வுரைப்பன் டு, டு, டு, டு, டு,
நாகார் குடந்தை நகர்க்கதிபர் வாகாய்
எடுப்பர் நடமிடுவ ரேறுவ ரன்பர்க்குக்
கொடுப்ப ரணிவ குழைக்கு.

என்ற வெண்பாவே தக்க சான்று.

இதன் பொருள். முதலில் புரிவதற்குச் சற்றுக் கடினமாகத் தோன்றும்; ஆனால் முதல் வரியின் கடைசியிலுள்ள ஐந்து 'டு' வையும் ஓ, கா, மா. வீ, தோ, வோடு சேர்த்தால் நன்கு பொருள் விளங்கும்; அவன் திறமையும் வெளிப் படும். இப்போது பாருங்கள், அப்புலவனின் தெரிந்த அறிவை!

இளைஞர் நிறைந்த இடமாம் குடந்தை; அவ்வூருக்குத் தலையாகவுள்ள திருக்கோயிலுக்குள் தான் சிவன் உள்ளான். அவன் அழகான ஓட்டை வைத்துக் கொண்டு பிச்சை எடுப்பான்! இடுகாட்டிலே நடனமாடுவான்! காளை மீது ஏறுவான்! தன்னைத் துதிக்கும் அன்பருக்கு அருள்புரிவான்! ஒரு செவியில் அணிந்திருப்பதைப போலவே மற்றொரு செவி யிலும் குண்டலத்தை அணிந்திருப்பான்!

இது, பாட்டுக்குள் உள்ள பொருள்! இந்தப் பொருளைப் பற்றி நமக்குக் கவலையில்லை; காளமேகத்தின் நகைச்சுவை பொருந்திய சொல்லின் அமைப்பைத் தான் காண வேண்டும்.

முதல் வரி; ஓ, கா, மா, வீ, தோ, வுரைப்பின் டு, டு, டு, டு, டு, முதலிலுள்ள ஒவ்வொரு எழுத்தோடு இறுதியிலுள்ள 'டு' வைச் சேர்த்தால் ஒவ்வொரு பொருளைக் குறிக்கும்.

ஓ + டு — ஓடு;
கா + டு — காடு;
மா + டு — மாடு;
வீ + டு — வீடு;
தோ + டு — தோடு; இந்த ஐந்தையும் பின் வருகின்ற ஒவ்வொரு சொல்லின் முன் வைத்துப் பார்த்தால் சிவனின் செயல் விளங்கும்!

வாகாய் — அழகாய்!

சிவன் கையிலே ஏந்துவது மண்டை ஓடு; நடனம் ஆடும் இடம் பிணம் சுடும் காடு; ஊர்திலாக (வாகனமாக) ஏறிச் செல்வது காளை மாடு மெய்யன்பர்களுக்கு வழங்குவது முக்தியாகிய வீடு; ஒருகாது குண்டலத்துக்கு மாறுக மறுகாதில் அணிவதோ தோடு; இப்படி அமைத்துத் தந்துள்ள காள மேகத்தை எவ்வாறு புகழ்வது! இப்பாட்டின் முதல் வரியே சிரிப்பிற்குரியது. இல்லையா? 'ஓ. கா, மா, வீ, தோ என்று

தொடங்கி டு டு டு டு டு' என முடித்துள்ளதை நோக்கும் போது யாருக்குத் தான் சிரிப்புவராது? அதோடு, பாட்டுக் குள் நுழைந்து நுணுகிப் பார்த்தால் பெருமானின் திருக் கூத்தைக் 'கிண்டல்' செய்திருப்பதை ஒருவாறு உய்த் துணரலாம்!

அவன் திறனுக்கு மற்று மோர் எடுத்துக் காட்டு! இதுவும் ஆண்டவனை உள்ளடக்கிப் பாடிய பாட்டென்ருலும் கவிக் கூட்டத்தின் ஓட்டத்தில் யாவும் மறந்துவிடுகிறது.

11 அரையின் முடியி லணிமார்பி னெஞ்சில்
தெரிவையிடத் தமர்ந்தான் சேவை—புரையறவே
மானூர் விழியீர் ம, ல, ர. ண வொற்றிற்கும்
ஆனூலா நா, நீ, நூ, நே.

இந்தப் பாட்டு, பெண்ணுக்காகவே எழுதியதாக உள்ளது. முறை அப்படி! அது உண்மைதானு வென்ருல், ஆராய்ச் சிக்கு உரியது போகட்டும்! உள்நோக்கிப் பார்ப்போம்.

மானையொத்த விழியுடையோரே, கேளீர்! கவனமாகக் கேளீர்! சிவனுனவன், தன்னுடைய நெஞ்சிலே பக்தர்களுக் காக அன்பை வைத்துள்ளான்! அவர்களது அன்பையே அதிகமாக விரும்புபவன்! திருமார்பில் அழகான பூணூலை அணிந்து கொண்டிருப்பவன்! முடியின் மீது கங்கையை வைத்திருப்பவன்! அரையின்கண் நாகை (பாம்பை) உடை யாகக் கொண்டவன்! உமாவை இடப்பாகத்தில் அமர்த்தி வைத்துள்ளவன்! குறைகள் நீங்கி காளை மீது அமர்ந்து உள்ளவன்!—இது, பாட்டிலுள்ள கரு!

முதல் இரண்டு வரிகளுக்கும் மூன்ருவது, நான்காவது வரி கள் உயிர்போல் துலங்குகின்றன. எப்படி தெரியுமா? பொரு ளின் அமைப்பாக! இறுதியாகவுள்ள தா, நீ, நூ, நே என்ற ஒவ் வொரு எழுத்தோடும் மூன்ருவது வரியிலுள்ள ம, ல, ர, ண என்கின்ற உயிர் மெய்யெழுத்துக்களை ஒற்றெழுத்துக்களாக்கி (ம், ல், ர்,ண் என மெய்யெழுத்துக்களாக்கி) எதிர்நிரல் நிறை யாக இணைத்துப் பார்த்தால் பொருள் விளங்கிவிடும். நேம்' நூல், நீர், நாண் என்ற சொல்லமைப்பு ஆகும். இவ்வாருன சொல்லமைப்பு முதலிரண்டு வரிகளோடு சேர்த்தால் தெளி

வான பொருள் தெரியும்.

நெஞ்சோடு நேயம் ;
அணிமார்போடு நூல் ;
திருமுடியில் நீர் ;
அரையில் நாண் ;—என்றதொரு விரிவான விளக்கத்தை அளிக்கும்.

'மலரண'எனத்' தொடங்கி, 'நாநீநூநே' என முடித்திருக் முறையில் நகைச்சுவை ததும்புகிறது.—இப்படிப் பாடுவதில் வல்லவனுன காளமேகம், திருச்செங்காட்டின் வழியாக வந்து கொண்டிருக்கிருன்.

அங்கொரு கோயில்! அதுவும் பாழடைந்த கோயில்! அகல்விளக்கிற்குக் கூட பஞ்சம்! அந்தக் கோயிலுக்குள் நுழைகிருன் காளமேகம்! சுற்றுமுற்றும் பார்க்கிருன்! வெறும் இடிந்த சுவரே தெரிகிறது. அப்போது, அவனுக்குப் படித்த நினைவும், ஊரார் பேசிக் கொள்ளும் உரையாடலும் நினை வுக்கு வந்தன.

உடனே, "ஓய், நாதரே! உம்மையொன்று கேட்கிறேன் : ஒழுங்காகப் பதில் சொல்லும், இல்லையென்ருல் என்சொல், உன்னை வெல்லும்; கொல்லும்! நீதிவானைப் போல் நாட்டில் நடித்துக்கொண்டிருப்போரே! நீர் இன்று, இந்தச் செங்காட் டில் வந்து நுழைந்து கொண்டது ஏன்? முன்பொரு காலத் தில் காலனைக் கொன்று, கமானையுங் கொன்று, சிறுத் தொண்டர் பெற்ற பாலனையும் கொன்று பழியைச் சுமந்து கொண்டாயே! அதனுலா? அல்லது பிறர் கண்டால் கொன்று விடுவார்களே என்ற அச்சமா? அதற்காகத்தான் இங்கு வந்து நுழைந்து கொண்டாயா? பலேபேர் வழி ஐயா நீர்! ஆனுலும் நான் உன்னைஅறிந்து கொண்டுவிட்டேன். என்னிடத்தில் உன் கைவரிசை பலன் பெருது!" எனச் சொல்லுகிருன்.

இதோ, பாட்டு; இறைவனுக்கோர் வேட்டு!

12. காலனையுங் காமனையுங் காட்டுசிறுத் தொண்டர்தரு
பாலனையுங் கொன்ற பழிபோமோ—சீலமுடன்
நாட்டிலே வீற்றிருந்த நாதரேநீர் திருச்செங்
காட்டிலே வீற்றிருந்தக் கால்.

“நாட்டிலே இருந்த நாதர், காட்டுக்குள் வந்து புகுந்து கொண்டதென்ன ?” என்பது அவனது கேள்வி. அப்படி, கேள்வி கேட்டுவிட்டு, தனக்குத் தாஞக, காலனையும், காமனையும் திருவெண்காட்டு சிறுத்தொண்டரையும் கொன்ருயே, அதனுல் தான் போலும் !’ என்றதொரு விடையையும் வருவித்துக் கொள்கிருன்.

அங்கிருந்து நேராக வந்து கொண்டிருக்கிருன். வழி நெடுகத் திரள் திரளாக மாந்தர் செல்வதைக்கண்டு, அவர்களனைவரையும் வியப்போடு பார்க்கிருன். ஒரு பெரியவரை அருகில் அழைக்கிருன்.

“ஏங்க...எதுக்கு என்னைக் கூப்பிட்டிங்க ?”

“பெரியவரே ! நீங்களெல்லாம் எங்கு போகிறீர் ?”

“உமக்குத் தெரியாதா செய்தி !”

ஊகூம் ! அதற்காகத்தான் உங்களைக் கூப்பிட்டேன். என்ன செய்தி ?’

“இன்னக்கி காஞ்சிபுரத்திலே...” எனச் சொல்லிக் கொண்டிருக்கையில், “ஏன்...சோறு போடுகிருர்களா ?” எனக் கேட்கிருன்.

“அடடா! சோறல்லப்பா ! காஞ்சிபுரத்திலே இருக்கிற பெருமாள் வீதிவலம் வர்ராரு...அதுவும் மூன்ரும் நாள் உற்சவம் !’

“அதுக்காகத்தான் அனைவரும் போகிருர்களா ?”

“ஆமா, ஆமாம் !” என்று கூறியபடி, அந்தப் பெரியவர் இரண்டடி எடுத்துவைத்தார்.

“பெரியவரே ! உம்மோடு நானும் வருகிறேன் !” என்று சொல்லி, அங்கிருந்து அவர்களோடு வம்பளந்து கொண்டே காஞ்சிபுரத்திற்குப் போய்ச் சேருகிருன்.

அங்கு ஒரே கூட்டம் ! மக்கள் வெள்ளம் ! அவனுக்கே வியப்பு ! உடனே, “பெரியவரே ! நீர் சொன்ன பெருமானைக் காணுேமே!” என்று கேள்வி கேட்டுக் கொண்டிருக்கும்போது தாரை தப்பட்டை சத்தம் அவன் காதுக்குக் கேட்கிறது. திரும்பிப்பார்க்கிருன். பெருமாள் வருகிருர். கருடவாகனத்தின் மீது அமர்ந்து அலங்கார நகை பூட்டிக் கொண்டுவரு

கிருர். காளமேகம் பார்த்தான்! 'கொல்'லெனச் சிரித்தான். அவனைச் சூழ்ந்துள்ளோர் திரும்பினர். குலுங்கி குலுங்கிச் சிரித்தான். அங்கிருந்த அனைவருக்கும் என்னவென்றே தோன்றவில்லை. அந்தப் பெரியவர் மட்டும், "என்னப்பா! ஏன் இப்படிச் சிரிக்கிறே?" என்ருர்,

அதற்கு அவன் "பெரியவரே! கஞ்சிபுரத்தில் இருக்கின்ற இந்தப் பெருமாள் நல்ல பெருமாள்தான் பெரியவரே! அவருக்காக நடைபெறுகின்ற திருவிழாவும் பெருவிழாதான்! இதோ வருகிருரே, இந்தப் பெருமாள் இருக்கிற இடத்திலேயே சும்மா இருக்க முடியாததால் இரங்கத் தக்க வகையிலே பருந் தெடுத்துக் கொண்டு வருகிறது, பார்! ஐயோ, பார்! பார்! பார்!" எனச் சொல்லிச் சொல்லிச் சிரிக்கிருன். அவன் அப்படிச் சொன்னவுடன் அங்கிருந்த அனைவருக்கும் அவன் மீது சீற்றம்! ஆனாலும் காளமேகம் என்று அறிந்து பேசாமல் விட்டு விட்டனர். பெருமாளைப் பருந்தெடுத்துப் போகிறது, பார்! ஐயையோ! பெருமாளைப் பருந்தெடுத்துப் போகிறது" என, அகல வாய்திறந்து சிரிக்கிருன். அவனை யார் என்ன செய்ய முடியும்?

அவன் பெயரே காளமேகமாயிற்றே! பொருள் தெரிந்து கொண்ட நீங்கள், பாட்டையும் அறிந்துகொள்ள வேண்டுமல்லவா? அதற்கு இதோ :

13. பெருமானு நல்ல பெருமா ளவர்தம்
திருநாளு நல்ல திருநாள்—பெருமாள்
இருந்திடத்திற் சும்மா யிராமையினு லேயோ
பருந்தெடுத்துப் போகிறதே பார்!

எல்லோரும் வாருங்கள்! நன்ருகப் பாருங்கள்!! பெருமாளைப் பருந்தெடுத்துக் கொண்டு போவதைப் பாருங்கள்!' என்ற கருத்து அடங்கிய வரியானது நினைத்துச் நினைத்துச் சிரிக்கத் தக்க முறையில் அமைந்திருக்கிறது.

இப்போது தில்லைக்கு வருகிருன்! 'இங்கென்ன சொல்லப் போகிருனே?' என்ற வினுவெழுகிறதல்லவா? உங்கள் வினுவுக்கொத்தபடியே விடையும் வரும். வாருங்கள், தில்லைக்குப் போகலாம்...

காளமேகம் சிதம்பரத்திற்கு வருகிருன்! அன்று ஆண்டவனுக்குப் பிச்சைக்காரன்போல வேடம்போட்டு, பல பேரறியத் தூக்கி வருகின்றனர். அந்தக் காட்சியைப் பார்த்த காளமேகம், "நஞ்சுடைய பாம்பை அணிகலனுக அணிந்துள்ளவரே! தில்லையில் நடனமாடும் நாதரே! இதென்ன கோலம்! இப்படி வருவது கேவலமென்று உனக்குத் தெரியவில்லையா? பிச்சையெடுத்து உணவு உண்ணப் புறப்பட்டு விட்ட பிறகு, உச்சிதமான ஊதுகொம்பு ஏன்? யானை முன்னே செல்லவேண்டிய அவசியமென்ன? கரிய கடல்போலவே முழங்கும் மேளம் ஏன்? தாளம் ஏன்? ராஜாங்கமேன்?" என்று கேள்வி கேட்கிருன்.

14. நச்சரவம் பூண்டதில்லை நாதரே! தேவரீர்
பிச்சையெடுத் துண்ணப் புறப்பட்டும்—உச்சிதமாம்
தாவமேன் குஞ்சரமேன்கார்க்கடல் போன்ருன் முழங்கும்
மேளமேன் ராஜாங்க மேன்?

கோவணங் கட்டிக்கொண்டு வெளியே போகத் துணிந்து விட்டவனுக்கு கழுத்திலே மட்டும் வைர மாலை ஏன்? மாணிக்க மகுடம் எதற்கு என்று யாரும்தான் கேட்பர்; எவரும் அப்படிப் போகின்றவரைப் பார்ப்பர்; கேட்பர். ஆண்டவனையும் அப்படித்தான் காளமேகம் கேட்கிருன். 'பிச்சையெடுக்க வந்த பெம்மானே! இம்மத்தளமும் வரிச்சங்கும் எதற்கு?' என்கிருன். உண்மைதான்!

இன்றுகூட சிவன் கோயிலிலும், திருமால் கோயிலிலும் திருவிழாவின்போது கடவுள்களைப் பிச்சை எடுக்க விடுகின்றனர். அப்படி அவர் பிச்சையெடுக்க வரும்போது தான் ஒரு பணக்காரன் என்பதையே மெய்ப்பிக்கிருர்; மெய்ப்பிக்க வைக்கிருர்கள்! இஃது, ஆண்டவன் கூத்தா அல்லது அந்தணர் கூத்தா என்ற கேள்விக்கு நான் விடைசொல்ல வரவில்லை. நீங்களே விடைகண்டு கொள்ளுங்கள்! இப்படிக் கேட்டானு? கேட்டுவிட்ட பிறகு பதில்லை. உடனே, அங்கிருந்து புறப்பட்டுக் கும்பகோணம் வழியாக வந்து கொண்டிருக்கிருன்.

காளமேகம் வருவதை, ஒரு திருமண வீட்டார் பார்த்து விட்டு எதிர்கொண்டழைத்தனர். வந்தான்; வந்தவன்

இலையின் முன் உட்கார்ந்தான். அவனுக்கெதிரே சோழிய நாட்டானொருவன். அவன் தலையில் குடுமி இருந்தது. அதையும் பார்த்தான். ஆனால் அவனை ஒன்றும் கேட்டுக் கொள்ளவில்லை.

அனைவரும் சாப்பிடத் தொடங்கினர். காளமேகமும் சாப்பிட்டுக்கொண்டிருக்கிறான். அப்போது, அவனெதிரில் அமர்ந்திருந்த சோழியன் குடிமியானது, சாப்பிடும் வேகத்தில் அவிழ்ந்துவிடுகிறது. அவனைப் போலவே காற்றில் அக் குடுமியும் அலைமோதிக்கொண்டிருக்கிறது; அதன் விளைவாக, அவன் சாப்பிடத் தலைசாய்ந்தபோது அவன் இலையில் அக்குடுமி விழுந்து விடுகிறது. உடனே, அந்தச் சோழியன் அதை உதறி முடிபோட முனைகிறான். அவ்வாறு உதறும் போது சோற்றுப் பருக்கையானது காளமேகத்தின் இலையில் விழுந்துவிடுகிறது. அவ்வளவுதான்! காளமேகத்திற்குக் கோபம் வந்துவிடுகிறது. ஆகவே அவனைப் பார்த்து, "ஏ சுருக்கவிழ்ந்த முன்குடுமியை வைத்துள்ள சோழியா! சோற்றுப் பசையைத் தீர்த்துக் கொள்ளாத வாயா! கீழான வனே! கும்பகோணத் திருப்பதியில் அமர்ந்து உள்ள கோட் டானே! நாயே! குரங்கே! இந்தப் பூமியிலே வேறு வேலை யில்லாமல் உன்னைப் பெற்றுப் போட்டுவிட்டுப்போனாளே ஒருத்தி!'' என, கன்னத்தில் அறைவதுபோல் சொல்லிவிட்டு, அவ்விடத்தைவிட்டு அகலுகிறான்.

15. சுருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா சோற்றுப்
பொருக்குலர்ந்த வாயா புலையா - திருக்குடந்தைக்
கோட்டானே! நாயே! குரங்கே! உனையொருத்தி
போட்டாளே வேலையற்றுப் போய்.

அப்படி அவன் வெளிக்கிளம்பியபோது, பலரும் வந்து வணங்கி, மீண்டும் உள்ளே வரும்படி அழைக்கின்றனர். ஆனால் அவனுடைய மனம் சரியில்லாததால் முன்வைத்த கால்களைப் பின்னுக்கு இழுத்துக் கொள்ளாமல் விடைபெற்று நடந்துகொண்டே வருகிறான். எங்கே வருகிறான் தெரியுமா? காஞ்சிபுரத்திற்கு! முன்பு, பலரோடு வந்தான்; இப்போது தனிமையிலே வருகிறான். வழிநெடுக பாக்கள் புனைந்தபடி

வந்து சேருகிறுன்.

அன்று, ஆரும் நாள் திருவிழா! மூன்ரும் நாள் விழாவிற்கு இருந்ததுபோல் அன்றும் மக்கள் வெள்ளம்! அழகிய மங்கையர் ஆயிரமாயிரம்! பழுத்த கிழவர்கள் பல்லாயிரக் கணக்கில்! அவர்களுக்கிடையே பெருமாள்! இக் காட்சியைக் காணுகிருன் காளமேகம்! அப்போது, நின்றிருந்த ஆரணங்கு களைக் கவனிக்கிருன். அவர்களுள் ஒருத்தி,அந்தோ,பரிதாபம்! அவனுக்கு முன்னே அவளிருந்த நிலை!

பெருமாள் மீது போடப்பட்டுள்ள நகைகளைக் கண்டு மோகித்தாளோ என்னவோ தெரியவில்லை! பெருமாளையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள். அதை, அவனும் கவனித் துக் கொண்டே இருந்தான்! அவ்வேளையில், அவள், இடையில் அணிந்திருந்த பட்டாடையானது அவளை அறியா மலேயே மெல்ல நழுவிவிடுகிறது. அதைப் பார்த்து விடுகிருன். உடனே,

18. “எட்டொருமா வெண்காணி மீதே யிருந்தகலைப்
பட்டொருமா நான்மாவிற் பாய்ந்ததே”

எனப்பாடி முடித்துவிடுகிருன்.

இது, எப்படி இருக்கிறது? இப்படி ஏதேனும் நிகழ்ந்தால் ரசிக்கலாம் என்று வருபவன்போலல்லவா தோன்றுகிறது? ஆனல், உண்மை அதுவல்ல! அந்த அளவிற்கு அணங்கு களின் நிலைமை இருக்கிறதென்பதைத் தான் படம்பிடித்துக் காட்டுகிருன்.

அன்றைய மறுநாள்! ஊரைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வரும்போது எலி வாகனத்தின்மேலே பிள்ளையார் வருவதைக் காண்கிருன். அவனுக்கோ சிரிப்பு தாங்கமுடியவில்லை. வாய்விட்டுச் சிரித்துவிடுகிருன். அதன் பிறகு, அந்தப் பிள்ளையாரை வணங்கியபடி நின்றுள்ள பெரியவரை அழைத்து, “பெரியவரே! பருத்த உடலும், மிகுந்த வலிமை யும், மும்மதம் பொழிகின்ற களிற்றினைப் போன்ற முகத்தையு முடைய விநாயகனை எலிகொண்டு போகிறதே ஏன்? இந்தப் பிள்ளையைப் பெற்றதாகச் சொல்லப்படுகின்ற சிவபெருமானின் மழுவாயுதமும், திருமாலின் சக்கரமும், பிரமனுடைய தண்டா

யுதமும் எங்கேனும் பறிபோயிற்ரே? இல்லையென்ருல் இந்த எலி இழுத்துக்கொண்டு போவதைப் பார்த்திருப்பாரோ? சேச்சே! இது, அநியாயம்!'' என, நகைச்சுவையோடு சொல்கிருன். அது கேட்ட பெரியவருக்கோ சொல்லமுடியாத சீற்றம்? ஆனுல், என்ன செய்ய முடியும்? சொல்வதிலும் பொருள் இருக்கத்தானே செய்கிறது? இப்போது அந்தப் பாட்டைப் பாருங்கள்.

16. மூப்பான் மழுவும், முராரிதிருச் சக்கரமும்,
பார்ப்பான் கதையும், பறிபோச்சோ-மாப்பார்
வலிமிகுந்த மும்மதத்து வாரணத்தை ஐயோ!
எலியிழுத்துப் போகின்ற தென்?

'எலி இழுத்துப் போகிறதே என்?' என்ற வரியில் நகைச்சுவையும் கருத்தும் இரண்டறக் கலந்துள்ளன.

இந்த நாட்டிலுள்ள கடவுளுக்கெல்லாம் அமைந்துள்ள குறிகளை நெறியோடும் நகைச்சுவையோடும் காட்டுகின்ற ஆற்றல் வேறு எவருக்கும் இருந்ததில்லை. காளமேகம் ஒருவனுக்கே அந்தத் தனித் திறன் இருந்தது. அடுத்தது, ஆறுமுகக் கடவுளுக்கு!

ஆறுமுகமுடையோனின் அறைக்கு வருகிருன். அவனுக்குச் சொல்லமுடியாத எண்ணங்கள். அப்பப்பா! அவன் மூளைக்குள் பதுங்கி நின்று பாக்களைப் புனையும் அந்த அறிவைத்தான் சொல்லவேண்டும். அந்த ஆறுமுகக் கடவுளைப்பார்த்து, "ஆறுமுகா! என்னப்பா, உன்கோலம்! உன் முன்னேரின் வரலாற்றைப் படிக்கும்போது சிரிப்புத்தான் வருகிறது. உன்னை ஈன்றெடுத்த தந்தையோ, பிச்சையெடுத்து வயிறு வளர்ப்பவன்; உன் தாயோ, மலையரசன் பெற்றெடுத்த மங்கை; உன் மாமனே, இடையர் வீட்டுக்குள் புகுந்து வெண்ணெயைத் திருடி வளர்ந்தவன்; உன் அண்ணனே சப்பைக்கால் உடையவன். இவையெல்லாம் உனக்கென்று சொத்தாக அமைந்தனவோ? ஐயோ, பாவம்! ஊம்—உனக்கு என் அனுதாபம்!'' என்று கூறுகிருன்.

17. அப்ப னிரந்துண்ணி; யாத்தாள் மலைநீலி;
ஒப்பரிய மாம னுறிதிருடி-சப்பைக்கால்

அண்ணன் பெருவயிற ஞறுமுகத் தானுக்கிங்
கெண்ணும் பெருமை இவை.

இப் பாட்டின்கண் ஆண்டவர்களைப் பற்றியுள்ள புராணக் கதைகள் தெளிவாகவிளங்குகின்றன. ஆறுமுகக் கடவுளுக்குப் பெற்றவராகவும் உற்றவராகவும் சொல்லப் படுகின்ற கடவுளர்களுடைய இழிநிலையை அழகாக அமைத்துக் காட்டியுள்ள 'காளமேகத்தை வெறும் 'கவிஞன்' என்று கூறுவது சரியல்ல; 'கவிஞனுக்கும் கவிஞன்!' என்றே சொல்லவேண்டும்.

கூத்தாள் என்ற பெயருடைய மாது! அவளொரு கணிகை. அங்கே காளமேகம்! அவனுக்குகந்த முறையில் அந்தப் பரத்தை பணிவிடை செய்கிருள். அப்போது அந்தக் கூத்தாள், "ஐயனே! என் மீதும் எம் குடும்பத்தின் மீதும் புகழ்ந்து ஒரு பாடல் புனைந்துதர வேண்டுகிறேன்" என்கிருள்.

"அப்படியா?"—என்கிருன், காளமேகம்!

"ஆமாம்!" என்று கூறியபடி பணிந்து நிற்கிருள். அப்போது.

18. கூத்தாள் விழிகணெடுங் கூர்வேலாம்: கூத்தாள்தன்
முத்தாள் விழிகண் முழுநீலம்—மூத்தாள்தன்
ஆத்தாள் விழிகள் அரவிந்த மாத்தாள்தன்
ஆத்தாள் விழிகளிரண் டம்பு.

என்று எழுதி, அவளிடம் தருகிருன். அப்போது அங்கொருவன் வருகிருன். அவனிடத்தில் அந்த ஓலையை அவள் காட்டுகிருள். படித்துப் பார்த்து, "கூத்தாளின் இருவிழியும் கூரிய வேலையொத்தவை; கூத்தாளின் அக்காள் இருக்கிருளே, அவளது கண்கள் முழுக்க முழுக்க நீலோற்பலம்; அந்த மூத்தவளுடைய ஆத்தாளுக்கோ தாமரைப் பூவைப் போன்ற விழிகள்; அந்த ஆத்தாளுக்கு ஆத்தாள் இருக்கிருளல்லவா, அவளது விழிகள் இரு அம்புகள்!" எனப் பொருள் கூறி முடிக்கிருன்.

கணிகை, காளமேகத்தைப் பார்க்கிருள்!
காளமேகமும் கணிகையைக் காண்கிருன்!!
எல்லாமே முடிகிறது...!
கணிகை புகழ்கிருள்! காளமேகம் சிரிக்கிருன்!

இத்தகைய காளமேகத்தை—அவனது கவிதையிலுள்ள வேகத்தை யார்தான் சுவைக்க மறுப்பார்; வெறுப்பார்? இன்றுள்ள சில கவிஞர்களுக்கு அவனது ஒவ்வொரு பாட்டும் சாட்டையைப் போன்றது. இன்று, அவனில்லை; அன்று அவனிருந்தான்! ஆகையினுலேதான் அழகான அணியோடு அணிதேர் புரவிபோல அவனது பாட்டெல்லாம் செல்கின்றன. அவனல் இயற்றப்பெற்ற எந்தவொரு பாட்டும் நாட்டுக்கோர் நல்ல தூண்போன்றது; அவன் பாட்டுக்குள் புகுத்தியுள்ள நகைச்சுவையாகவும் துன்பப்பட்டுக் கிடப்போருக்கு ஒரு மருந்து! மாமருந்து! இதோ பாருங்கள்.

விகடராமன் என்ற பெயருடையோன்! அதிகாலையிலிருந்து அந்திமம் வரையிலே ஆகமங்களைப் படித்துக் கொண்டிருப்போன்! அவனுக்கென்றமைந்த ஒரு குதிரையைப் பார்க்கும் வாய்ப்பு, அவனுக்கு ஏற்பட்டது.

காளமேகத்தைக் கண்டுவிட்ட விகடராமன் கை கூப்பித் தொழுதபடி வரவேற்கிறன்! விகடம் செய்வதில் வல்லவனன இராமன், காவலரோடு பலநேரம் அளவளாவினன். நேரமானதை உணர்ந்த நாவலன், புறப்பட முனைந்தான். அவ்வேளையில் அந்த விகடன், நீங்கள் நடந்து போக வேண்டாம்; நம்முடைய குதிரை வண்டியிலே செல்லலாமெனச் சொன்னன்.

அதற்கு அவன் சொல்லத் தலைப்பட்டான்;

"விகடரே! உங்கள் குதிரையா? அதிலே நான் ஏறிச் செல்வதா?" என்றன்.

"ஏன், ஏன்" என்றன், அவன்!

"விகடராமரே! முன்பொரு முறை வந்தபோது உங்கள் சொந்தக் குதிரையிலேதான் சென்றேன். அப்போது முன்னேயுள்ள கடிவாளத்தை மூன்றுபேர் தொட்டிழுக்கவும், பின் பக்கமாக இருவர் இருந்துகொணடு முன்றுக்குத் தள்ளவும் செய்தனர். அப்படிச் செய்தும் என்னவாயிற்று தெரியுமா?"

"என்ன—என்ன!?"

"ஒரு மாதத்திற்கு எட்டுமைல் தொலைவுதான் சென்றது!" என்றன்.

அதுகேட்ட விகடராமன் விழுந்து விழுந்து சிரித்தான். உரையாடல் முடிந்தது ; பாடலைப் பாருங்கள் :—

19. முன்னே கடிவாளம் மூன்றுபேர் தொட்டிழுக்கப்
பின்னே யிருந்திரண்டு பேர்தள்ள—எந்நேரம்
வேதம்போம் வாயான் விகடராமன் குதிரை
மாதம்போம் காத வழி.

(ப-ரை) வேதம்போம்-வேதத்தை ஓதிக் கொண்டிருக்கும் வாயையுடைய ; காதம்—பத்துமைல் ;

அவனது திறமைக்கும் நகைச்சுவைக்கும் ஒரு கலங்கரை விளக்கம்! பதினாறு செல்வங்கள் அடங்கத்தக்க அளவில் ஒரு பாட்டு. "செல்வங்களை அடக்கிப் பாடுவது பாட்டா?" என்று யாரேனும் கேட்டால் வேட்டுதான்! ஒரு கவிஞனுடைய திறமை எப்படி வெளிப்படுகிறது, தெரியுமா? ஒரு சிறு துரும்பைப் பெரிதாக்கிக் காட்டுவதாலேதான்! அவ்வாறு உள்ளடக்கிக் காட்டுபவன் தான் கவிஞனுவான். மற்றவரனை வரும் 'கவியாவர். இதோ, அந்தப் பதினாறு செல்வமடங்கிய பாடல் !

20. துதிவாணிவீரம் விசையன்சந்தானந் துணிவுதன
மதிதானியஞ் சௌபாக்கியம்போகம் அறிவழகு
புதிதாம்பெருமை அறங்குலநோவகல் பூண்வயது
பதினாறுபேறுந் தருவாய்மதுரைப் பராபரனே !

(ப-ரை) துதி-புகழ் ; வாணி—கலைக்குரிய கல்வி ; வீரம்—ஆற்றல் அல்லது நெஞ்சுரம் ; விசையம்—சிறப்பு வாய்ந்த வெற்றி ; சந்தானம்—மக்கட்பேறு ; துணிவு-தைரியம் ; தனம்-பணச்செல்வம் ; மதி தானியம்—நம்மால் போற்றிப் பாதுகாக்கப்படுகின்ற நெல்லையொத்த தானிய வகைகள் ; சௌபாக்கியம்-நோயற்ற வாழ்வு அல்லது சுகம் ; போகம்—அனுபவித்த அனுபவம் ; அறிவு—ஒளிகாட்டும் அறிவு அல்லது அறிந்த அறிவு ; அழகு-பிறருள்ளத்தைக் கவரத்தக்க வடிவு ; பெருமை-நற்செயல்களால் பெருமை கொள்ளல் ; அறங்குலம்-ஒழுக்கச் சிந்தனையுடைய குடிப்பிறப்பு ; நோவகல்-நோயற்று வாழ்தல் ;

பூண்வயது-நீண்ட கால உயிர் வாழ்க்கைக்கேற்ப நடந்து கொள்ளல்.

ஆக, அத்தனையும்—பதினாறு செல்வங்களும் அடங்கும். இந்தச் செல்வங்களனைத்தும் வாழ்வு நடாத்தத் தேவை யானதாகும். அதைத்தான் பாட்டாக நமக்கு வடித்துத் தந்துள்ளான்.

இந்தப் பாட்டிற்கொப்ப மறுபாட்டு! இதுவும் குதிரை யைப் பற்றியதுதான்! இந்தக் குதிரையை இகழ்ந்து பாடாமல் புகழ்ந்தே பாடுகிறான்.

ஆமூர் வேங்கடம் என்றால் அவ்வூரிலுள்ள அனைவரும் அறிவர். அவர் செல்வர்! பெருஞ்செல்வர். வந்தோர்க்கு வாரி வாரி வழங்குபவர். அவரிடத்தில் ஒரு குதிரை இருந்தது! அந்தக் குதிரையைப் பார்ப்போரெல்லாம் பரவச மடைவர். அவ்வளவு அழகு! வேகத்தில் மேகத்தைப் போன்றது. அக்குதிரையைக் காளமேகம் கண்டு பிறிந்தொருவ ரிடம் அதைப்பற்றிச் சொல்லுகிறான்.

"அன்பரே! பிழைக்கத் தக்க வழியிலே பதினாறு செல்வங்களைப் பெற்று, போற்றத்தக்க முறையிலே நெறி யோடு வாழும் ஆமூர் வேங்கடத்தான் ஏறிச் செல்லும் குதி ரையே குதிரை! மற்றதெல்லாம் வெந்து போன மாவைப் போன்றது! சோம்பிக் கிடக்கும் சர்வ சாதாரணமான பிராணி போன்றது; களி கிளறுவதற்கொத்த மாவைப் போன்றது" என்று சொல்லிவிட்டு, அங்கிருந்து செல்கிறான்.

21. ஆறும் பதினாறு மாமூரில் வேங்கட்டன்
ஏறும் பரிமாவே யேற்றமா:—வேறுமா
வெந்தமா; சும்மா: வெறுமா; களிகிளற
வந்தமா: சந்தமா மா.

(ப-ரை) சந்தமாமா-அழகிய நிலவே; பரிமாவே-குதிரையே; வேறுமா-ஏனைய குதிரைகள்; வெந்தமா-வெந்து போன மாவு.

இரண்டு பாட்டுக்கு முன்னே ஒரு குதிரையைப் பார்க்கும் போது பரிதாபகரமாக இருந்தது; இந்தப் பாட்டுக்குள் நுழையும்போது பரவசமாக இருக்கிறதல்லவா?

## அடுத்த காட்சி

மாயூரத்திற்குப் போகிருன்; அங்கு சில நாள் தங்குகிருன். அது சமயம், அந்த ஊரிலுள்ள தியாகராசர் கோயிலுக்குள் நுழைகிருன். சிவனும் பார்வதியும் சேர்ந்து இருக்கும் காட்சியைப் பார்த்ததும் அவன் ஞாபகத்திற்கொன்று வருகிறது. அந்தக் கோயிலுக்குள் பணிபுரிந்து வருபவனைப் பார்த்து :—

வள்ளல்கள் நிறைந்துள்ள மாயூரத்தில் வாழும் தியாகரே! வெள்ளி மலையும் பொன் மலையும் உன்னுடையதென்று கேள்விப்பட்டிருக்கிறேன். அப்படி இருக்கும்போது, இங்கு இருக்கவேண்டிய அவசிய மென்ன? பக்கத்திலே தெள்ளுமையாள் அமர்ந்து கொண்டு, "அஞ்சாதே! அஞ்சாதே!" என்று கூறியும் "நஞ்சுதனை ஏன் அருந்தினீர்! பிஞ்சுமனமா? இல்லை! இல்லை!" எனக் கேட்டுவிட்டு வெளியேறுகிருர்.

22. வள்ளலெனும் பெரிய மாயூர நாதருக்கு
வெள்ளிமலை பொன்மலையு மேயிருக்கத்—தெள்ளுமையாள்
அஞ்சலஞ்ச லென்றுதின மண்டையிலே தானிருக்க
நஞ்சுதனை யேனருந்தினுர்.

(ப-ரை) வெள்ளிமலை - கயிலையென்பர்; பொன்மலை-மேரு மலை; உமையாள் பார்வதி; அஞ்சல், அஞ்சல்-பயப்படாதே பயப்படாதே; நாதர்-தலைவர்; தெள்ளுமையாள்-தெளிந்த தன்மையுடைய உமையாள்.

## இரண்டாவது காட்சி

வீட்டிலே அமர்ந்து பழஞ்சுவடிகளை யெல்லாம் பிரித்துப் பார்த்துக்கொண்டிருக்கிருன். அவ்விடத்திற்கு அவனுடைய மாணவன் வருகிருன்; வணக்கம் செலுத்துகிருன்.

"வாப்பா, தம்பி! இப்படி உட்காரு!" என்று, ஒரு மண் மேடையைக் காட்டுகிருன் காளமேகம். அவனும் அமர்கிருன்.

"மதுரை மீனுட்சியைப் பற்றித் தெரியுமா?"

"ஓ...ஆலாலசுந்தரனுடைய மனைவி, அதுவும் புராணம்..."

"ஆமாம்...அதைப் பற்றித்தான் சொல்லுகிறேன்! அந்தப் புராணக் கதையில் வருவதை வேறொரு முறையில் கவிதை புனைகவென்றால் என்ன செய்வாய்?"

அகல விழிக்கிறான், மாணவன்,

"தம்பி! மாணிக்கவாசருக்காகக் குதிரை விற்க வந்தான் சிவபெருமான் என்றதொரு கதை உண்டல்லவா?"

"ஆமாம்...தாங்கள்கூடக் கற்பனைக் கதை என்றீர்கள்!"

"அந்தக் கற்பனையோடு இன்னும் சிறிது கற்பனை சேர்த்தால்...?"

"ஐயனே! எனக்கொன்றும் புரியவில்லையே!"

புரியாததைப் புரிய வைக்கிறேன் பார்! மதுரையிலோ மீனாட்சி; மாணிக்கவாசகருக்காக வந்ததாகச் சொல்லப்படுவதோ சிவபெருமானை! ஆனால், அவன் குதிரை விற்பவனைப் போல் வந்திருக்கிறான் என்று கதை கூறுகிறது அல்லவா?"

"ஆமாம்...ஐயா!"

"அதை அப்படியே மாற்றினால்...?"

"மாற்றினால்...?"

"மதுரை மீனாட்சிக்கோர் களங்கம்!"

"களங்கமா...?"

"ஆமாம்...களங்கம் தான்...இதோ, பார்..." என்று தான் எழுதிய வெண்பாவை, அவனிடத்தில் கொடுக்கிறான்; அவனும் படிக்க முனைகிறான்.

23. நல்லதொரு புதுமை நாட்டிற்கண்டே னதனைச்
சொல்லவா சொல்லவா சொல்லவா—தொல்லை
மதுரைவிக்கி னேச்சுரனை மாதுமையாள் பெற்றான்
குதிரைவிற்க வந்தவனைக் கூடி.

படித்து முடிக்கிறான்!

பாவலன் பார்த்து, "தம்பி! இகழ்வது போல் புகழ்தல் என்பார்களே, அது, இதுதான்! நம்முடைய எண்ணமும் வெளிப்படும்; வெறியோடு பக்தி செலுத்துகிறார்களே, அவர்களும் நம் மீது சீற்றங் கொள்ளார். தெரிகிறதா?" என்றான்.

"அப்படியானால்...இப்படிப் பாடியே இழி நிலையை இன்றுள்ளோர் மத்தியிலே பரப்பலாம்."

''ஆனுல்...யாரேனும் வெறி வந்து கேட்டால் மட்டும் 'நிந்தாஸ் துதி' என்று சொல்லி விட வேண்டும். அவன் திருந்தும் வரையில் அப்படி...பிறகு...''

''ஐயனே! உண்மை விளங்கிவிட்டது...இப்பாட்டின் பொருளை நான் அறிந்தவரையில் சொல்லலாமா?''

''வேறு எதற்காகத்தான் உன்னிடத்தில் கொடுத்தேன்? ஊம்...ஆகட்டும்''

''பெரியோர்களே! நல்லதொரு புதுமையை இந்த நாட்டிலே கண்டேன்! சொல்லவா? சொல்லவா?? சொல்லவா??? மதுரையிலே குடியுள்ள மீனுட்சிக்கும் (உமாவுக்கும்) ஒரு சாதாரணக் குதிரை விற்கக்கூடியவனுக்கும் பிறந்தவனே-விநாயகன்! ஐயனே, சரியா?''

''பொழிப்புரை தந்தாய்...அது போதும்! வந்த செய்தி?''

''தங்களைப் பார்த்து வெகு காலமாயிற்றே...பார்த்து விட்டுப் போகலாமென வந்தேனய்யா!''

''மிக்க மகிழ்ச்சி! வெளியே செல்கிறேன்! பிறிதொரு நாள் வருகிருயா?''

''நல்லது, ஐயனே!''

அவன் செல்கிருன்; தன் வீட்டிலிருந்து காளமேகம் புறப்படுகிருன்.

## மூன்ருவது காட்சி

இதுவொரு கதையை விளக்கப்போகும் காட்சி. காளமேகம், விரைவாக வந்து கொண்டிருக்கையிலே ஒரு கோயில் தென்படுகிறது. அந்தக் கோயிலுக்குள்ளே அமர்ந்துள்ள அருணுசலனைக் காணுகிருன்.

உடனே, ''உன்னைப் பற்றிய கதை ஒன்றிரண்டா? இல்லை, இல்லை! ஓராயிரம்! அதிலேவொன்று பெரிய புராணத்திலே வரும் சிறுத் தொண்டர் கதை! பிள்ளைக் கறி கேட்டாயாம்! இது உன் செயலோ அல்லது உன் பெயரைச் சொல்லிக் கொண்டு ஊரில் வாழும் நரிக் குண முடையோரின் செயலோ, எனக்குத் தெரியாது. சிறுத்தொண்டனைப் பார்த்து யான் கேட்டது உண்மைதான்!' என்று நீ சொல்லுவாயானுல் இங்கேயே உன்னைக் கொன்றுவிடுவேன். போகட்டும்...அப்படி

அந்தச் சிறுத்தொண்டன் தன் மகனை வெட்டிக் கறியாகச் சமைக்க தம் மனைவியிடமே கூறுபோட்டுக் கொடுத்தானும்! அவள் அதைப் பக்குவமாகச் சமைத்து ஓரளவுக்கு வைத்தாளாம். அப்போது நீர், 'உமது பிள்ளையைக் கூப்பிடு!' எனக் கூறினீராம்! சட்டியிலே பாதி இருந்தது; உனக்கென்று போடப்பட்டுள்ள இலையோ சிறிது இருந்தது; அகப்பையிலே சிறிது இருக்கிறது. அப்படி இருக்கும்போது அவர்கள் தம் பிள்ளையைக் கூப்பிட்டதும் ஓடோடி வந்ததாகச் சொல்லப் படுகிறதே, அது, எப்படி? கறியாகச் சமைத்து விட்டபின்பு உயிரோடு ஓடி வந்தான் என்பது எவ்வாறு? எனக் கூறி அவ் விடத்தைவிட்டு வெளி வருகிருன். இதோ அந்தப் பாடல்:—

24. சட்டியிலே பாதியந்தச் சட்டுவத்தி லேபாதி
இட்டகலத் திற்பாதி யிட்டிருக்கத்—திட்டமுடன்
ஆடிவந்த சோணேச ரன்றழைத்த போது பிள்ளை
ஓடிவந்த தெவ்வா றுரை ?

## நான்காவது காட்சி

மதுரை மீனுட்சியம்மன் கோயிலுக்குள் சென்று கூட்டம் கூடும் காட்சியே, இப்போது வரப்போவது. திருவாலவாயனைக்காண அங்குள்ளோர் வருகின்றனர். அங்கு காளமேகம் இருக்கிருன். வந்தவரனைவரும் ஆலவாய் ஆண்டவனைத் தொழுகின்றனர். அவ்வாறு தொழுகின்றவரைத் தம் பக்கம் திருப்பி, "பெரியோர்களே! பெண்களே! பார்த்தீரா, இந்த ஆண்டவனை! ஒரு பெண்ணைத் தலையிலும் மற்ருெரு பெண்ணை இடப் புறத்திலும் வைத்துள்ள பைத்தியக்காரத் தன்மையைப் பார்த்தீரா? எட்டுத் திசையிலிருந்தும் புகழப்படுகின்ற இந்த ஈசன் கையிலே பார்த்தீரா, நெருப்பை! அக்காளை மீது ஏறிக்கிடக்கும் அலங்கோலத்தைப் பார்த்தீரா? பாருங்கள், பாருங்கள்!" எனப் பரிகாசம் செய்கிருன்.

25. கண்டீரோ பெண்காள்! கடம்பவனத் தீசனுர்
பெண்டீர் தமைச்சுமந்த பித்தனுர்—எண்டிசைக்கும்
மிக்கான தங்கைக்கு மேலே நெருப்பையிட்டார்
அக்காளை யேறினு ராம்.

(அ-ள்) எண்டிசைக்கும்-எத்திசைக்கும்; பெண்டீர் தமை சுமந்த - தலையிலே கங்கையையும் இடையிலே பார்வதியையும் சுமந்துள்ள.

அக்காளை என்பது 'அ+காளை' எனப் பொருள் விரியும். காளை-எருது அல்லது நந்தி என்பர்; அக்காளை என்று சொல்லும்போது அந்தக் காளையென மாறும்.

## ஐந்தாவது காட்சி

இப்போது திருவொற்றியூர் தியாகராசனுக்குத் தாம் பூலம்! "கூத்தாடிக் கொண்டிருக்கும் தியாகராசா! பிறருக்கு மகிழ்ச்சியை அளிக்கத்தக்க வகையிலே ஆடுவது எதற்கு? உனக்குத்தான் மாடு, மனை, மக்கள், சுற்றமெல்லாமாகி, ஆணவத்தோடு ஓடி விளையாட இரண்டு பிள்ளைகளைப் பெற்றாய், நீர் தங்கியிருக்கும் ஊரே ஒதுக்கி வைக்கப்பட்டு விட்டதே! அதன் பிறகும் ஆட்டம் ஏன்? பாட்டு ஏன்? ஒதுங் கிப்போன ஊரிலே ஓடி விளையாடுவதேன்?" என, வினவி நிற்கிறான்.

ஆடுபவன் பேசுவானா?

பேசுபவனாக இருந்தால் காளமேகம் ஏசுவானா?

அவன் பேசான், 'காளமேகமும் ஏசாமல் விடமாட்டான்.

26. ஆடுந் தியாகரே யாட்டமேன் தான்உமக்கு
வீடுஞ் சமுசார மேலிட்டுக்—கூடிச்
செருக்கி விளையாடச் சிறுவரிரண் டாச்சே
இருக்குமூ ரொற்றி யாச்சே!

## ஆறாவது காட்சி

வீட்டின் வாயிலில் உட்கார்ந்து கொண்டிருக்கிறான். அந்தநேரத்தில் வீதி வழியாக ஒரு பெண் கீரையைச் சுமந்து, 'கீரையோ, கீரை' என, விற்று வருகிறாள். அவளைப் பார்க்கிறான்; தங்கம் போன்ற அங்கத்தை உற்று உற்றுப் பார்க்கிறான். அப்போது தன் மனத்துக்குச் சொல்ல முனைகிறான்.

"மனமே! இப் பெருந்தெருவில் கீரையைச் சுமந்து கொண்டு செல்கிறாள். கீரையை மட்டுமா சுமந்து செல்

கிருள்? தன்னுடைய கொங்கைகளையுமல்லவா சுமந்து கொண்டு செல்கிருள்! அதனுலல்லவா அவளது இடை முறிந்து போகக் கூடிய அளவில் உள்ளது! ஐயையோ! இதைச் சொல்லுவோரில்லையே! அம் முலைக்கு இதை முன்ன தாக அறிவிப்பாரில்லையே!'' எனக் கூறுகிருன். அதுவே பாட்டாகவும் அமைந்து விடுகிறது.

28. "..................................................வள்ளை
இலைக்கறிவிற் பாள்மருங்கு இற்றுவிடு மென்று
முலைக்கறிவிப் பாரிலையே முன்''

(ப-ரை) மருங்குல்-சிற்றிடையானது; இற்றுவிடும்-[மார்பின் மீதுள்ள கொங்கை அழுத்திஞல்] முறிந்துவிடும்; வள்ளை இலைக்கறி—வள்ளைக் கொடிக்கீரை.

## ஏழாவது கட்சி

வேளூர் வைத்தீசுவரன் கோயிலிலே வயிற்றெரிச்சல்! காளமேகம் கோயிலுக்குள் நுழைகிருன். அவனைப்போலவே பிறிதொருவரும் நுழைகிருர். அவரைத் தன் அருகே அழைத்து, " அன்பரே! நான் சொல்லப்போகும் செய்தியைக் கவனமாகக்கேளும்! இந்தச் சிவபெருமானுக்கு வாதநோய்; இவரது மைத்துனருக்கு நீரிழிவு; பிள்ளைக்கோ பெருவயிறு; அதுவும் அகோரமான விகார வயிறு. இவ்வாறு தம்முடைய நோயையும், உறவினருடைய நோயையும் தீர்க்கமுடியாத இவர், வேறு எவருடைய நோயைத் தீர்க்கப் போகிருர்? ஊம்...ம்?!'' எனக்கூறி, அவரது உள்ளத்தைத் தூண்டி விட்டு வேடிக்கை காட்டுகிருன்.

29- வாதக்கா லாந்தமக்கு, மைத்துனர்க்கு நீரிழிவாம்;
மேதப் பெருவயிரும் பிள்ளைதனக்—கோதக்கேள்
வந்தவினை தீர்க்க வகையறியார் வேளூரர்
எந்தவினை தீர்ப்பா ரிவர்?

(அ-ள்) ஓதக்கேள்-யான் சொல்வதைக்கேள்; வாதக்கால்-பரமசிவனுக்கு வாதக்கால்; (புராணக்கூற்று) வந்தவினை-தமக்கு ஏற்பட்ட நோய். எந்தவினை—எவருடைய நோயை!

இந்தக் கேள்விக் கணைகளோடு காளமேகம் நிற்கவில்லை. அவனது எண்ணத்தில் வெளிப்பட்ட கருத்துக்களை மேலும் வெளியே கொட்ட ஆசைப்படுகிருன். அன்பருக்கோ, 'இந்த வம்பரிடம் அகப்பட்டுக் கொண்டோமே' என்ற எண்ணம். என்ன செய்வது ? கேட்டுத்தானே ஆகவேண்டும் ? ஆகவே பேசாமல் இருக்கிருர்.

"என்னய்யா இந்தச் சிலையைப் பார்த்தீரா? எப்படி இருக்கிறது கண்டீரா? இந்த வைத்தீசுவரனைப் பார்த்து நான் கேட்பது என்னவென்ருல். 'சடாயு என்கின்ற பறவை தொழுத மண்ணிலே இருக்கும் வைத்தீசுவரா! உன் நெற்றிச் கண்ணிலே தீ; திருக்கரத்திலே நெருப்பு; திரிபுரத்தை எரித்ததாகச் சொல்லப்படும் உன் புன்னகையிலும் தீ! உன்னுடைய உடல் முழுமையும் ஒரே தீ! அப்படி இருக்க இந்தத் தையலாள் எப்படி உன்னை விரும்பினுள்? என்பதுதான்" என்கிருன்.

அன்பருக்கோ ஆத்திரம்?

காளமேகத்திற்கோ ஒருவித ஆறுதல்! தன் மனத்திலிருந்த ஒரு சுமை இறங்கியது என்ற மகிழ்ச்சி! அந்த மகிழ்ச்சியின் சாயலே கீழேயுள்ள பாட்டு.

30. தீத்தானுன் கண்ணிலே; தீத்தானுன் கையிலே;
தீத்தானும் உன்றன் சிரிப்பிலே—தீத்தானுன்
மெய்யெல்லாம்; புள்ளுருக்கும் வேளுரா! உன்னையிந்தத்
தையலா ளெப்படிச்சேர்ந் தாள்?

(ப-ரை) புள்-பறவை; தீ+தான்-தீயேதான்; மெய்யெலாம்-உடலெங்கும்; உன் கையிலே-நின் திருக்கரத்திலே; தையலாள்-உமையாளைக் குறிக்கும்.

## எட்டாவது காட்சி

**நாகப்பட்டினம்!**

அங்கொருத்தி! அவள் விலைமகள்! வருவோரை வாவென்றழைத்து இன்பமளிக்கும் கணிகை! அந்த வீட்டிற்குக் காளமேகமும் போனுன். போனுனு!

அங்கு என்ன ஆயிற்ருே, ஏது ஆயிற்ருே, தெரியவில்லை! வெளியேறி வீதி வழியாக வந்து கொண்டிருக்கிருன்.

அப்படி வந்துகொண்டிருக்கும்போது தன் மனத்திற்கு அழைப்பனுப்பி, அதை வரவழைத்து அதனிடம் சொல்லு கிறான்; நீங்களும் கேளுங்கள்!

"ஏ மனமே! வாழ்வை வளமாக நடத்திக்கொண்டி ருக்கும் நாகப்பட்டினத்துக் கணிகையைக் கண்டேன். அவள் அழகி! அவள் என் முன்னே பாடத்தொடங்கினாள். ஐயகோ! அது குரலா? இல்லை! அப்போது எனக்கொரு நினைவு வந்தது.

நேற்றைய தினம்! கழுதையை இழந்த வண்ணானைக் கண்டேன். அவன் சொன்னான், 'கண்டேன், கண்டேன்; என் கழுதையை!' என்று. அச்சமயத்தில், விலைமகளின் குரலைக் கண்டுதான் தன் கழுதையின் குரலெனக் கருதிக் கொண்டு கோலை ஏந்திச் சென்றானா? அதை மீட்டுக்கொண்டு வரத்தான் ஓடோடிச் சென்றானா? இருக்கும்...அவள் குரல் கூட அப்படித்தான் இருந்தது" எனக் கூறியபடி வழிநடக் கிறான். இதோ, அந்த வரிகள்.

31. வாழ்த்த திருநாகை வாகான தேவடியாள்
பாழ்த்த குரலெடுத்துப் பாடினாள்—நேற்றுக்
கழுதைகெட்ட வண்ணான் கண்டேன் கண்டேனென்று
பழுதையெடுத் தோடிவந்தான் பார்!

(ப-ரை) திருநாகை—சீரும் சிறப்புமிக்க நாகப்பட்டினம்; வாகான தேவடியாள்—வனப்புமிக்க விலைமகள்; பழுதையெடுத்து — கயிற்றை எடுத்துக்கொண்டு.

## ஒன்பதாவது காட்சி

இப்படி வயிறெரிந்து சென்றுகொண்டிருக்கிறான். அவன் எதிரே, ஓர் இடைச்சி, "மோரோ, மோர்!" என விற்றுக் கொண்டே வருகிறாள். அவளை அழைத்து மோர் வாங்கு கிறாள். அம் மோரிலே அதிகமாக நீர் கலந்திருப்பதைக் கண்டுவிட்டு, "கொடி இடை யுவதியால் விற்கப்படத்தக்க மோரே! நீ விண்ணிலே இருக்கும்போது மேகமெனப் பெயர் பெற்றாய்; கச்சு அணிந்த மிக மெல்லிய கொங்கைகளை

யுடைய இடைச்சியின் கைக்கு நீ வரும்போது, 'மோர்' எனப் பெயர் பெற்றுவிட்டாய்! இதன் காரணமாக கார், நீர், மோர் என்ற மூன்று பேர்களையும் பெற்றுக்கொண்டாய்'' என்ருன்.

32. காரென்று பேர்படைத்தாய் ககனத் துறும்போது
நீரென்று பேர்படைத்தாய் நெடுந்தரையில் வந்ததன்பின்
வாரொன்று மென்முலையர்ரை ஆய்ச்சியர்கை வந்ததன்பின்
மோரென்று பேர்படைத்தாய் மூப்பேரும் பெற்ருயே!

(அ-ள்) காரென்று—மேகமென்று; ககனம்-வானம்; ஆய்ச்சியர்-இடைச்சியர்; முப்பேரும்-மூன்று வகையான பெயரையும்.

இடைச்சியர் கைக்கு வரும்போது மோரென்றும், வானத்தில் இருக்கும்போது காரென்றும், நிலத்திற்கு வரும்போது நீரென்றும் பெயர் பெற்றது மிகத் தெளிவாகவும் நயமாகவும் தெளிவுபடுத்தியுள்ள காளமேகத்தை என்னென்று புகழ்வது! நகைச்சுவைக்கு நகைச்சுவை; நயத்திற்கு நயம்; திறனாய்வுக்குத் திறனாய்வு! இப்படி அமைந்துள்ள பாடல்கள் சில. அவற்றுள் காளமேகத்தின் பாடல்கள் ஒரு தனிச்சுவையைத் தருவனவாகும். இல்லாத ஒன்றை வீம்புக்காகிலும் பொருத்திக்காட்டுகின்ற தன்மை காளமேகத்திடம் இருந்ததில்லை என்பதற்கு, அவனது ஒவ்வொரு பாடலுமே சான்று; கண்ணாடிக்குக் கண்ணாடி! அதுபோலவே பிறர் செய்துள்ள குற்றத்தைக் கண்டிக்காமல் இருந்தது கிடையாது.

பன்னிரெண்டாம் நூற்ருண்டில் வாழ்ந்த கம்பன், எங்கேயோ, எந்தப் பாடலிலேயோ 'நாராயணன்' என்பதற்கு 'நராயணன்' என்று எழுதிவிட்டானும். அதற்கு அவன் சொன்னது என்னவென்ருல்,

33. "நாரா யணனை நராயணனென் றேகம்பன்
ஓராமற் சொன்ன வுறுதியால்—நேராக
வாரென்ருல் வர்ரென்பேன் வாளென்ருல் வள்ளென்பேன்
நாரென்ரு னர்ரென்பேன் நான்."

என்பதேயாகும்.

நாராயணன் என்று இருக்க வேண்டிய பெயரை 'நரா யணன்' எனக் குறுக்கித் தெளிவின்றிச் செய்த பிழையுள்ளதே அதை யாராலும் மன்லிக்க முடியாது. அவ்வாறு இல்லாமல், 'மன்னிக்க நான் தயார்?' என்று, யாரேனும் மார்தட்டி நிற் பாரேயானுல் நானும் அதற்கு நேராக 'வார்' என்பதற்குப் பதிலாக, 'வர்' என்பேன்; வாளென்று சொன்னுல், 'வள்' என்று சொல்வேன்; 'நார்', என்று சொன்னுல் 'நர்' என்று கூறுவேனெனக் கூறியுள்ள, காளமேகத்தின் நெஞ்சத் துணிவை என்னென்று, எவ்வாறு புகழ்வது?—இப்படிக் காணும் குற்றத்தைப் பலரிடமும் பறைசாற்றி விடுகின்ற ஒரே ஒரு பழக்கத்தைக் காளமேகம் கொண்டிருந்தான். ஆகையி ஞல்தான் அதிமதுர கவிராயர் அவனிடம் தோற்க வேண் டியவரானுர்.

இதோ, அந்தச் சுவையான காட்சி !

அதிமதுரகவி—அவைக்களப் புலவன்! நூற்றுக்கணக் கான புலவர்களுக்குத் தலைவன்! திருமலைராயனுடைய திருச் சபையிலே தலைவனுகவும், தனி முதல்வனுகவும் விளங்கு பவன்! யாருக்கும் அடங்கான்! அவனுக்குள்ள பேருக்காகவே அடங்கான்! தன்னைவிட யாருமில்லையெனக் கருதிக்கொண் டுள்ள கிறுக்கன்! தருக்கன்!

அத்தகைய அதிமதுர கவியானவன், பல்லக்கில் ஏறிக் கொண்டு முன்னே யானையும் சேனையும்வர, பின்னுலே தனக் குக் கீழ்ப்படிந்துள்ள புலவர்கள், 'அதிமதுரக் கவிராயர், வாழ்க! வாழ்க!' என்று கூக்குரலிட்டு வர, அதைக்கண்டு ஊர்மக்களெல்லாம் வணங்கி நிற்கக்கூடிய நிகழ்ச்சி ஒன்று நடைபெறுகிறது.

அப்போது...!

அவ்வழியாகக் காளமேகம் வருகிருன்! ஓர் ஆஸ்தானக் கவிஞன் வருகிருனென்ருல் குறுக்கே யாரும் போகக்கூடாது. அப்படிப்போனுல் அவமரியாதை செய்வதாகக் கருத்து. இந்தக் கருத்தை அறியாதவனல்ல காளமேகம்! ஆனுலும் அவன் பல்லக்குக்கு முன்னே செல்கிருன். உடனே, கட்டி யங்காரன், "ஓய், யார் நீர்?" என்கிருன்.

காளமேகம் சிரித்தான்!

"நான்...மனிதன்!" என்ருன்.

"அது தெரிகிறது! எங்கள் அவைக்களப் புலவர் வரும்போது, குறுக்கே வந்து நறுக்காகப் பேசியதற்குக் காரணமென்ன?"

"நீ அது பற்றிக் கேட்கக் காரணமென்ன?"

"சரி, சரி! உன்னிடத்தில் எனக்கு ஏன் வீண் பேச்சு! அதிமதுர கவிராயர் வாழ்க! என்று சொல்லு!"

அந்தச் சொல்லைக் கேட்டதுதான் தாமதம்! விண்முட்டும் வண்ணம் சிரித்தான்! அதிமதுர கவிராயனுக்குச் சொல்ல முடியாத சீற்றம்!

"ஓய், கட்டியங்காரரே! அதிமதுரமென்ருல் அகில வுலகமெல்லாம் அறியுமே! அப்படியிருக்கத் 'துதி செய்!' எனச் சொல்லித் துன்புறுத்துவது ஏன்? 'அதிமதுர கவிராயர் வாழ்க!' என்று சொல்வதிலே என்ன புதுமை இருக்கிறது? அதிமதுரம் காட்டில் விளையும் சரக்கு; காரமற்றது; தனித் தன்மையாக வேலைசெய்ய முடியாத ஒரு சாதாரணக்கட்டை அது! எனவே, தனித் தன்மை பெறமுடியாமல் கூட்டுறவால் பிழைக்கும் பேரெனக் கூறு!" என, இடித்துரைக்கிருன்.

34. அதிமதுர மென்றே யகிலமெலா மறியத்
துதிமதுர மாயெடுத்துச் சொல்லும்—புதுமையென்ன
காட்டுச் சரக்குலகிற் காரமில் லாச்சரக்குக்
கூட்டுச் சரக்கெனவே கூறு.

அவ்வெண்பாவைக் கேட்டவுடன் அதிமதுர கவிராயனுடைய உள்ளத்திலே பெரும் புயல்! வேறு வழியற்ற முறையிலே திருமலைராயனுடைய திருச்சபைக்குச் செல்கிருன்.

திருமலைராயன் வருகிருன்!

அதிமதுர கவிராயரின் முகத்தைப் பார்க்கிருன். "புலவர் பெருமானே! முகத்திலே துன்பரேகை படர்ந்திருப்பதற்குரிய காரணமென்ன?" என்கிருன்.

அது கேட்ட அவன், "அரசே! என்னை ஓர் ஆண்டிப் பயல் அவமானப் படுத்திவிட்டான்?"

"ஆ! யாரவன்?"

"ஊரேதும் பேரேதும் அறிகிலேன்......ஆனாலும் அங்கொரு சத்திரத்தில் அமர்ந்திருக்கிறான்" என்கிறான்.

திருமலைராயனுக்கோ பெரும் சீற்றம்! அந்தச் சீற்றத்தில் கட்டியங்காரனை அழைத்து, "அவன் பெயரென்ன?" என்று கேட்டு வரும்படி அனுப்புகிறான்.

அவனும் வருகிறான்!

காளமேகமும் இருக்கிறான்!

மன்னவன் சொன்னபடி சொல்லி முடிக்கிறான்.

"காவலனுக்குரிய ஏவல! நான் வாய்ச் சொல்லால் சொல்லுவதை உன்னால் அப்படியே சொல்ல முடியாது. ஆகவே, எழுதித் தருகிறேன்...கொண்டு போய்க்கொடு!" எனக் கூறி விட்டு, ஓர் ஓலை எழுதிக் கொடுத்தனுப்புகிறான்.

காளமேகம் கொடுத்த ஓலையை மன்னன் முன்னே கொண்டு வந்து கொடுக்கிறான். அதை, அதிமதுர கவிராயரிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லுகிறான். அவன், அதைப் பெற்று,

35. * "தூதைந்து நாழிகையி லாறுநா ழிகைதனில்
சொற்சந்த மாலை சொல்லத்
துகளிலா வந்தாதி யேழுநா ழிகைதனிற்
றொகைபட விரித் துரைக்கப்
பாதஞ்செய் மடல்கோவை பத்துநா ழிகைதனில்
பரணியொருநாள் முழுதுமே!

---

* தூது ஐந்து நாழிகையில்-ஐந்து நாழிகையில் தூது பாடி முடிப்பேன்; ஆறு நாழிகைதனில் சொற்சந்த மாலை-ஆறு நாழிகையிலே சொற்சந்த மாலை என்ற பிரபந்தத்தைப் பாடி முடிப்பேன்; துகளிலாத அந்தாதி ஏழு நாழிகைதனில்-குற்றங் காணமுடியாத வகையிலே ஏழு நாழிகையிலே அந்தாதி பாடி; தொகைபட விரித்துரைக்க-அந்த அந்தாதியைப் பற்றியும், அதிலுள்ள கருத்துக்களைப் பற்றியும் விரிவான முறையிலே விரிவுரையாற்றி முடிப்பேன்; மடல் கோவை பத்துநாழிகை தனில்-மடல்கோவை போன்ற நூல்களுக்குப் பத்து நாழிகையே; பரணியொரு நாள் முழுதுமே-பரணி பாடுவதற்கு ஒரே ஒரு நாள்; பாரகாவியமெலாம் ஓரிரு தினத்திலே-மாபெரிய காவியத்தையெல்லாம் இரண்டொருநாளில் முடித்து, தாயகம் முழுமையிலும் கொடிகட்டி இருக்கிறேன்.

பாரகா வியமெலா மோரிரு தினத்திலே
பகரக் கொடிக் கட்டினேன்
சீதஞ்செ யுந்திங்கண் மரபினு லீடுபுகழ்
செய்யதிரு மலே ராயன்முன்
சீறுமா ருகவே தாறுமா றுகன்சொல்
திருட்டுக் கவிப் புலவரைக்
காதங் கறுத்துச் சவுக்கிட் டடித்துக்
கதுப்பிற் புடைத்து வெற்றிக்
கல்லணையி னுெடுகொடிய கடிவாள மிட்டேறு
கவிகாள மேக நானே.''

எனப் படித்து முடிக்கிருன். 'சீறுமாருகவே...' என்ற வரியி லிருந்து அவனது உதடுகள் துடிதுடித்தனவென்றே சொல்ல வேண்டும்.

அவையிலிருந்த அனைவருக்கும் சொல்லொணுத சீற்றம்! 'எதிரே அந்தக் காளமேகம் இருந்தால்—?' என்று, ஒவ் வொருவர் உதடுகளும் முணுமுணுத்தன.

''அரசர்க்கரசே! அவன் இந்த அவையையே அவமதித் தான்; இங்குள்ள அத்தனை புலவர்களையும் அவமதித்துள் ளான். எங்களையெல்லாம் குதிரைகளாக்கி இருக்கிருன். இம் மாபெரும் இழுக்கைத் துடைக்க, அக்கடையனைக் கொண்டு வர உத்திரவிடுங்கள்! அவனை...?'' என்க்கொக்கரித்தான், அதிமதுரக்கவி!

''ஆமாம்...ஆமாம்!'' என்றனர் அனைவரும்!

மன்னனுக்கு மட்டும் உள்ளுக்குள்ளேயே போராட்டம்! என்ன செய்வது? அக்கணமே காவலாளிகளை அழைத்தான். தலைசாய்த்து நின்றனர் அவர்கள்.

''காளமேகமென்ற கவியை அழைத்து வாருங்கள்! வர மறுத்தால் கட்டி இழுத்து வாருங்கள்!''

''உத்தரவு!'' என்றபடி சென்றனர். சென்றவர் சிறிது நேரத்திற்குள்ளாகக் காளமேகத்தை அழைத்து வந்தனர். காளமேகம் வரும்போதே அலட்சியப் பார்வையோடு வந்தான்.

'' நீர் யார் ?'' என்ருன் மன்னன்.

"கவி காளமேகம்!" என்று சொல்லிவிட்டு அவையிலுள்ளவர்களைப் பார்த்து, "மன்னா! இவர்கள் யார்? என்று கேள்வி கேட்கத் தொடங்கினான்.

அதிமதுரகவி, பேசாமல் இருக்கக்கூடாதா? சட்டென்று எழுந்து, "அனைவரும் கவிராயர்கள்?" என்றான்.

அப்படிச் சொன்னதுதான் தாமதம்! கொல்லென நகைத்தான். "கவிராயரா?" என்றான். "ஆமாம்!" என்றான், அதிமதுரகவி! விடவில்லை, காளமேகம்! மீண்டும், "கவிராயரா!" என்றான், ஆத்திரத்தோடு, "ஆமாம்... ஆமாம்!" எனச் சொல்லி, தொப்பென்று உட்கார்ந்தான்.

காளமேகமோ, * "கவியா?" என்று கேட்டுவிட்டு,

36. வாலெங்கே? நீண்ட வயிறெங்கே? முன்இரண்டு
காலெங்கே உட்குழிந்த கண்ணெங்கே?—சாலப்
புவிராயர் போற்றும் புலவீர்காள் நீவிர்
கவிராய ரென்றிருந்தக்கால்!

என்ற பாடலைப் பாடி முடித்தான்.

(அ-ள்) வால் எங்கே—(குரங்கிற்கு இருக்கத் தக்க) வால் எங்கே? நீண்ட வயிறெங்கே-பெருத்த வயிறு எங்கே? சால-மிகுதியாக.

"மன்னவர்களனைவரும் போற்றத்தக்க புலவர்களே! நீங்களனைவரும் குரங்குக்குத் தலைவர்கள்என்பது எவ்வாறு? அவ்வாறு உண்டென்றால் உங்களுக்கு வால் எங்கே? குரங்குகளுக்கு இருக்கவேண்டிய நீளமான வயிறு எங்கே? முன் பக்கத்திலே இருக்கவேண்டிய கால்களெங்கே? குழிவிழுந்து கிடக்கக்கூடிய கண்கள் எங்கே? எங்கே?" என்கிறான்.

அதுகேட்ட அதிமதுரகவி எழுந்து நின்று, "ஆ! என்ன துணிவு உனக்கு? புகழ்வது போல் இகழும் பித்தரே! காளமேகமென்ற பெயரை உடையோரே! உன் பெயருக்கேற்ற அளவிலே கறுத்த மேகம் போலல்லவா பாட வேண்டும்?" என்கிறான்.

பொழியத்தானடா வந்தேன்; உன்னை அழிக்கத்தானடா வந்தேன்!" என்றான்.

---

* கபி என்றால் வடமொழியில் குரங்கு என்று பொருள். கபி என்ற சொல், தமிழில் கவி எனத் திரிந்து வழங்கும்.

"பொழியப் போவதைப் பார்க்கத்தானடா போகிறோம்!" என்றான், ஆணவக்காரனான அதிமதுரம்.

"கேளடா, அதிமதுரா!" எனக் கூறித் தொடங்குகிறான்.

37. கழியும் பிழைபொருட் டள்ளிநன்னூலங் கடலினுண்டு
வழியும் பொதிகை வரையினிற் கால்கொண்டு வண்கவிதை
மொழியும்புலவர் மனத்தே யிடித்து முழங்கிமின்னிப்
பொழியும் படிக்குக் கவிகாள மேகம் புறப்பட்டதே.

(இ-ள்) கழிக்கத்தக்கப் பிழைகளை யெல்லாம் விலக்கி, கடல் போன்ற நல்ல நூல்களை, அறிவுக்கு உணவாக உண்டு, பொதிகை மலையிலே தவழ்கின்ற தென்றலைத் துணைகொண்டு, வனப்பு மிக்க கவிதைகளைப் பாடுகின்ற, புலவர்களுடைய மனமாகிய வானத்திலே ஏறிக்கொண்டு இடிபோல் இடித்து, அவர்களுடைய காதுகள் செவிடாகும்படி முழங்கி, மின்னலைப்போல் மின்னி, மழையொத்து கவிமழையைப் பொழியவே இந்தக் காளமேகம் புறப்பட்டுவிட்டது. தெரிந்து கொள்.

இவ் வெண்பாவைக் கேட்டதும் உள்ளுக்குள் ஆட்டம் தான்! ஆனாலும் நடிப்பை நடிப்பாகவே காட்டிக் கொள்ள முடியவில்லை. அதற்கு அவன், "காளமேகா! ஒரே ஒருமுறை உள்ளுக்குள் காற்றுவாங்கி வெளிவிடுவதற்குள்ளாக முன்னூறு அல்லது நானூறு பாடல்களும், 'ஆகிவிட்டது'—அதாவது பாடி முடித்தாகிவிட்டது என்று சொல்லுவதற்கு முன்னதாக ஆயிரம் பாடல்கள் பாடி முடித்துவிட முடியாதா? போகிறது? வீண்பேச்சு எதற்கு? அறிவுக்கொவ்வாத வெண்பாக்களைப் பாடும் காளமேகப் புலவனே! இதோடு, உன்னுடைய கள்ளக் கவிதைக் கடையை முடிச்சுபோட்டு முடிந்துக்கொள்!" (கடையை என்பது கடைவாயை என்றும் ஆகும்) எனக் கூறும் வகையிலே,

38. மூச்சுவிடு முன்னே முந்நூறு நானூறும்
ஆச்சுதென்று லாயிரம் பாட்டாகாதா—பேச்சென்ன?
வெள்ளைக்க விகாள மேகமே! நின்னுடைய
கள்ளக் கவிக்கடையைக் கட்டு.

என்றதொரு வெண்பாவைச் சொல்லுகிருன். இப்படிச் சொன்னதைக் கேட்டுக்கொண்டு சும்மா இருப்பவனு காளமேகம்? அதிமதுர கவிராயனுடைய ஆணவத்தை அடக்க எழுந்து, "ஏ, சிறுபிள்ளேயே! 'இம்' என்கின்ற ஓசையை ஒலிப்பதற்குள்ளாக எழுநூறு அல்லது எண்ணூறு பாடல்களேயும், 'அம்' மென்று சொன்ன வேளேயிலேயே ஆயிரம் பாடல்கள் பாடி முடிந்துவிடுமன்ருே? ஏ, அதிமதுரா! எச்சரிக்கின்றேன்! சும்மா இருந்தால் இருப்பேன்; விறிட்டெழுந்தேனுனல் பெருங்காளமேகம் பிள்ளாய்..." எனத்துடிதுடிப்போடு சொல்லி முடிக்கிருன்.

39. இம்மென்னு முன்னே யெழுநூறு மெண்ணூறும்
அம்மென்ரு லாயிரம்பாட் டாகாதோ—சும்மா
இருந்தா லிருந்தே னெழுந்தேனே யாயின்
பெருங்காள மேகம் பிளாய்.

அந்த வெண்பாவைக் கேட்டவுடன் அதிமதுர கவிராயன், தன் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டவன்போல் ஆகிருன். ஆனுலும் வீம்புக்கு மட்டும் குறைச்சலில்லே என்பதை நிருபித்துக்காட்டும் வகையிலே, "காளமேகம்! உமக்கு அரிகண்டம் பாடத் தெரியுமா?"

"உன்னே ஓடவைக்கவும் தெரியும்!"

"ஆ! என்ன துணிவு! சரி!...'அரிகண்டம்' என்ற முறையில் பாடுவதென்பது, கழுத்திலே கத்தியைக் கட்டிக் கொண்டு, உமக்கு மாருகவுள்ள யான் கொடுக்கும் நிபந்தனேக்கு இணங்கிப் பாடவேண்டும். அவ்வாறு பாடத் தவறிவிட்டால், அக்கத்தியே உம்மைப் பழிவாங்கும். தயார்தானு?"

அவ்வுரையைக் கேட்டுக் கொல்லெனச் சிரித்தான் காளமேகம் "சிரிப்பதெதற்கு?"—என்ருன், அதிமதுரகவி!

"ஓய், அதிமதுர கவிராயரே! அரிகண்டத்தைவிட அரிதான-பெரிதானதொன்று உள்ளதே உமக்குத் தெரியுமா?"

விழிக்கிருன், கவிராயன்!

" அவைக்களப் புலவர்களே! உங்களுக்குத் தெரியுமா எமகண்டமுறை ?"

எல்லோரும் தலைகுனிகின்றனர்.

"எனக்குத் தெரியும், உங்களனைவருக்கும் தெரியாதென்பது! சொல்கிறேன், கேளுங்கள்! திருமலைராயரே! திருட்டுக் கவிகளே! கேளீர்! கேளீர்!! நிலத்திலே ஆழக்குழி தோண்டவேண்டும்! பதினாறடி நீளம், நிச்சயமாக இருக்க வேண்டும்; அதுபோலவே பதினாறடி அகலம் இருக்க வேண்டும்; குழியும் பதினாறடி ஆழம் இருக்க வேண்டும்! வட்டத்துக்கு வட்டம் ஒரு குழியை வெட்டி, அதனுடைய நான்கு மூலைகளிலும் பதினாறடி உயர இரும்புக் கம்பங்களை நட்டுவைத்து, அக் கம்பத்தின் மேலே நான்கு பக்கத்திலும் நான்கு சட்டத்தையும், இடையே (நடுவே) ஒரு சட்டத்தையும் போட்டு, உறிகட்டிவைக்கவேண்டும். அந்தப் பதினாறடி ஆழமுள்ள குழிக்குள்ளே மிகப்பெரிய புளியங் கட்டைகளை நெருக்கமாக அடுக்கிவைத்து, தீமூட்டிவிட்டால் ஓங்காரமாய் எரிந்து கொண்டிருக்கும் தீ. அத் தீயின்கண், ஒரு மனிதனுடைய உயரத்தில் இருப்புக் கொப்பரையை வைக்க வேண்டும்! கொப்பரை முழுதிலும் எண்ணெய் ஊற்றி, அந்த எண்ணெயிலே அரக்கு, மெழுகு, குங்குலியம், கந்தகம், சாம்பிராணிபோன்றவைகளைப் போடவேண்டும். அவை யாவும் நன்ருகக் காய்ந்து உருகிக் கொண்டிருக்கையிலே, நான்கு களிறு (யானை)களை பாகர்கள் இழுத்து வந்து, ஒவ்வொரு கம்பத்திலும் மலைபோல நிறுத்தி வைக்கவேண்டும். பின்புறத்திலே வளையமிட்டு, அவ்வளையத்திலே சங்கிலியைக் கோத்து, சாணைபிடித்துப் பக்குவமாக்கப்பட்ட கூரிய கத்திகளைக் கழுத்தில் நான்கும், அரையிலே நான்குமாகக் கட்டி, கத்திகளின் புறத்திலுள்ள சங்கிலிகளைக் களிறுகளின் துதிக்கைகளில் கொடுத்து, எவனொருவன் பாடமுனைந்து வருகிருனே, அவன் கொப்பரைக்கு நேராகத் தொங்குகின்ற உறியின் நடுவிலே ஏறியமர்ந்து, கேட்போர் வினுவுக்குப் பதிலளிக்க வேண்டும். பாடலாக! அதுவும் கேள்வி கேட்டபோதே— அந்நாழிகையிலேயே தடையின்றிப் பாடி முடிக்கவேண்டும்.

அவ்வாறு பாட்டுப் பாடும்போது பாடுகின்றவர்—கேட்ட கேள்விக்குத் தக்க பதிலற்ற முறையில் நெறி பிறழ்ந்து பாடு வாராயின், கேள்விகேட்போர் பாகனைக் கண்டு கண் அசைப் பாரானல், அவர்கள், தம் கைகளிலுள்ள அங்குசத்தால் யானைகளைக் குத்துவர். தம்முடைய தும்பிக்கையிலே கொடுக்கப்பட்டுள்ள சங்கிலிகளை யானைகள் இழுக்கும். அதனல் பாட உட்கார்ந்தவன் கழுத்து அறுக்கப்பட்டுவிடும். அதன் காரணமாகத் தலை வேருகவும், மற்றதெல்லாம் வேருகவும் ஆகி, கொதிக்கின்ற எண்ணெய்க் கொப்பரை யிலே விழுந்து போகும். இதுவே, எமகண்டம்!" என்று முடித்தான்.

அதைக்கேட்டதும் அந்த அவையிலுள்ள அனைவரும், "ஐயையோ!" என்றனர்.

"அதிமதுரகவியே! நீர் தயார்தானு!"

அகல விழிக்கிருன், அதிமதுரகவி.

"சரி! நான் தயார்! இந்த அவையிலுள்ளோர் அனைவரும் தயார்தானு? அப்படிச்செய்து என்னைப் பாடவைக்க உறுதி யெடுத்துக் கொள்கிறீரா?" என்கிருன் காளமேகம்.

அதிமதுர கவிக்கோர் வாய்ப்பு! அதுவும் காளமேகமே தேடித்தந்த வாய்ப்பு! பழிவாங்கக் கருதிக்கொண்டிருந்த கவிக்கோர் கலங்கரை விளக்கம்! அதிமதுர கவிராயன், திருமலைராயனை நோக்கி, "மன்னு! இன்னும் இரண்டொரு நாளைக்குள் காளமேகம் சொல்லியதுபோல் செய்துதர விழைகிறேன்!" என்கிருன்.

அரசனும் அதற்குத் தலையசைத்து விடுகிருன். அன்றி லிருந்து, எமகண்டத்திற்குரிய முறைகளின் படி எல்லா வேலைகளும் துரிதமாக நடந்து கொண்டிருந்தன.

அரசனுக்கோ மாபெரும் கிளர்ச்சி!

அவைக்களப் புலவர்களுக்கோ மாபெரும் வியப்பு!

அதிமதுர கவிக்கோ சொல்லொணுத இன்பம்! 'செத்தான், காளமேகம்!' என்பது, அவனது முடிவு.

எப்படியோ இரண்டுநாட்களும் இரு நாழிகைபோல் கழிகின்றன.

அதிகாலை!

எமகண்டத்திற்குரிய எல்லாவித ஏற்பாடுகளும் முடிந்து விட்ட இடத்திற்கு காளமேகம் வருகிறான். அன்று, அவையி லிருந்த புலவர்களனைவரும் வருகின்றனர். மன்னனும், தன் அரியாசனத்தில் அமர்கிறான். "தொடங்கட்டும், எமகண்ட முறை!" என, கட்டளையிடுகிறான் காவலன்.

அதிமதுரகவியும் தலைவணங்கி உத்திரவு பெறுகிறான்!

காளமேகம் உறியில்ஏறி அமர்கின்றான்! எரிகின்ற தீக்கு நடுவே நாவலன்! கொதிக்கின்ற கொப்பரை எண்ணெய்க்கு இடையே தடையின்றிப் பாடும் கவி காளமேகம்! நாற்புறத் திலும் சங்கிலிகளை ஏந்திநிற்கும் களிறுகளின் காட்சி! இவை களுக்கு இடையே காளமேகம்!

கத்திக்கு நேரே காளமேகம்!

அப்போது அதிமதுர கவிராயர், "காளமேகா! ககரவர்க் கத்திலே ஒரு பாட்டு:—

40. காக்கைக்கா காகூகை கூகைக்கா காகாக்கை
கோக்குக்கூ காக்கைக்குக் கொக்கொக்க—கைக் கைக்குக்
காக்கைக்குக் கைக்கைக்காகா.

(ப-ரை) காக்கைக்கு ஆகா கூகை-காக்கைக்குப் பெரும் பகையாக உள்ளது கூகை (கோட்டான்); கூகைக்கு ஆகா காக்கை-கூகைக்குச் சற்றும் அடங்கி நடக் காதது காக்கை; கோக்கு-மன்னனுக்கு; கூ-நிலத்தை காக்கைக்கு-உயிரைக் காப்பதற்கு; கொக்குஒக்க - கொக்கைப்போல காலம்பார்த்துக் காரியத்தை (தொழிலை) முடித்தல் வேண்டும்; கைக்கைக்கு - பகைவரை எதிர்த்து; காக்கைக்கு-காப்பாற்றுவதற்கு; கைக்கு ஐக்கு-மிகவும் தேர்ச்சியுடைய முதல் வனுக்கும்; ஆகா-காலக்கணக்கின்றி காரியம் ஆகா.

அஃதோடு அதிமதுரம் விட்டானா? இல்லை, இல்லை! அடுத்து, "தகர வருக்கத்தில்-?" என்கிறான்.

காளமேகமும், 'கேடுகெட்ட கவியே, கேட்டுக்கொள்!' என்பதுபோல்.

41. தத்தித்தா தூதுதி தாதூதித் தத்துதி
துத்தித் துதைதி துதைத்ததா தூதுதி
தித்தித்த தித்தித்த தாதெது தித்தித்த
தெத்தாதோ தித்தித்த தாது.

(ப-ரை) தாது-வண்டு; ('தாதே' எனக்கொண்டு பார்க்க) தத்தி தாது ஊது-விரைவாகச் சென்று மகரந்தத்தை ஊதிப் பார்க்கிருய்; தாது ஊதித் தத்துதி-மகரந்தத் தூளுக்காக மிகவும் நேர்த்தியானது முறையிலே ஊதிப்பார்க்கிருய்; துத்தி-'து''தி' என, ஓசையிட்டு; துதைதி-மகரந்தத் தூளுள்ள மலரை அணுகுகிருய்; துதைந்து அத்தாது ஊதுதி-அருகே சென்று அப்பூவை ஊதுகிருய்; தித்த தித்த தித்தித்த-மிக மிகச் சுவையான; தாது எது—மலரெது?; தித்தித்தது எத்தாதோ-எப்பூவிலே இனிமையான மகரந்தத்தூள் உள்ளது? தித்த தாது-செவ்விய இதழ் எது?

(இ-ள்) "வண்டே! உன்னைக் கேட்கிறேன்...பதில் சொல்! நீயோ மிக விரைவாகச் சென்று மகரந்தத்தை ஊதி ஊதிப் பார்க்கின்ருய்! மகரந்தத் தூளின் மீது மோகங் கொண்டு ஊதிப் பார்க்கின்ருய்! 'து' 'தி' என, ஒலியிட்டவாறு அணுகிச் செல்கிருய்! அருகே சென்று, அப்பூவை (இதழை) ஊதுகிருய்! ஆகவே தான் உன்னைக் கேட்க விரும்புகிறேன். பதில் சொல்? எந்தப் பூவிலே அதிக சுவை உள்ளது? எந்தப் பூவிலே சுவை பயக்கக்கூடிய அளவிலே மகரந்தத்தூள் இருக்கிறது? அழகிய இதழ் எது? எனக்குச்சொல்!" இதுவே, தகரவருக்கத்திலுள்ள பாட்டின் பொருள்.

அரியாசனத்தைவிட்டு அதிமதுர கவியெழுந்து, "இது போதாது! வல்லினத்திலேயும் மெல்லினத்திலேயும் இடையினத்திலேயும் முறையாக மூன்று பாட்டுப் பாடுக!" என்கிருன்.

"கேட்டுக் கொள்ளடா, வல்லின வெண்பாவை" எனச் சீற்றத்தோடு சொல்வதுபோல் சீறியெழுகிருன். அவையி

லுள்ள அனைவரும் பெரும் ஒடுக்கங் கொள்ளுகின்றனர். ஏதாகுமோ, என்னவாகுமோவென்ற ஐயம், மன்னனுக்கே வந்துவிட்டது,

## வல்லினப் பாட்டு

42. துடித்துத் தடித்துத் துடுப்பெடுத்த கோடல்
தொடுத்த தொடைகடுக்கை பொற்போற்—பொடித்துத்
தொடைபடைத்த தோடுடித்த தோகைகூத் தாடக்
கடிபடைத்துக் காட்டித்துக் காடு.

(ப-ரை) கோடல்-வெண்காந்தள் மலரானது; துடித்துத் தடித்து-பருத்தவாறு தோன்றி மின்னி; துடுப்பெடுத்த—அரும்புகள் காட்டின; கடுக்கை-கொன்றையானது; பொன்போல-பொன்னுரம் போல்; தொடை தொடுத்த-மலர்மாலையைத் தொங்கவிட்டது; தொடை படைத்த தோள்-வளைவான வளையலை அழகோடு அணிந்துள்ள தோள்கள்; பொடித்துத் துடித்த-பொடியாகும் படியாகச் சிலிர்த்து நின்றன; தோகை கூத்தாட-தோகையை விரித்தவண்ணம் மயில்கள் ஆடிட; காடுகடி படைத்துக் காட்டித்து-காடானது, பூக்காடென்பதை மணத்தால் பிறருக்குச் சுட்டிக்காட்டியது.

## மெல்லினப் பாட்டு

43. மானமே நண்ணு மனமென் மனமென்னும்
மானமான் மன்னு நனிநாணும்—மீனமா
மானு மினன்மின்னி முன்முன்னே நண்ணினும்
மானு மணிமேனி மான்.

(ப-ரை) மானமே நண்ணு மனம் என்-பெருமையின் மீது வேட்கை கொள்ளாத உள்ளம் எவ்விதமானது? ஆனு மணி மேனி மான்-மதிக்கக்கூடிய கற்களையணிந்து, பொலிவான உருவிலே மான்போல இருக்கின்ற மங்கை; ஆனு மினல் மின்னி-தான் பூண்டுள்ள நகைகளால் எந்நேரமும் ஒளியோடு காட்சி செய்தவாறு; முன் முன்னே நண்ணினும் - அருகே நெருங்கி வந்த போதிலும்; என்மன மென்னும் மான

மான்-என்னுடைய இதயமாகிய பெருத்த ஆணை; மன்ஞ-நிலைபெருதவாறு, நனி நாணும்-அதிக நாணப் பட்டு; ஈனமாம்-இழிந்த நிலையில் தங்கும்.

## இடையினப் பாட்டு

44. விரவலராய் வாழ்வாரை வெல்வா யொழிவா
யிரவுலவா வேலை யொலியே-வரவொழிவா
யாயர்வா யேயரிவை யாருயிரை யீராவோ
யாயர்வாய் வேயோ வழல்.

(ப-ரை) வேலையின் ஒலியே-கடலோசையே! விரவலாய் வாழ் வாரை-ஏனையவரோடு பொருந்தி வாழ மனமின்றித் தனித்து வாழ்வோரை; வெல்வாய்-அடக்கி வெற்றி யுறுவாய்; ஒழிவாய்-நீ விலகுவாயாக; இரவு உல வாய்-நீ இரவிலே உலவ மாட்டாய்; வரவு ஒழிவாய்-வராமல் இருந்திடுவாய்; ஆயர் வாயே-அன்னையின் வாய்ச்சொல்லே; அரிவை ஆருயிரை - நங்கையின் பேருயிரை; ஈராவோ - இரண்டு துண்டாக்கக் கூடியதே; ஆயர்வாய்-இடையர், வாயிலே வைத்து ஊதக்கூடிய; வேய்-குழல்; அழல்-தீயைப்போல துன்புறுத்துவது.

இம் மூன்றுபாடலும் முடிந்தவுடன் மற்ருெரு புலவன் "தூது, பாடுக" என்கிருன்.

காளமேகத்திற்கு முன்னே தூது என்ன செய்யும்? உடனே.

45. தாதிதூ தோதீது தத்தைதூ தோதாது
தூதிதூ தொத்தித்த தூததே-தாதொத்த
துத்திதத் தாதே துதித்துத்தேத் தொத்தீது
தித்தித்த தோதித் திதி.

(ப-ரை) தாதி தூதோ தீது-தோழியின் தூதோ தீதானது; தத்தை தூது ஓதாது-கிளி போய்த் தூது கூருது; தூதி தூது ஒத்தித்த தூததே: பாங்கியின் தூதானது நாட்களைக் கடத்திவைக்கப்படும் தூதாகும்; தேது தித்து தொத்து தீது—இறைவனைத் தொழுது தொடர்ந்தால், நல்ல பயனளிக்காமல் வீணுகப்

போகும்; தாதொத்த துத்தி - பூந்தாதையொத்த தேமல்; தத்தாதே-என்மீது விரைவாகப் பாய்ந்து, மேலும் அதிகமாகாமல்; தித்தித்தது ஒதித்திதி-சுவை யான காதலனுடைய பெயரைக் கூறி என்னைக் காப் பாற்றி வைப்பாயாக.

[இது தலைவி மனத்திற்குள் சொல்லிக் கொண்ட குறை விளக் கம்] இப்படி, எத்தனையோ வினுக்கள்; அவைகளுக்கு விடை கள்! அதிமதுர கவிராயனுக்கும், அங்கிருந்த புலவர்களுக்கும் கேள்வி கேட்க முடியாதவண்ணம் கவிமாரி மொழிந்தான் காளமேகம்!

அதிமதுர கவிராயனுடைய மூக்கு அறுபட்டது!

அங்குள்ள புலவர்களனைவரும் வெட்கித் தலைசாய்த்தனர். திருமலைராயன், "ஆஸ்தான கவிஞரே! அடுத்த கேள்விக் கணை-?" என்று, அதிமதுரத்தைப் பார்த்துக் கேட்டான்.

"அவ்வளவுதான்!" என்று தலையசைத்தான் தருக்கன்! அவன்தான் அதிமதுர கவிராயன்.

காளமேகம், உறியிலிருந்து இறங்கிவந்தார்! அனலின் நிழலிலே இருந்த காரணத்தால், அவர், உடல் முழுமையிலும் கொப்பளம்போல் வியர்வைத் துளிகள் இருந்தன. அவற்றைத் துடைத்தவாறு, "ஏய், அதிமதுரா! ஆணவக்காரனே! இப் போது என்ன சொல்லப்போகிருய்?" என்கிருன்.

"எப்போதும், எதையும் இந்தப் புலவன் சொல்ல மாட் டான்!" என்ருன் அதிமதுரம்.

"சரி, அவை கலையட்டும்!" என்று கூறியபடி திருமலை ராயன் எழுந்து போய்விடுகிருன். அம்மண்டபத்தில் கூடி யிருந்த மக்களனைவரும் கலைந்து போய்க்கொண்டே இருக் கின்றனர்.

காளமேகம், பொறி பறக்கும் கண்களைப் பெற்ருன்! அனை வரையும் உற்றுப் பார்க்கிருன். நீதிக்கும் நேர்மைக்கும் நேர்மாருன மன்னனையும் பார்க்கிருன்!

எரிகின்ற உள்ளம்! அந்த உள்ளத்திலிருந்து பீறிட்டு எழு கின்ற கருத்து! அதுவே பாட்டு...

46. கோள ரிருக்குமூர் கோன்கரவு கற்றவூர்
காளைகளாய் நின்று கதறுமூர்—நாளையே
விண்மாரி யற்று வெளுத்து மிகக்கறுத்து
மண்மாரி பெய்கவிந்த வான்.

(ப-ரை) கோளர் இருக்கும் ஊர்-கொடியவர் கூடியுள்ள ஊர்; கோள் கரவு கற்ற ஊர்-புறங்கூறிப் பேசுவதையும், வஞ்சிக்கும் வழக்கத்தையும் பழக்கமாக வைத்துள்ளவர்களுடைய ஊர்; காளைகளாய் நின்று கதறும் ஊர்-தமக்குள் ஒற்றுமையின்றிப் போரிட்டு கதறும் இளைஞர்களுள்ள ஊர்; நாளையே-நாளையத் தினத்திலேயே ; விண்மாரியற்று—வானமானது மழைபொழியாது; இந்த வான் வெளுத்து - இன்றுள்ள வானமானது நீரின்றி வெளுத்து; மிகக் கறுத்து-மிகவும் கறுத்துப்போய்; மண் மாரி பெய்க-மண்ணையே மழையாகக் கொட்டட்டும்!" என்று கூறிவிட்டு, அங்கிருந்து செல்கிறான்.

ஆண்டுகள் கழிகின்றன!

ஆம்! அவனது வாழ்நாட்களும் கழிந்துகொண்டே வருகின்றன !

ஒரு நாள்! மாலை நேரம்! விலைமகளொருத்தி வீட்டின் வாயிலாகச் சென்று கொண்டிருக்கிறான்! அவனை, அந்தத் திம்மி என்னும் பெயருடையாள் அழைக்கிறாள். அவனும் அந்த அழைப்பிற்கேற்ப உள்ளே செல்கிறான்.

அந்தோ, இரவு முழுமையும் உள்ளேயே இருந்தான்! பொழுது விடியும்போது வெளியே வந்தான். வந்தவன், ஓர் ஆலமரத்தடியில் அமர்ந்து, தன் மனத்தை நோக்கி, "ஏ, மனமே! திம்மி என்கின்ற தெலுங்கு பேசும் பரத்தை, என்னடா, ஏதடா என்பாள்: எங்கிருந்து வருகிறாய் என்பாள் ; ஆனால் நேற்றைய இரவு முழுமையிலும் அவள் பேசிய பேச்சுக்கள் பயனற்றவையேயாகும். இருளால் மூடப்பட்ட அடர்ந்த சோலையைப்போன்ற முடியுடைய அவளிடத்தில் நாம், இரவு முழுவதும் அனுபவித்த துன்பம் கொஞ்சமானதல்ல !" என்று கூறியபடி பெருமூச்செறிகிறான்.

47. ஏமிரா வோரியென்பா ளெந்துண்டி வஸ்தி யென்பாள்
தாமிராச் சொன்ன வெல்லாந் தலைகடை தெரிந்ததில்லை
போமிராச் சூழுஞ் சோலை பொருகொண்டைத் திம்மிகையில்
நாமிராப் பட்டபாடு நமன்கையிற் பாடுதானே!

இப்படிப் பாடுகின்ற நாவலனை-பாவலனைக் காலம் அழைத்தது! மக்கள் கண்ணீர் சிந்தும் காலம் வந்தது!

பாடினான், பாடினான்!
தேடினான், தேடினான்...பலரை!
நாடினான். நாடினான், நாடினான், நல்லோரை!
வாடினான், வாடினான், வாடினான் வாழ்வு முடியும் வரையில் வாடினான்! அப்போதும் பாடினான்...எப்போதும் பாடிக்கொண்டே இருந்தான்.
காலம் கண்ணைத் திறந்தது!
காளமேகத்தின் கண்கள் தாமாகவே மூடிக்கொண்டன!
காலம், தன் கோரக்குகை வாயைத் திறந்தது!
ஞாலப் புகழ்பெற்ற பாவலன். அதற்குள் நுழைந்து விட்டான்.

செய்தி நாடெங்கும் பரவியது? இரட்டையர் ஓடோடி வந்தனர்? எங்கே? இடுகாட்டிற்கு...காளமேகத்தின் பிரேதத்தைச் சுற்றிக்கொண்டிருக்கும் மாந்தர்களைத் தள்ளிக் கொண்டு வந்தனர். கண்டனர் காளமேகத்தை! ஓவெனக் கதறினர்; கண்ணீர் சிந்தினர்; "நகைச்சுவை நாவலரே! நீரா மறைந்தீர்? ஐயகோ. நீரா மறைந்தீர்!" எனக் கதறி அழுதனர்.

"ஆசுகவி அரசே! அகிலமெலாம் தெளிவுபெறப் பொலிவான கருத்தை அள்ளி அள்ளித் தந்த அருந்தமிழ்ப் புலவோய்! பார் புகழக் கொலுவீற்றிருந்த காளமேகப் புலவரே! உம்மையா இம்மண் உண்ணப் போகிறது? இந்தச் கட்டைகளா உம்மை எரித்துச் சாம்பலாக்கப் போகிறது? மண் தின்ற பாணமென்ற வரியை, அருந்தமிழ்ப் பாட்டாக அமைத்துப் பாடிய வாயுடைய ஈடற்ற புலவரே! உம்மை யல்லவா...இந்த விண்நோக்கி எரிகின்ற தீயநெருப்பச்சுவாலை வெந்தழிக்கச் செய்கிறது! மூடாத வாயையா மூடிவிட்டாய்?

காளமேகமே! என் தாகத்தைத் தீர்த்துவைத்த தனிப்பெரும புலவோய்! ஐயகோ!" என்ற கருத்துகளைப் பாட்டிலே வைத்துப் பாடிப் புலம்புகின்றனர்.

48. ஆசு கவியா லகிலவுல கெங்கும்
வீசு புகழ்க்காள மேகமே-பூசுரா
விண்கொண்ட செந்தணலாய் வேகுதே யையையோ
மண்டின்ற பாணமென்ற வாய்.

---

# ஒப்பற்ற ஔவையார்

பன்னிரண்டாம் நூற்ருண்டு! சைவமும் வைணவமும் வழக்கிலே வளர்ச்சி பெற்றிருந்த நூற்ருண்டு! மதத்திற்கு மண்டியிட்டு, மக்களனைவரும் வாழ வேண்டுமென்ற பெரு விருப்பமானது புலவர்களிடம் ஊடாடிக் கொண்டிருந்த காலம்! அந்தக் காலத்திலேதான் நாம் கொண்டுள்ள முயற்சிக்கு உறுதுணையாக வரக் கூடிய ஔவையாரும் இருந்தார். ஔவை மட்டுமா?

ஔவை மட்டுமல்ல, ஒப்பற்ற மாணிக்கங்களெல்லாம் இக்காலத்திலேதான் இருந்தன. குறிப்பாக கம்பர், ஒட்டக் கூத்தர், புகழேந்தி, பொய்யாமொழி போன்ற மெய்த்தமிழ் புலவர்களனைவரும் இருந்த காலமும் இதுவேயாகும். இந்தக் காலத்திலே சந்திரனைப்போன்ற குளிர்ச்சி பொருந்திய பாடல் களும் வெளியாகின!

ஔவை - பெண்பாற் புலவர்! அறிவில் முதிர்ந்த மூதாட்டி! வருங்காலச் சமுதாயம் விழிப்புற்றெழ வேண்டு மென்ற வேட்கையோடு பாடிய பாட்டி! நாட்டின்மீது கண் ணோட்டம் செலுத்தி, நல்ல பல நல்லுரைகளை வழங்கிய பைந் தமிழ்ச் செல்வியார்! கற்ருேர் போற்றும் வண்ணம் நற்றமிழ் நூல்களை நனி சிறந்த முறையிலே, தூய நெறியிலே பாடிய பாமாலைச் செல்வி!

ஆம்! அந்தச் செல்வியார் அளித்த முத்துக்களைக் காணவே இந்தப் பகுதி. நகைச்சுவை பொருந்தப் பாடிய ஒரு சில பாடல்களைக் காண்போம்...சோழ வளநாடு! வேழப் படையுடைய வேந்தன்! அவன் முன்னே அணி அணியாகத் திகழும் தெள்ளு தமிழ்ப் புலவர்கள்! அவர்களிடையே அரசன்! அதுவும் சாதாரண அரசனல்ல; பேரரசன்! புலிச் சின்னத்தைப் பொறித்துப் புவியனைத்தையும் பெற்ற காவலர் களின் வழி வழி வந்த மாமன்னன்! அவன் முன்னே ஔவையார்!

மன்னன் தலைவணங்கினன்!

'மன்னு! நீர் வாழி! நும் கொற்றம் வாழி, வாழி!' என, வாழ்த்துப் பண்பாடினுள்.

"அம்மையே! நீவிர் எந்த ஊர்!"

"சோழர்குலதிலகமே! என்னென்று சொல்லுவேன்? வளைந்த சங்கானது தேனையுண்ணும் பொருட்டுவாய் திறந்துள்ள, நாட்டிற்கு வல்லவனே! காவிரிநதி சூழ்ந்த மண்ணிற்கு மன்னனுக விளங்கும் கோவே! என் கதையை, என்னவென்று சொல்லுவது? உன்னைக் காணும் பொருட்டு பரபரப்போடு நடந்து வந்தேன்; யான் நடந்து வந்த பாதை குறுகியதல்ல; நெடுநீளமானது! அதன் காரணமாகக் கால் வலியால் வேதனைப்பட்டேன். அங்கங்கு தங்கினேன்; இளைப்பாறினேன்! அப்படியிருக்க, எந்த ஊரை, எனக்குச் சொந்த ஊரென்று உன் முன் சொல்வது?" என்கிருர்.

49. காலொந்தே னொந்தேன் கடுகி வழிநடந்தேன்
யான்வந்த தூர மெளிதன்று—கூனல்
கருந்தேனுக் கண்ணுந்த காவிரிசூழ் நாடா
இருந்தேனுக் கெங்கே யிடம்.

(அ-ள்) கால் நொந்தேன், நொந்தேன் - நெடுந்தூரம் நடந்து வந்ததால் கால்நோய்; கூனல்-சங்கு; யான்வந்த தூரம் எளிதன்று-நான் நடந்து வந்தபாதை குறுகியதன்று; நாடா - நாட்டுக்குரியவனே!

இந்தப் பாட்டில், 'இருந்தேனுக்கு எங்கே இடம்?' என்ற இறுதி வரியிலேதான் நகைச்சுவை அமைந்துள்ளது. 'எனக்கென ஏது இடம்?' என்பது போல் ஒலிக்கும் வரி! அதனுலேயே நகைச்சுவை.

அப்பாடலைக் கேட்டு வியந்த வேந்தன், அரியணையைக் காட்டுகிருன். அமர்கிருள், கிழவி! அங்கொருவன் கம்பருடைய கவிதைகளை நீட்டுகிருன். அதை, அரசன் பெற்று, மற்ருெரு புலவரிடம் கொடுத்து, படிக்கச் சொல்லுகிருன். அவனும் படித்து முடிக்கிருன். அதுவும் இராமாயணக்கதை.

'ஆகா! என்ன அழகு! கம்பருக்கு ஈடாக யாருளர்? எவருளர்?' என, மெய்மறந்து புகழலானுன் சோழன்.

ஔவை சும்மா இருப்பாளா? ஏற்கெனவே கம்பனுடைய செருக்கை அடக்கக் காலத்தை எதிர்பார்த்துக் கிடந்த கிழவி யாயிற்றே! ஆகவே, சட்டென்று எழுந்து,

50. விரக ரிருவர் புகழ்ந்திடவே வேண்டும்
விரனிறைய மோதிரங்கள் வேண்டும்—அரையதனில்
பஞ்சேனும் பட்டேனும் வேண்டு மவர்கவிதை
நஞ்சேனும் வேம்பேனு நன்று.

என்று கூறிவிடுகிருள்.

(ப-ரை) விரகர் இருவர்-சூழ்ச்சிக்காரர் இருவர்; புகழ்ந்திடவே வேண்டும் - தன்னைப் புகழ்வதற்காகவே இருக்கச் செய்யவேண்டும்; விரல் நிறைய மோதிரங்கள் வேண்டும் - எல்லா விரல்களிலும் மோதிரங்கள் ஒளி செய்ய வேண்டும்; அரையதனில் - இடுப்பில்; பட்டேனும் பஞ்சேனும் வேண்டும் - பட்டு அல்லது பஞ்சா லான ஆடையைக் கட்டிக் கொண்டிருக்கவேண்டும்; அவர் - (அத்தகைய ஆடம்பரத்தோடு இருக்கின்ற) கவிஞர்கள் எழுதிய கவிதை; நஞ்சேனும் - நஞ்சாக இருந்த போதிலும்; வேம்பேனும்-வேம்பாக இருந்த போதிலும் நன்று - மிகச் சிறந்தது (என்பர்)

'விரல்நிறைய மோதிரங்கள்' என்பதிலும், 'பஞ்சேனும் பட்டேனும்' என்பதிலும் இன்ப நகைச்சுவை அமைந் துள்ளது.

அவ்வெண்பாவைக் கேட்ட மன்னன், "அம்மையே! அருங்கவிப் புலவரே! கம்பரைப் பற்றி, பாட்டில் அமைத்து பாடினீர்கள். உலகில் நடக்கும் உண்மை அது! இல்லை யென்று மறுக்கத் தயாராக இல்லை. ஆனுல், கம்பர் சிறப் புடையவர்! மாபெரிய காவியம் புனையத்தக்க ஆற்றலுடை யவர்..." என்று கூறுகிருன்.

அதற்கு ஔவை, "மன்ன! தூக்கணங் குருவியின் செவ் விய வீடும் (கூடு), மாபெரிய கரையான் புற்றும், தேன்கூடும் சிலந்திக்கூடும், யாவராலும் எளிதிலே செய்து முடிக்கக் கூடியதல்ல! நான் உணருகிறேன். மறுக்க வில்லை. ஆனுல், 'தாம் தான் மிகமிகத் திறமையுடையோம்!' என்ற

ஆணவம், எந்தக் கவிஞருக்கும் வந்துவிடக் கூடாது; நீங்களும் கருதிவிடலாகாது ! எப்பேர்ப்பட்டவரிடத்திலும் ஒரு தனித்திறமை இருக்கத்தான் செய்கிறது. அந்தத் திறமை, அவர்கட்கு எளிமை; செயலில் ஈடுபட்டு செய்து முடிப்பது மிகவும் எளிதானது !'' எனக்கூறும் வகையிலே,

51. வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கரையான்
தேன்சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால்—யாம்பெரிதும்
வல்லோமே யென்று வலிமைசொல வேண்டாங்காண்
எல்லார்க்கு மொவ்வொன் றெளிது.

என்று கூறுகிருள்.

(அ-ள்) வான்குருவியின் கூடு-வானத்திலே பறக்கின்ற தூக்கணங் குருவியின் வீடு; தொல் கரையான்-தொன்மையான கரையான் புற்று; தேன் - தேனீ கட்டும் கூடு; சிலம்பி-சிலந்திக்கூடு;

'யாம்பெரிதும் வல்லோமே என்று வலிமை சொல வேண்டாங்காண் !' என்று இகழ்ந்து கூறுவதில், நகைச் சுவை பொருந்தியுள்ளதைக் காண்க.

அதோடு' அந்தக் கிழவி விட்டாள் என்று யாரும் கருதாதீர்கள்? மேலும் புலமையை வெளிப்படுத்தும் முகத்தான், ''மன்ன ! ஓவியம் வரைவது கைப்பழக்கமாகும்; நாவின் பயிற்சி முறையால் செந்தமிழ்த் தேர்ச்சிதோன்றும், மனக் கட்டுப்பாட்டால் கல்வித் தேர்ச்சிபெறும்; அன்றுடம் நீண்டதூரம் நடந்து பழகினுல், நடைப்பழக்கம் ஏற்படும்; நட்பும், இரக்க குணமும், வள்ளல் தன்மையும் அவரவர் பிறவிக்குணத்தால் அமையும்''என்று கூறுகிருள். பாடல்இதோ!

52. சித்திரமுங் கைப்பழக்கஞ் செந்தமிழு நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையு நடைப்பழக்க நட்புந் தயையும்
கொடையும் பிறவிக் குணம்.

அம்மையே ! இயற்கை அறிவு உடையவர் கம்பர் ! பழக்கத்தால் வந்த ஆற்றலல்ல அவரது பாடல் புனையும் திறம் ! அத்தகைய பெரும்புலவனை வெல்லும் ஆற்றல் யாருக் குளது ?'' என, இகழ்ச்சிக் குறிப்பால் உணர்ந்துகிருள்.

“புவியாளும் புரவலா! ஒன்றைமட்டும் கூறிவிடக் கடப்பாடுடையேன். படிப்பின் நுட்பத்தை அறியாதாரிடத்தில், படித்தவர், தாம் நினைத்ததெல்லாவற்றையும் கூறலாம்; ஆனால், படித்துப் பக்குவம் பெற்றவர் முன்னே வணங்கிப் பணியாமல் யாரும் இருக்கக் கூடாது; இருக்கவும் முடியாது. கிளியானது சிறிதும் வெட்கமின்றி, யாருமில்லாத இடத்தில், பிறர் கற்றுக் கொடுத்ததை-பேச்சைத் திருப்பிக் கத்தும்; ஒரு பெரும்பூனை அதன் முன்னே தோன்றினால் அச்சத்தால் ‘கீச்சு’ கீச்சு, என்று கதறும். தெரிந்து கொள்ளவேண்டிய வற்றுள் ஒன்று” என வெட்டொன்று துண்டொன்றாகச் சொல்கிறாள்.

**53.** காணாமல் வேணதெல்லாங் கத்தலாங் கற்றோர்முன்
கோணாமல் வாய்திறக்கக் கூடாதே—நாணாமல்
பேச்சுப்பேச் சென்னும் பெரும்பூனை வந்தக்கால்
கீச்சுக்கீச் சென்னுங் கிளி.

(அ-பொ) காணாமல்-படிப்பதென்பது இன்னதென்று அறியாதார்; கற்றோர்முன் - படித்தவர் முன்னே; நாணாமல்-வெட்கப்படாமல்; கிளி-கிளியானது; பெரும் பூனை வந்தக்கால்-(கிளி)யின் முன்னே பெரும்பூனை வந்துவிட்டால்.

குறிப்பு:—‘பேச்சுப் பேச்சு என்னும்’ என்பதும், ‘கீச்சுக் கீச்சு என்னும்’ என்பதும் நகைச்சுவைக்குரிய சொற்களாகும். கம்பனானவன் கற்றோரில்லாத இடத்தில், தாம் பேசுவதைப் பேச்சென்றும், பெரும்பூனை யொத்த புலவர் முன்னே, கிளிபோல கீச்சு கீச்சு என்று கத்தும் குணமுடையோன்’ என்று குறிப்பிட்டுள்ள கருத்தில் ஔவையின் புலமையும் நகைச்சுவையுள்ள உண்மையும் வெளிப்படுகிறது.

சோழன் பார்க்கிறான்! வியக்கிறான்! “அம்மையே! தங்கள் பெயர்?”

“ஔவை!”

“ஆ...ஔவை!”

“ஆம்.. ஔவைதான், சோழா!”

அந்தப் பெயர் கேட்ட மாத்திரத்தில் மெய்சிலிர்க்க, அரியாசனத்தைவிட்டு இறங்கிவந்து, "தமிழ்த்தாயே! என்னை மன்னியுங்கள்!" என்றான்.

"மன்னா! உன்னை நான் ஏன் மன்னிக்கவேண்டும்... அதைரியப்படாதே!"

"தமிழ்த் தெய்வமே! வாருங்கள்..." என. அழைத்துக் கொண்டுபோய் தன் அரியாசனத்தின் பக்கத்தில் அமர்த்திக் கொள்கிறான். அப்போது "அறிவிற் சிறந்த அம்மையே! மனிதர்களனைவரும் எதை அழகுப் பொருள்களாகக் கொள்கின்றனர்?" என்கிறான்.

அதற்கு ஔவை, "நற்றமிழ் வளர்க்கும் கொற்றவா! ஆடவனோடு கூடி அனுபவித்த காரணத்தால் இளைத்துப் போன மங்கையும், உடலுக்கு நன்மையாகுமென்றெண்ணி உண்ணாவிரதமிருந்து மெலிந்த தேகமும், உள்ளொன்று வைக்காமல் அள்ளி அள்ளிக் கொடுத்த வள்வலும், போர்க் களத்திலே புறமுதுகு காட்டாது போரிட்டு மாண்ட மாவீரனுக்கு வீரக்கல் நாட்டுவதும் தான், மக்களனைவரும் அழகுப் பொருள்களாகக் கொள்வர்" என்பதை,

54. சுரதந் தனிலிளைத்த தோகை சுகிர்த
விரதந் தனிலிளைத்த மேனி—நிரதம்
கொடுத்திளைத்த தாதா கொடுஞ்சமரிற் பட்ட
வடுத்துளைத்த கல்லபிரா மம்.

(இ-ள்) இளைத்த தோகை-மெலிந்த நங்கை (தோகை என்பது ஈண்டு பெண்ணைக் குறிக்கும்) சுகிர்த விரதம்-நன்மை தரத் தக்க உண்ணா நோன்பு; சமரில்-போரில்; வடு-காயம்; அபிராமம்-அழகான பொருள்.

'விரதந் தனில் இளைத்த மேனி' என்பது தான் கற்கண்டு நகைச்சுவைக்கு உரியது,

இவ்வாறு ஒவ்வொன்றைக் குறித்தும் நெறிமுறையோடு கேட்டு வருகிறான். ஔவையும் அவற்றிற்கான விரிவுரையை விடையாகத் தந்து, அந்த அவையைச் சந்தன மணம் போலாக்குகிறாள். இறுதியாக ஔவையின் பக்கத்திலுள்ள

மூட்டையை நோக்குகிருன். அம்மூட்டையிலுள்ளது என்ன வென்பதை அறிந்துகொள்ள ஆவல் கொள்கிருன். ‘இவ்வளவு ஏன்?’ என்று கேட்டே விடுகிருன்.

அதற்கு அந்த அம்மையார், “சோழ மன்னு, சொல் வதைக் கேள்! பலா மரத்தைக் குறித்துப் பாடியதற்காக, குறமகளொருத்தி மூவுழக்கு தினையரிசி தந்தாள்; அதுவே இது மன்னு! பொன்னுக்குத்தான் பாடுவேன் என்ற பேராணவம் எனக்கில்லை. உப்புக்கும் பாடுவேன்; புளிக்கும் ஒரு கவிதை ஒப்பிக்கும் மனம் எனக்குண்டு” என்கிருள்.

55. கூழைப் பலாத்தழைக்கப் பாடக் குறமகளும்
முழக் குழக்குத் தினைதந்தாள்—சோழாகேள்
உப்புக்கும் பாடிப் புளிக்கு மொருகவிதை
ஒப்பிக்கு மென்ற னுளம்:

‘புளிக்கும்’ என்றதொரு சொல்லிலேதான் நகைச்சுவை யைப் புகுத்தி வைத்துள்ளாள்.

இவ்வகையிலெல்லாம் மன்னன் முன்னேயும் மற்ருேர் முன்னேயும் பாடிப் பாடிப் புகழ்பெற்ற கிழத்தி, பணிந்து வருவோர்க்குப் பாமாலையைப் பூமாலையாக்கிக் கழுத்திலிட்டு அழகு பார்க்கும் அருந்தமிழ்ச் செல்வி!

ஒரு நாள்!

தெருவழியாகச் சென்றுகொண்டிருக்கிருர். “அம்மா!” என்கிற குரல்கேட்டுத் திரும்புகிருன்!

வந்தவன் வணங்கி நிற்கிருன்!

“என்னப்பா, எதற்காக அழைத்தாய்!”

“அம்மையே! இக்கடுமையான வெய்யிலில் கால் நோகச் செல்கிறீரே!”

“பாடிப் பிழைக்கின்ற என்போன்ருேர்க்கு இந்த வெய்யில் தான் நிலவு!”

“அம்மையே! உங்கள் உள்ளக்கிடக்கையிலுள்ள கொந்தளிப்பைக் கண்டு கவலைப்படுகிறேன்!”

“ஐயா! கவலையாலே கவலையைப் போக்க முடியாது!”

“அன்னையே! தயவுசெய்து எங்கள் குடிலுக்குவந்து சிறப்பிக்க வேண்டுகிறேன்!”

"சொன்னதே போதும். நீ வாழ்வாயாக!"

"தமிழமுதே! எங்கள் இல்லத்திலிருந்து உணவருந்தி, களைப்பை ஆற்றிக்கொண்டு நாளை காலை போகலாம் வாருங்கள்!"

"உன் அன்புக்கு என் நன்றி; வருகிறேன்!"

"அம்மையே! வருகிறேன் என்று கூறி முன்னடி எடுத்து வைப்பதேன்?"

"அப்பா! நீயோ என்னைவிட ஏழ்மையானவன்; உனக்குப் பெருந்துன்பச் சுமையாக நான் இருக்கக் கூடாது; போய் வா!"

"அன்னையே! தாங்கள் வரவேண்டுமென்று விழைகின்ற என்னை, இப்படிச் சொல்லி துன்புறுத்தாதீர்கள்; உங்களைப் போன்ற, பொன்னையொத்த புலவர்களுக்குத் தொண்டனாக-பணியாளனாக இல்லாமல் வேறு யாருக்காக இருப்பது? ஆகவே, தடையொன்றும் சொல்லாமல் வருமாறு வேண்டுகிறேன்."

ஔவை தயங்குகிறாள்!

வந்தவன் உள்ளத்தைக் கண்டு உருகி, அவனோடு செல்கிறாள்.

இருவரும் வழிநடந்து வீட்டிற்குச் செல்கின்றனர். தன் வீட்டின் முற்றத்தில் ஔவையை உட்கார வைத்து விட்டு உள்ளறைக்குச் செல்கிறான். தன் மனைவி படுத்துக்கிடப்பதைக் காணுகிறான்; அங்கே சென்று அவளுடைய முகத்தை விரல்களால் வருடுகிறான். காரணமென்ன வென்று யாரும் கேட்டுவிடாதீர்கள்! அவன், அவளை அந்த அளவிற்கு மெருகேற்ற முனைவதற்கு முக்கியமான..."

அவ்வளவுதான்! அதிலே அவளுடைய குண நலனை அறிந்து கொள்ளுங்கள்.

அதோடு விட்டானா அவன்? இல்லை. அவளது கூந்தலைப் பிரித்துப் பெரிய பேனையும் சிறிய பேனையும் எடுத்துக் கூந்தலைக் கோதி முடிக்கிறான்.

அவள் படுக்கையைவிட்டு எழுந்து கொள்கிறாள்!

"என்ன?!" என்கிறாள். அதுவும் அவள் சாதாரண

முறையிலே, 'என்ன ?' என்று கேட்கவில்லை. கோபக் குறியோடே கேட்டாள். அச் சொல்லைக் கேட்டு உள்ளுக் குள்ளேயே திடுக்குற்றுன்.

"அதவது..."

"எதாவது...என்ன...இப்போ ?" என, ஒவெனக் கூச்சலிடுகிருள்.

அவள் வாயைப் பொத்தியபடி "சூ...கூச்சலிட்டு என்னை அவமானப் படுத்தாதே ! ஒரு பெரும் புலவரை அழைத்து வந்துள்ளேன் ! அன்புகூர்ந்து அன்னுர்க்கு விருந்தளிக்க விழைகிறேன் !" என, மிகவும் உருக்கத்துடன் கேட்கிருன்.

அந்த வார்த்தையைக் கேட்டதுதான் தாமதம் ! அவள் புலிபோல் சீறத்தொடங்கினுள். 'ஆகா... ஊகூ' என ஆடிப்பாடத் தொடங்கினுள் ! 'அடபாவி ! உனக்குச் சோறுபோடுவதே பெரிது, அதோடு விருந்தாளியா ? ஆ! என்னதிமிர்...?" என, கண்டபடி கூப்பாடு போடத் தொடங்கினுள் : அதோடு விட்டாளா அவள் ? இல்லை. பழைய முறத்தைக் கையிலெடுத்துக் கொண்டாள் ! போட்டாள்! 'யாரை?'—என்று கேட்டுவிடாதீர்கள்! சொல் வதற்கே அவமானம்! ஓடோடி அடித்தாள். அவனே, அழுதபடி ஓடினுன். இதைப் பார்த்துப் பாடினுர்...யார்? ஔவையார்தான்: வேறு யார் பாடுவர் ?

அங்கம்—1

56. இருந்து முகந்திருத்தி யீரொடுபேன் வாங்கி
விருந்துவந்த தென்று விளம்ப—வருந்திமிக
ஆடினுள் பாடினு ளாடிப் பழமுறத்தால்
சாடினு ளோடோடத் தான்.

'பழமுறத்தால் சாடினுள்'—என்னும் அமைப்பில்தான் மொத்த நகைச்சுவையும் இருக்கிறது. முறம் என்று சொல்லி யிருந்தாலும் பரவாயில்லை. பழையமுறம் என்று சொல்லி விட்டார். அதனுலேயே சிரிப்பு.

அங்கிருந்து சோர்வோடு வந்து கொண்டிருக்கிருள் !

எதிரிலேயே ஒரு காட்சி ! அதுவும் சோகக் காட்சி! போயும் போயும் ஔவை எதிரிலா...அந்தக் காட்சி தெரிய

வேண்டும்! பார்த்தார், ஔவை! உடல் முழுமையும் வியர்த்தது!

மெலிந்த தேகங் கொண்ட பெண்! அவள் கணவன்? அடடா! அவள், அவனிடத்தில் அகப்பட்டுக்கொண்டு படாத பாடு படும் கொடுமையைக் கண்டார். அப்போது மனத்திற்குள், "பட்டுப்போன மரம்போல் உள்ளவளைக் கட்டுப்பாடின்றி அடிக்கிருனே! உலகிலே நான்முகன் தான் அனைவரையும் பிறக்க வைப்பதென்ற ஒரு கதை நிலவி வருகிறது. அது உண்மையேயானுல்...இந்தச் சண்டாளன் தலையிலும் அவன்தான் எழுத்தெழுதி அனுப்பியிருக்க வேண்டும்: அத்தகைய கொடூரமான பிரமன் என் கண்முன்னே இப்போது தோன்றுவானேயானுல் கிள்ளப்பட்ட தலையொழிய நான்கு தலைகள் எஞ்சி உள்ளன. அவற்றையெல்லாம் அப்படியே கிள்ளி, கீழே எறியமாட்டேனே?" எனச்சொல்லிக்கொள்கிருள்.

அங்கம்–2

57. அற்றலை போக அருததலை நான்கினையும்
பற்றித் திருகிப் பறியேனே—வற்றும்
மரமனையாட் கிந்த மகனை வகுத்த
பிரமனையான் காணப் பெறின்.

'திருகிப் பறியேனே' என்பதில் நகைச்சுவை படிந்துள்ளது.

அங்கம்–3

சோழர் அவை!

அங்கே புலவர்கள்! குறிப்பாகச் சொல்லப்போனுல் ஔவையும் கம்பரும்...

இருவரும் கீரியும் பாம்பும்போல் ஆவர். கம்பன் சற்று தலைகனத்தவன்! ஆணவத்திற்கு அடிமையானவன்; யாரேனும் ஒரு கவிதை பாடச் சொன்னுல் பொன் கேட்பான்; கேட்பான் என்பது மட்டுமல்ல; கேட்டே விட்டான்.

சிலம்பி என்னும் பெயருடைய விலைமகள், கம்பனை அழைத்தாளாம்! 'கவிபுனைக' என்ருளாம்! 'ஆயிரம் பொன் தருவாயா?' என்ருனும், 'ஐந்நூறு பொன்னே என்னிடத்தில்

உள்ளது!' என்றுளாம். உடனே, அதை வாங்கிக் கொண்டு,

58. "தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணுவ துஞ்சோழ மண்டலமே..."

எனக் கூறிவிட்டு கம்பி நீட்டினனும்... !

அன்றைய மறுநாள்...!

அந்தப் பரத்தை ஔவையைக் கண்டு, நடந்த நிகழ்ச்சியும், நடத்திக் கொடுக்க வேண்டிய நிகழ்ச்சியையும் முறையோடு சொன்னுளாம்; உடனே, ஔவை.

"......................................................பெண்ணுவாள்
அம்பொற் சிலம்பி யரவிந்தத் தாளணியும்
செம்பொற் சிலம்பே சிலம்பு.

எனப் பாடி முடித்துப் பழங்கஞ்சி குடித்துச் சென்ருள்.

இது நிகழ்ச்சி!

சொல்லப்படும் கதையும் இதுவே!

இவ்வாறு ஔவை பாடிவிட்டு வந்த செய்தி கம்பன் செவிக்கு எட்டிற்று. அவன் உள்ளம், 'ஐயோ, ஐந்நூறு பொற்காசை இழந்தோமே!' என்றது. அதுவே வென்றது. அதனுலேயே ஔவையைச் சொல்லால் கொன்றுவிட வேண்டுமெனக் கருதி இருந்தான்.

அன்றென்னவோ இருவருமே அவையில் இருந்து விட்டனர். தான் எழுதிய இராமாயணக் காவியத்தின் ஒரு பகுதியைப் படித்துக் கொண்டிருக்கையில், ஔவை குறுக்கிட்டுப் பல கேள்விகளைக் கேட்டுக் கம்பனைத் திணர வைக்கிருள்.

அதனுல் அவன் உள்ளத்திலே பெருந்தீ! எப்படியோ சிலேடையிலே பாட்டுப்பாடும் முறைமை அன்று வந்தது. அப்போது, ஆரைக்கீரைக்கும் ஔவைக்கும்' சிலேடையாகப் பாடத்தொடங்கி, ஒரு காலடீ; நாலிலைப் பந்தலடீ" என முடித்தான்.

ஔவை சும்மா இருக்கக் கூடியவரா? அவனது ஆணவத்தை அடக்கும் முறையிலே,

59. எட்டேகால் லட்சணமே யெமனே றும்பரியே
மட்டில் பெரியம்மை வாகனமே—முட்டமேற்

கூரையில்லா வீடே குலராமன் றூதுவனே
ஆரையடா சொன்ன யடா.

என்ருள். அதன் பிறகு...

போச்சு ! கம்பன் பேச்சே போச்சு !

அங்கம்–4

ஒரு முறை !

அப்போது விருந்தினராக ஔவை இருந்தார். எங்கே தெரியுமா ? சோழனுடைய அந்தப்புரத்தில் !

அப்போது தாம் பாடும் பாட்டின் பெருமையை, "மன்ன! மாற்றுப் படையினர் மண்ணுக்குள் போகும்படி, பரந்த கைகளில் உள்ள வேலினுல் போராடுபவனே! களங்கமற்ற காவலனே! நூலாலான புடவை பத்தாயிரம் பொன் பெறத் தக்க அளவிற்குத் தகுதியுடையதாயிருந்தாலும், நான்கே நான்கு திங்களுக்குள் நைந்துவிடும் அல்லது கிழிந்து போகும். என்னுடைய எந்தப் பாட்டும் கிழியாது; அழியவும் அழியாது" என்ற கருத்தை அடக்கி,

60. நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினு நூற்சீலை
நாற்றிங்க ளுளுக்கு ணைந்துவிடும்—மாற்றலரைப்
பொன்றப் பொருதடக்கைப் போர்வே லகளங்கா
என்றுங் கிழியாதென் பாட்டு.

எனப் பாடி முடிக்கிருள்.

'என்றும் கிழியாது என் பாட்டு' என்பது நகைச்சுவைக் குரியது.

அங்கம்–5

ஔவையாரைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டு மானுல் ஆழ்ந்து பார்க்க வேண்டும். நுனிப்புல் மேய்தல் கூடாது! அம்முறைப்படி நோக்கும்போது 'கோடிபொன் பெறும்' என்ற தத்துவம், நமக்கோர் கலங்கரை விளக்கமாகத் திகழ்கிறது.

"நம்மை மதிக்காதவருடைய வீட்டு வாசலை மிதிப்பது தவறு; எக்காலத்தும் நம் கால் பதியாமை நன்று; அந்த உறுதியோடு இருந்தால் அதுவே கோடி பொன் பெறும்,

'உணவருந்திப் போங்கள்...உணவருந்திப் போங்கள்!' என, இன்முகத்தோடு அழைக்காதார் வீட்டிற்குப் போகாமல் இருப்பது கோடிப் பொன் பெறும்;

நாட்டின்கண் வாழும் நல்லோரின் கூட்டுறவிற்காகக் கோடிப்பொன் கொடுப்பது நல்லது; அவ்வாறு கோடிப் பொன் கொடுத்துப் பெற்றவர்களால் ஏற்படும் நன்மைகள் கோடிப்பொன் பெற்றது போன்றதாகும்;

ஒருவர் நமக்குக் கோடானுகோடி பொன்னைக் கொடுத்தாலும், நம்முடைய நாவானது, அப்பொன்னைப் பெற்றதற்காக நேர்மையினின்றும் பிறழாத முறையிலே உண்மை பேசுமானல், ஒரு கோடிப்பொன் பெற்றது போலாகும்''—இது கருத்து. அந்தக் கருத்தை உள்ளடக்கியுள்ள பாட்டு இதோ:—

61. மதியாதார்முற்ற மதித்தொரு காற்சென்று
மிதியாமை கோடி பெறும்;
உண்ணீருண்ணீரென் றுபசரியார் தம்மனையி
லுண்ணுமை கோடி பெறும்;
கோடிகொடுத்துங் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுதல் கோடி பெறும்;
கோடானுகோடி கொடுப்பினுந் தன்னுடையநாக்
கோடாமை கோடி பெறும்.

(அ-ள்) மதியாதார் முற்றம்-மதிப்பளிக்காதவர் வாசல், மதித்தொரு கால் சென்று-தாமாகவே மதித்து ஒரு முறை சென்று; உண்ணீர்-உண்ணுங்கள்; கோடி பெறும் - கோடி பொன் பெற்றதாகும்; குடிப்பிறந்தார்-நல்லொழுக்கத்தோடு பிறந்த பெரியவர்; நா கோடாமை- நாவானது பிறழாமை.

'உண்ணீர், உண்ணீர்' என்ற இரு சொற்களுக்குள் களுக்குள் நகைச்சுவை அமைந்துள்ளது.

ஔவையின் கருத்து?

மாந்தர் தம் கடன், அவர் தம் எண்ணத்தைப் பூர்த்தியாக்குவது!

அங்கம்–6

உயிரோடு போராடிக்கொண்டிருப்பவன், ஒருவன்! அவனுடைய ஆருயிர் நண்பன்! அவன், தன் நண்பனைக் காணுகிருன்; கண்ணீர் வடிக்கிருன். அவ்வீட்டிலுள்ள அனைவரும் வேதனைக்குள்ளாகிக் கிடக்கின்றனர். அவ்வேளை அவ்வழியாக ஔவையார் வருகிருர். புலவர் வருவதைக் கண்ட அவனது நண்பன் ஓடோடி வந்து, ஔவையாரை அழைத்துப்போய்க் காட்டுகிருன். ஔவை பார்க்கிருர். தன்னை அழைத்து வந்தவனை வெளியே அழைத்து வந்து, "நான் சொல்வதைக் கவனமாகக் கேள்...தம்பீ! உடம்பில் வாதம்; அதுவும் தலையாக உள்ளது; அதன் காரணக் குறியாகத் தென்படுவது, நாளை காலை வரையில்தான் உயிரிருக்கும் என்பதுதான்! அந்த வாதத்திற்கு வேரைப்போலுள்ளது, பித்தம்! அதுவும் நோய்க்குத் தலையாக இருக்கிறது; அந்தப் பித்தத்தை வைத்து நோக்கும்போது சிறிது நேரத்திற்கெல்லாம் உயிர் போய்விடும் என்பதை எடுத்துக்காட்டுகிறது; சிலேத்துமநாடி, அவருடம்பில், சிறிதும் சத்தில்லை என்பதை எடுத்துரைக்கிறது; ஆகவே வாதநாடியானது நாளை வரையில் உயிரிருக்கும் என்று சொன்னுலும், மற்றநாடி பிறகென ஓதினுலும், சிலேத்துமநாடி தேகபலமில்லை என்று சொல்லிவிட்டால், எதையும் நிர்ணயித்துச் சொல்லுவதற்கு வழியில்லையப்பா!" என்று கூறிவிட்டு, மனம் நொந்து செல்கிருர். இதன் உட்பொருள், வெண்பாவிலுள்ளது.

62. வாதக்கோ னாளையென்ருன் மற்றைக்கோன் பின்னை
யென்ருன்
ஏதக்கோன் யாதேனு மில்லையென்ருன்-ஓதக்கேள்
வாதக்கோன் சொல்லதிலும் மற்றைக்கோன் சொல்லதிலும்
ஏதக்கோன் சொல்லே யினிது.

வாதநாடி, தன்னுடைய ஆற்றலை இழந்து விடுமாயின் ஒருநாள் வரையில்தான் உயிரிருக்கும்; சேத்துமநாடி அடங்கி ஒடுங்கிவிடுமாயின் ஒரு நாழிகை வரையில்தான் உயிரிருக்கும்; பித்தநாடிஅடங்கிவிட்டால் உடம்பைவிட்டு உயிர் போவதற்கு ஒரே ஒரு நிமிடம்தான்.

## அங்கம் 7

63. வெண்பா விருகாலிற் கல்லானை வெள்ளோலை
கண்பார்க்கக் கையா லெழுதானைப்-பெண்பாவி
பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்கப் பெற்றாளே
எற்றேமற் றெற்றேமற் றெற்று.

(இ-ள்) வெண்பா என்னும் பா வகைப்பாட்டில் ஒன்றை இரு முறை கற்பித்துக் கொடுத்தும் மூளையில் ஏற்றிக் கொள்ளாதவனும், தூய்மையான ஓலையிலே ஒழுங்காக-பிறர் கண்களுக்குத் தெரிகின்ற வகையிலே எழுதத் தெரியாதவனும், உணரும் ஆற்றல் இல்லாதவனேயாவான்! அத்தகையவனை ஈன்ற தாயை 'பெண்பாவி!' என்றே தூற்றுவர். அதோடு விட்டு விடுவார்களா? 'பெற்றாளே பெற்றாள்; பிறர் சிரிக்கப் பெற்றாள்; ஏன் பெற்றாள்? எதற்குப் பெற்றாள்? எதற்குப் பெற்றாள் என்றே தாக்கிப் பேசுவர்.

'பெண்பாவி'—இகழ்ச்சிக் குறிப்பு; 'பிறர் நகைக்க' என்ற அமைப்பு சிரிப்புக்குரியது.

## அங்கம் 8

மனிதர் மனம்!

அப்பப்பா! அந்த மனத்துக்குத்தான் எவ்வளவு துணிச்சல்! ஓடுகிறது; ஆடுகிறது; தேடுகிறது; பாடுகிறது; படிக்கிறது; குடிக்கிறது; அடிக்கிறது; துடிக்கிறது; இன்னமும் என்னென்னவோ செய்துத் தொலைக்கிறது: அம்மனத்திற்கு நல்லது இது; தீயது இதுவென்னத் தெரிவதே இல்லை. எதையேனும் செய்யும்; எவ்விதமேனும் விழிக்கும்; பிறகு, தன்னைத் தானே பழித்துக்கொள்ளும். இது, மனத்தின் செயல்! அந்த மனத்திற்கு அடிமையாகும் மனிதனை என்னவென்று சொல்வது? அவன் செய்யும் சில நேர இழி செயல்களுக்கு என்ன பட்டம் அளிப்பது?

இழி செயல் செய்வது சிலருக்கு வெல்லம்; பலருக்கு வேப்பு. வெல்லமென மனதில் நினைத்திருப்போர் வரிசையிலே ஒருவன். அவன் குடும்பம்!

ஐயகோ! நமக்குப் பரிதாபகரமாக இருக்கிறது! ஆனால். அவனுக்கு—? கரும்பாக இனிக்கிறதே!

ஒருத்தி !

நாள்தோறும் கண்ணீரிலேயே குளிக்கும் குலமகள்! அவளது கணவனோ கணிகையரைக் கண்டு வருபவன்! கண்டுவருவது மட்டுமா? இன்பங்கண்டு விட்டும் வருபவன்! அவ்வளவுதானா? அங்கேயே சில நாளில் தங்கிவிட்டும் வருபவன் !

என்ன செய்வது? கண்டிக்கும் உரிமையைத்தான் அந்தக் காரிகை இழந்துகிடந்தாளே!

அவன் வருவான் !

அவள் பேசாமல் இருப்பாள்! விழிகளைக் குளமாக்கிக் காட்டுவாள்! அவளுக்கு அவனைப்பற்றி அக்கறை என்ன? உணவருந்துவான் ! துண்டை உதறித் தோளில் போட்டுக் கொள்வான்! திரும்பிப் பார்க்காமல் போவான்.

இது அன்றாட நிகழ்ச்சி !!

அவளும் அழுவதை அன்றாட நிகழ்ச்சியாக வைத்திருந்தாள்! ஒரு நாள்! இக் கொடுமையைத் தாங்க முடியாமல் வாய்விட்டே கதறினாள்.

பக்கத்துக் குடிசையிலே குடியிருக்கும் ஔவையார், அங்கிருந்து வந்தார், அவளுடைய கண்களைக் கண்டார். கண் நோயைப்போல் சிவந்து காணப்படுவதைக் கண்டு வெதும்பினார்.

அப்போது, "பெண்ணே! கலங்காதே! எண்ணாயிரம் ஆண்டு 'கிடைச்சி' என்ற செடி நீரில் இருந்தாலும், அதனுள் நீர் ஏறாது; பொன்வளையலை அணிந்துள்ள குல மாதரின் கொங்கையை அன்போடு தழுவாது வாழ்கின்ற வரை 'எற்றேமற்று எற்றேமற்று எற்று' என்று எண்ணிக் கொள்ளம்மா!" என்னும் முகப்பில்,

64. எண்ணா யிரத்தாண்டு நீரிற் கிடந்தாலும்
உண்ணீரம் பற்றாக் கிடையேபோல்—பெண்ணாவாய்
பொற்றொடி மாதர் புணர்முலைமேல் சாராரை
எற்றேயற் றெற்றேமற் றெற்று.

என, வெண்பா பாடி முடிக்கிறார்.

(ப-ரை) உள் நீரம்-உள்ளே ஈரம்; பொற்ருெடி-பொன்னு லான வளையல்; கிடை - கிடைச்சி என்னும் ஒரு வகைச் செடி; புணர்-புணர்வதற்குரிய; எண்ணு யிரத்தாண்டு—எண்ணுயிரம் ஆண்டுகள்.

'எற்ருேமற் றெற்ருேமற் றெற்று'—என்பது நகைச் சுவைக்குப் பொருந்திவருவது.

குலோத்துங்க மன்னன்! ஆம்! அவன் வீராதிவீரன்! வீரர்குல திலகன்! 'தூர விலகி நில்; துள்ளி வருகுது வேல்!' எனச் சொல்லாமல், செயலில் செய்து காட்டும் காவலன்! உறையூர் கோமானும்! மக்கள் உள்ளத்திலே குடியிருக்கும் பூமான்! அவனுக்குத் திருமணம்!

பாண்டியநாட்டுப் பைங்கிளியைப் பக்கத்திலேயே அமர்த் திக்கொண்டு, மீனவன் தந்த சீதனப் பொருளோடு சோழ நாட்டின்கண் நுழைகிருன்.

அப்போது ஒரு காட்சி...!

நகர்வலம் வருகிருன், சோழன்! அவன் மட்டுமா? பைங்கிளிக்குப் பாடம் கற்றுத் தந்த புகழேந்திப் புலவர்! அவர் மட்டுமா? செருக்குப் படைத்த ஒட்டக்கூத்தன். அவனே, அவைக்களப் புலவர்களுக்குத் தலைவன் அவனும் உடன் சேர்ந்து வருகிருன்.

ஔவையார், ஒரு வீட்டுத் திண்ணையிலே இரு கால்களை யும் நீட்டியவாறு உட்கார்ந்து கொண்டிருக்கிருள். ஊர்வலம் வருகிறது; அணிதேர் புரவி அனைத்தும் முன்னே வருகின்றன. அக்காட்சியைக் கண்டு களிப்படைகிருர். அருகே சோழன் வருவதைக் கண்டு, மதிப்பளிக்கும் முறையிலே ஒரு காலை மடக்கிக் கொள்கிருர்: புகழேந்தியும் புரவலனோடு வருவதைக் கண்ணுற்று, வணங்கி, மற்ருெரு காலையும் மடக்கிக் கொள் கிருர். அவர்களுக்கு அடுத்தபடியாக வந்துகொண்டிருக்கும் ஒட்டக் கூத்தனைக் கண்டார்; சட்டென்று இரு கால்களையும் நீட்டிக்கொண்டார்.

இதைக் கண்டான், ஒட்டக்கூத்தன்! சொல்ல முடியாத சீற்றம்! அங்கிருந்து வந்தான்...! "ஏ, கிழவி! என்னைப் பார்த்து விட்டு இரு கால்களையும் நீட்டிய காரணமென்ன?"

"என்னையா ?"

"ஆம், உன்னைத்தான்?"

"உண்மையாகவா ?"

"உன்னைத்தான்; உண்மையாகத்தான் !"

"கூத்தா ! சோழவள நாட்டுக்குச் சிறப்பளிக்கும் மன்னனுக்காக ஒரு காலை மடக்கினேன்; பாண்டிய நாட்டுப் பாவலரான புகழேந்தியின் அறிவிற்காக மற்றொரு காலை மடக்கினேன். உன்னுடைப் ஆணவத்திற்காக, மீண்டும் இரு கால்களையும் நீட்டிக் கொண்டேன். போதுமா ?" என்கிறார்.

அவனுக்கோ சொல்லொணாத ஆத்திரம்! ஆவேசம்!

"ஏ, கிழவி ! இந்த ஒட்டக் கூத்தனைவிட உயர்ந்தவரா புகழேந்தி ?"

"ஆமாம் ! உன்னைவிட குணத்திலும் கல்வியிலும் சிறந்தவர்; செருக்கற்றவர்; பெருமைக்குரியவர். வேண்டுமானால் ஒரு போட்டி ! நீ புகழேந்தியைவிடப் பெரியவனென்பதை நிருபித்துக் காட்ட முனைவாயானால் குலோத்துங்க மன்னனையும், அவன் நாட்டுவளத்தையும் பாவினுள் அடக்கி ஈற்றிலே-மூன்று இடங்களிலே மதி எனும் சொல் வைத்துப் பாடு பார்ப்போம்"

"கிழவி, கேட்டுக்கொள்...இதோ, உனக்கும் உன்னைச் சார்ந்தவருக்கும் வேட்டு !" எனச் சொல்லும் முறையிலே,

65. வெள்ளத் தடங்காச் சினவாளை வேலிக்கமுகின் மீதேறி
துள்ளிமுகிலைக் கிழித்து மழைத்துளி யோடிறங்குஞ் சோணாடா
கள்ளக் குறும்பர் குலமறுத்த கண்டா வண்டர் கோபாலா
பிள்ளை மதிகண்டெம்பேதை பெரியமதி யுமிழந்தாளே.

எனப் பாடி முடிக்கிறான்.

(இ-ள்) கிழவி, கேட்டுக்கொள் ! ஆற்று வெள்ளமானது பெருக்கெடுத்து ஓடிவருகிறது. அவ்வாறு வரும்போது, அதன்மேலே ஏறி, சீற்றங்கொண்டது போல் துள்ளுகிறது. எது ? வாளைமீன்கள் ! அப்படித் துள்ளிய வாளை மீன்கள் வேலி கட்டிப் பாதுகாக்கப் பட்டுவரும் கமுகின் மீது விழுகின்றன; அதோடு அவைகள் விட்டனவா ? இல்லை அங்கிருந்து மேகத்

தைக் கிழித்து, உள்ளே புகுந்து மழை நீரோடு நிலத்துக்கு வருகின்றன. அந்த அளவிற்கு நில வளம், நீர்வளம் பொருந்திய நாட்டுக்குத் தலைவனாக உள்ள சோணாட்டுச் செல்வனே! நெஞ்சிலே வஞ்சம் வைத்துக்கொண்டு போரிடவரும் சிற்றரசர் களைக் கொன்று குவிக்க, கைவாளோடு விளங்கும் வெற்றிவீரா! இடையர்களது பசுக்களைக் காத்த திருமாலைப்போல அழகிய வடிவுடையவனே! பேதைப் பருவத்தையுடைய எனது மகள் பிள்ளை மதி கண்டு, பெரும் மதியையும் இழந்தனளே!" என்றான். [மதி, மதி,-என, இரண்டு இடத்தில் மட்டும் வருவதைக் காண்க. பிள்ளைமதி-பிறைச் சந்திரன்.]

அந்தப் பாடலைக் கேட்டு இடிபோல் சிரித்தாள்! யார்? ஔவையார்!

"ஏன், ஏன்? என்ன குற்றங்கண்டு சிரிக்கிறாய்?" எனக் கேட்கிறான் கூத்தன்.

ஔவை சிரித்துக்கொண்டே, "ஒட்டா! *ஒரு மதி கெட்டாய்?" என்றாள்.

வெட்கித் தலைசாய்த்தான்!

அதோடு, ஔவை விட்டாரா?

"பொய்யில் புலவரே! புகழேந்தியாரே! தாங்கள் பாட விழைகிறேன்" என்றார் ஔவையார்.

"அம்மையே! அப்படியே..." என்று கூறிவிட்டுப் புகழேந்தியார்,

66. பங்கப் பழனத் துழுமுழவர்
பலவின் கனியைப் பறித்ததென்று
சங்கிட் டெறியக் குரங்கிளநீர்
தனைக்கொண் டெறியுந் தமிழ்நாடா!

---

* ஒருமதி கெட்டாய் என்பது ஒரு மதியைச் சேர்க்க விட்டாய்! எனப் பொருளாகும்.

கொங்கைக் கமரா பதியளித்த
கோவே ராஜ குலதிலகா
வெங்கட் பிறைக்குங் கரும்பிறைக்கும்
மெலிந்தப் பிறைக்கும் விழிவேலே !

என, முடிக்கிறுர்.

(இ-ள்) குரங்கு பலாவின் மீது வேட்கை கொண்டு மரத்தின் மேலே ஏறுகின்றது; அவ்வேளையில், சேறு நிறைந்துள்ள நிலத்திலே உழுது கொண்டிருப்போர் மரத்தின் மீது ஏறுகின்ற குரங்கைக் காணுகின்றனர். உடனே, அந்த வயலிலுள்ள சங்குகளைக் கைக்கொண்டு அதன் மேலே வீசுகின்றனர். அச்செயலைப் பார்க்கும் குரங்கொன்று சீற்றங்கொண்டு, பக்கத்திலுள்ள தென்னைமரத்திற்குத் தாவி, அங்கிருந்துகொண்டே இளநீர் காய்களைப் பிய்த்து எறிகின்றது. அத்தகைய அழகு சூழ்ந்த நாட்டிற்கு முதல்வனுக உள்ள தமிழ் நாட்டுத் தலைவனே ! கொங்கு நாட்டு மன்னனை விண்ணுலகிற்கு அனுப்பித்த அரசே ! அரசர்களுக்கு அரசே ! வெம்மையுடைய வெண்ணிலவுக்கும் கரும்பை வில்லாகக் கொண்டவனுக்கும், மெலிந்த பிறைக்கும், (தளர்ந்த தேகத்திற்கும்) விழிவேலே-வேலொத்த விழியையுடையவனே !" என்கிறுர். (வெங்கட் பிறை, கரும்பிறை, மெலிந்த பிறை என, பிறை மூவிடத்தில் வருவதைக் காண்க.)

அவ்வளவுதான் ! சொல்லவும் வேண்டுமா ? மேலும் வெட்கமுற்றுப் பேசாமல் செல்கிறுன்.

இவ்வாறு பாடிப்பாடிப் புகழ் எய்ந்திய புலவரை யார் தான் போற்ற முன்வர மாட்டார் ?

ஆத்திச்சூடி தந்த அருங்குணக் கிழவி !

மூதுரை தந்த மூதாட்டி !

அருந்தமிழ்மாலை ஈன்ற அன்னை ! இப்படிச் சொல்லிப் போனுல் விரியும் ! நகைச்சுவை படரும் !!

நல்லநயம் பொருந்திய நகைச்சுவைக்கு அரசியார் ! ஆம், ஔவையார்...அந்த அன்னையரைப் போற்ருதோர் யாருமில்லை ; எவரும் இருக்க முடியாது.

# புகழேந்தியும் ஒட்டக்கூத்தரும்

பன்னிரெண்டாம் நூற்ருண்டின் இடைக்காலத்தில் வாழ்ந்த இருபுலவர்கள் !

'வெண்பாவிற் புகழேந்தி'—என வெகுவாகச் சிறப்பித்துக் கூறப்படும் புகழேந்தியும், உலா பாடுவதிலே உயர்ந்தவரான ஒட்டக் கூத்தரும் வாழ்ந்த காலம் அது !

புகழேந்தி அடக்கமானவர் !

ஒட்டக்கூத்தர், செருக்குடையவர் ! தம்மைவிட இந்தத் தரணியிலே யாருமில்லை என்கின்ற எண்ணமுடையவர் ! இந்த இருவருடைய வரலாற்றைச் சற்று ஈண்டு காண்போம்.

## புகழேந்தி

நளவெண்பா பாடிய பைந்தமிழ்ப் பாவலர்; சிறந்த நாவலர் ! தொண்டைநாட்டு மண்ணிலே பிறந்தவர்; *முரணை நகர்ச் சந்திரன்சுவர்க்கி என்னும் சிற்றரசனைப் பாடிய பாவலர் !

ஒரு சமயம், பாண்டியனுடைய அவைக்குச் சென்ருர்; அறிவு மழை பொழிந்தார். அதன் காரணமாக அநேக பரிசுகளைப் பெற்ருர். அம்மட்டுமா ? அங்கேயே தங்கவும் செய்தார். பாண்டியன் மகளுக்குத் தமிழ் கற்றுக்கொடுத்தார் ; இன்னமும் சில; எண்ணிக்கையில் பல.

## ஒட்டக்கூத்தர் :

விக்கிரமச் சோழன் காலத்திலே கொலுவிற்றிருந்த கொற்றவர் ; இவர், 'ஈட்டியெழுபது' என்னும் நூலை ஈந்தவர்; கம்பரைக் காப்பாற்றிய வெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளலாரின் தந்தையை ஆதரித்த தகைமையாளர்

மூவருலா ஈன்ற முத்தமிழ்க் காவர் !

நாலாயிரக் கோவை நல்கிய நாவலர் !

பிள்ளைத் தமிழ் மாலை என்னும் நூலை மக்களுக்குச் சோலையாக்கித் தந்தவர்.

---

* உறையூருக்கு அருகாமையில் முரணை நகர் இருந்தது.

தக்கயாகபரணி தந்த செக்கர்வானத்து முழுமதி !

அரும்பைத் தொள்ளாயிரம் அளித்த அறிஞர் ! இன்னமும் எத்தனையோ ! இத்தனையும் அவர் ஈன்றெடுத்த தமிழ்ச் செல்வங்கள் !! 'அவருக்கு நிகர், அவர்தான் என்று சொன்னலும், ஆணவத்தால்—அகங்காரத்தால், 'நிகர்' என்ற சொல்லைத் தகர்த்தெறிந்து கொண்டார்.

என்ன செய்வது ? ஏதேனும் ஒன்றை மனதில் நினைத்துக் கொண்டு வாழும் அனைவருக்கும், இதே இழி நிலைதான்! என்னதான் அறிவுச் செல்வத்தில் மூத்தவராக இருந்தாலும், செருக்காலே அவையாவும் அழிந்து ஒழிந்து விடுகின்றன. ஆனலும் உண்மையென ஒன்று உண்டு அல்லவா? அந்த முறையிலே தான் ஒட்டக்கூத்தர் ஒப்புயர் வற்றவராக இன்றும் இருக்கிருர்; என்றும் இருப்பார்.

இனி, நகைச்சுவைக்குரிய பாடல்களையும், கூத்தருக்கும் புகழேந்திக்கும் நடைபெற்ற நகைச்சுவை வாதத்தையும் காணலாம் வாரீர் ?

கதை தொடங்குகிறது ! இந்தக் கதையிலே வரும் கற்பனையிலே ஏதேனும் குற்றங் காணுவராளுல் நானல்ல பொறுப்பாளி ; இப்படியொரு கதையை முன்னமேயே உருவாக்கியுள்ளவரின் மீதுதான் சாரும். நான் ஒதுங்குவதற்குக் காரணம், அந்தக்காலத்தில் நானில்லை... அவ்வளவுதான்.

"போதுமா, அன்பரே!"

"வாருங்கள், இப்போது...?"

விக்கிரமச்சோழன்! அவனுக்குப் பட்டம்! அதற்காகப் பெருவிழா ! நாடெங்கிலும் குதூகலம்! தெருக்கள்தோறும் பந்தல்! சோழர் குல திலகமாக விக்கிரமச் சோழனை இருக்கச் செய்யும் நாள்... !

ஆம்...அதுவும் வந்துவிட்டது. பொழுது விடிந்தால் முடிசூட்டு விழாதான்...ஆனல், உறந்தையூரைப் பொருத்த மட்டில் இரவு வளராததுபோல் இருந்ததென்றே சொல்ல வேண்டும். அத்தலைநகரில் யாருமே உறங்கவில்லை...அதனுலேயே இராக்காலத்தை அறிய இயலவில்லை; அவரவர் தம் தம் வேலையைப் பெரிதாகக்கொண்டு, கண்ணும் கருத்துமாக உறந்தையூரை உல்லாச நகராக ஆக்கினர்.

எப்படியோ, அங்குள்ளோர் அனைவரும் தலை நகரத்தைக் கலையலங்கார மண்டபமாக்கிவிட்டு அவைக்கு வந்தனர். முடி சூட்டு விழாவும் நடந்தேறியது. அப்போது, அவையிலுள்ள அனைவருமே ஒட்டக்கூத்தர் வாழ்த்த வேண்டுமெனத் தம் விருப்பத்தை அறிவித்தனர்.

அதுகேட்ட கூத்தர்,

67. "ஆடுங் கடைமணி நாவசையாம லகிலமெங்கும்
நீடுங் குடையைத் தரித்த பிரான்"

என்றார்.

அதுகேட்டு விக்கிரமன் வெட்கங்கொண்டான்! 'அறிவை அறிவித்த ஆசிரியரே நம்மைப் புகழ்வது சரியல்ல' என்னும் முறையிலே,

"..................................இந்த நீணிலத்தில்
பாடும்புலவர் புகழொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங்குலோத்துச் சோழனென்றே யென்னை சொல்லுவரே"

என, முடித்தான்!

அதோடு, அந்த அவை கலைந்தது!

சில நாட்களுக்குப்பின் விக்கிரமசோழனின் தந்தையும் காலமானார். அவர் காலமாகுமுன் கூத்தரை அழைத்து, "விக்கிரமனை உம்மிடத்தில் ஒப்படைத்துச் செல்கிறேன்" எனச் சொல்லிக் கண்ணை மூடினார்.

அச்சொல்லின்படி விக்கிரமனுக்குப் பெண் பேச முனைகிறார் கூத்தர். அதுவும் பாண்டியன் மகளைத் திருமணம் செய்து வைக்க நினைத்து, விக்கிரமனிடம் கலந்து ஆலோசிக்கிறார். அவனும் 'சரி' என்கிறான். இது செய்தி.

"இதுவரையிலே நகைச்சுவைக்குரிய நிகழ்ச்சி இல்லையே!' என, நீங்கள் கருதலாம். அப்படிக் கருதுவதிலும் குற்றமில்லை ஆனால், இனி வரப்போகும் நிகழ்ச்சியே நகைச்சுவைக்கு உரியது. கூத்தருக்கும் புகழேந்திக்கும் நடக்கவிருக்கும் நாடகந்தான் இது.

நாம்கூட நாடகத்திற்கோ நிழற்படத்திற்கோ செல்ல வேட்கை கொள்ளுகிறோம். அவ்வாறு எண்ணிய இடத்திலேயே அந்த ஆவல் நிறைவேறுகிறதா என்ன? இல்லையே...!

வழிகடந்து, கொட்டகைக்குள் சென்று உட்கார்ந்துவிட்ட பிறகுதானே நம்முடைய ஆவல் பூர்த்தி ஆகிறது. அப்படித் தான் இதுவும். இதுவரைக்கும் வழிகடந்து கொட்டகைக்கு வந்தீர்கள், பணங்கொடுத்து நுழைவுச் சீட்டையும் பெற்றீர்கள். இனி, அந்தச் சீட்டைக் கிழித்து உள்ளே அனுப்பும் வேலை இருக்கிறது. அது முடிந்தால்... ?

சொல்லத் தேவையில்லையென்று கருதுகிறேன்! எனவே, நுழைவுச் சீட்டைப் பெற்றதுடன், உள்ளே வருவதுபோல் பாண்டிய நாட்டுக்கு வாருங்கள்; அப்போது பாருங்கள்; இதோ...ஒட்டக்கூத்தரும் புறப்பட்டு விட்டார்! நீங்களும் புறப்பட்டுவிடுங்கள்! நானும் புறப்பட்டுவிட்டேன்.

பாண்டிய நாட்டு எல்லை.

அந்த எல்லையின் முன்னே கூத்தர்!

கயற்கொடியைக் கண்ணுற்ருர். அலட்சியமான புன்னகையை வெளிப்படுத்தினர்.

கோட்டை வாயில்! அங்கே காவல் காப்போன்! கூத்தர், தம் வரவை அறிவிக்கச் சொன்னர். அவனும், அதையேற்று, உள்ளே சென்று மீண்டும் வந்தான்.

செய்தியைச் சொன்னன்!

கூத்தர், உள்ளே நுழைந்தார்...! சோழநாட்டு அவைக்களப் புலவர் என்பதற்காக வணங்கி, அமர்வதற்குரிய அரியாசனத்தைக் காட்டினன்.

அமர்ந்த கூத்தர், "மன்ன! எம் மன்னருக்கு உம்முடைய பெண்ணை மணமுடித்து வைக்கவே இங்கு வந்தேன்!" என்ருர்.

அவன் சிரித்தான்; சிரித்தபடி கேட்கத் தொடங்கினன்! "புலவரே! உம்முடைய மன்னருக்கு என்ன தகுதியுள்ளது? என்னுடைய பெண்ணை மணக்கக்கூடிய அளவிற்கு என்ன சிறப்பு உள்ளது? சொல்லுங்கள், கேட்போம்!" என்ருன்.

அவ்வாறு கேட்கும்போது புகழேந்தியும் இருந்தார். அவர்தான் பாண்டிய நாட்டு அவைக்குத் தலைவர்.

வீறுகொண்டெழுந்தார் கூத்தர்! தம்முடைய போர்க் குரலை உயர்த்தத் தொடங்கிவிட்டார்.

இப்போது, நுழைவுச் சீட்டைக் காட்டி, கொட்டகைக்குள் அமர்ந்ததுபோலாகும். முதல் திரை! இதோ...தொடங்கி விட்டார் கூத்தர்! இனிமேல் நகைச்சுவைக்கு குறைவில்லை...

"மன்னா! கூறுவேன் கேள்! உம்மைவிட எம் மன்னர் எவ்வகையிலும் குறைந்தவரல்லர்! சோழனுடைய குதிரைக்கு, உம்முடைய குதிரையானது ஒப்பாக நிற்குமா? எங்கள் காவிரி அன்னைக்கு ஈடாக உங்கள் வைகையாறு பொருந்துமா? இனிப்பான ஆத்திமாலைக்கு முன்னே கசப்பு மிகுந்த வேம்புமாலை நிற்குமா? மங்காத சோழர்குலச் சின்னமான கதிரவனுக்கு, உம்முடைய திங்கள்குலம் ஒப்பாகுமா? ஆகவே வீராதி வீரருக்குத் தலைவனாக இருப்பதற்கு, எம்முடைய தலைவனன்றி நீரா? வெற்றி பொறிக்கும் புலிக்கொடிக்குச் சரியாகுமா மீன்கொடி? உறந்தைக்கு நேராகக் கொற்கையை நிறுத்திவைக்க இயலுமா? இவ்வளவு எதற்கு? சோழ நாட்டிற்கு ஒப்பாகப் பாண்டிய நாடு கிடையாது! ஒப்பாகவும் முடியாது!" என்னும் முகத்தான்,

68. கோரத்துக் கொப்போ கனவட்ட மம்மானை
 கூறுவதுங் காவிரிக்கு வையையோ வம்மானை
ஆருக்கு வேம்புநிக ராகுமோ வம்மானை
 ஆதித்த னுக்குநிக ரம்புலியோ வம்மானை
வீரர்க்குள் வீரனொரு மீனவனோ வம்மானை
 வெற்றிப் புலிக்கொடிக்கு மீன்கொடியோ வம்மானை
ஊருக் குறந்தைநிகர் கொற்கையோ வம்மானை
 ஒக்குமோ சோனாட்டுக்குப் பாண்டிநா டம்மானை

எனக் கூறி முடிக்கிறார்.

அவ்வளவுதான்!

அதைக் கேட்டதுடன் ஆத்திரத்தோடு எழுந்தார் புகழேந்தி!

கண்களிலே பொறிபறக்கத்தக்க முறையிலே, அம்மானை பாடிய கூத்தரைச் சொல்லாலே குத்திக்கொல்ல நின்றார்.

''கூத்தரே! வீண் பெருமை பேசியவரே! உற்றுக் கேட்டுக்கொள்ளும்!: தெரியாமல் பேசிவிட்டதாகக் கருதி, இந்த அகவை உம்மை மன்னித்துவிடுகிறது, நான். உம் முடைய கண்களைத் திறக்கவே நிற்கிறேன். கூத்தரே! நெடுமால் புலி அவதாரமா எடுத்தார்? சிவனுடைய முடியிலே ஏறுவது செங்கதிரோனு? தமிழ் முனிவன் தெளிவு பெற்றது பொதிகையிலா அல்லது சோழனது நேரி மலையிலா? சொல்ல இயலாத செயல்களை, திருவிளையாடல் களாகச் சிவன் செய்தது மதுரையிலா அல்லது உறையூரிலா? ஏடானது ஆற்றை எதிர்த்துக் கரைக்கு வந்து சேர்ந்தது வைகையிலா? காவிரியிலா? நோய்களை நீக்குவதற்குப் பயன்படுவது வேம்பா? ஆத்தியா? கடல் வந்து அடியில் பணிந்தது சோழனிடத்திலா? எம்முடைய உக்கிரகுமார பாண்டியனிடத்திலா? கூத்தரே! நீர் புலவர் என்பதற்காக விட்டுவிட்டேன். பாண்டியர்களுடைய பராக்கிரமத்தை விளக்குவது எளிதான காரியமல்ல; ஆனால், சோழனுடைய செயலை தெரிவிப்பது எளிதிலும் எளிது!'' என்ற வகையிலே,

59. ''திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ வம்மானை
சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ வம்மானை
ஒருமுனிவ னேரியிலோ வுரைதெளிந்த தம்மானை
ஒப்பரிய திருவிளைய ட் டுறந்தையிலோ வம்மானை
கரையெதிரே டேறியது காவிரியோ வம்மானை
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ வம்மானை
பரவை படிந்ததுஞ் சோழன்பதந்தனிலோ வம்மானை
பாண்டியனுர் பராக்கிரமம் பகரெளிதோ வம்மானை''

என்று கூறி முடிக்கிருர்.

கூத்தருக்குப் பேச்சு வரவில்லை; வெறும் மூச்சு மட்டும் வந்து வந்து போய்க் கொண்டிருந்தது. ஒரே அடியாக அடித்துப் படுக்கவைத்து விட்டானே, புகழேந்தி!' என்று எண்ணி வெட்கமுற்ருர்.

கூத்தரின் முகத்தைக் கொற்றவன் கண்டான்! இரக்கம் ஏற்பட்டது; அதோடு ஒருவித அனுதாபமும் பிறந்தது.

"கூத்தரே! நும்முடைய எண்ணப்படி என்னுடைய பெண்ணைக் கொடுக்க உறுதி தருகிறேன்" என்று கூறி, திருமணத்திற்குரிய நாளையும் ஓலையில் பொறித்துத் தருகிறான்.

அதைப் பெற்றுக்கொண்டு அங்கிருந்து சோழன் அரண்மனைக்கு வருகிறார். ஆவலோடும் ஆர்வத்தோடும் எதிர் பார்த்துக் கிடக்கும் மன்னனுக்கு முன்னே ஒட்டக் கூத்தர் வந்து நிற்கிறார். நடந்த நிகழ்ச்சியனைத்தையும் தெரிவித்துத் திருமண ஓலையைக் கொடுக்கிறார்.

அவனும் அவ்வோலையில் பொறித்திருந்த நாளின்படி புறப்படுகிறான். எங்கே? பாண்டிய நாட்டிற்கு! ஒட்டக் கூத்தர் மட்டும் உறந்தையிலே இருந்துவிடுகிறார்.

விக்கிரமச்சோழன் வரும் ஓசைகேட்டு, பாண்டிய மன்னன் எதிர் சென்று அழைத்து வருகிறான்...!

திருமணமும் நடைபெறுகிறது!

பெண்ணுக்குரிய பரிசினமும் வழங்கப்படுகிறது! அந்தப் பரிசுகளுள் புகழேந்தியும் சேருகிறார். அவ்வளவோடு விழா முடிகிறது! உடனே...?

தன் நாட்டு மண்ணை நோக்கிச் சோழன் புறப்படுகிறான். சொல்லொணுத் பரிவாரம்! எண்ணமுடியாத வகையிலே பாண்டியன் அளித்த பரிசுகள்! அதோடு பங்கய முகத் தழகியும், பாவேந்தர் புகழேந்தியும்! வழி நெடுக வாழ்த்துக் கள்! ஆரவார ஒலிகள்' கூடல்மா நகரத்திலிருந்து கூட்டி வரும் பொருள்களைக் கண்டு வியப்புறும் மாந்தர்கள்!

ஆம்! உறையூருக்கு அருகே வந்துவிட்டான்! ஒட்டச் கூத்தரும் எதிர் கொண்டழைத்துவர வந்து விட்டார். வந்தவர் சும்மா இருந்தாரா? மன்னனுக்கும், அவன் மணம் புரிந்து வந்துள்ள மங்கைக்கும் மலர்மாலைகளைச் சூட்டிவிட்டு, அங்கிருந்து வந்துள்ள பரிசுகளின் மீது கண்ணோட்டம் செலுத்துகிறார். அவ்வாறு கண்ணோட்டம் செலுத்திக் கொண்டிருக்கையில் விக்கிரமச்சோழனே பட்டியலைத் தருகிறான்.

அந்தப் பட்டியலைப் பார்த்துக் கொண்டே அரண்மனைக் குள் நுழைகிறார். பரிசினங்களும் பரிவாரங்களும், மன்னனும்

மங்கையும் உள்ளே நுழைகின்றனர். புகழேந்தியும் ஊடே நுழைகிறார்.

அப்போது கூத்தர் காணுகிறார்! நம்முடைய மனத்திற் குள்ளேயே. "புகழேந்தி' இவனல்லவா நம்மை வெட்கித் தலைசாய்க்கச் செய்தான்? இருக்கட்டும்...'' என, முடிவு செய்து கொண்டு பேசாமல் இருந்துவிடுகிறார்!

நாட்கள் கழிகின்றன!

விக்கிரமச் சோழனிடம், தாம் சென்றிருந்தபோது புகழேந்தி இகழ்ந்து கூறியதை விளக்குகிறார் கூத்தர்! 'அப்படியா?' என்ற வகையிலே, முழு உரிமையையும் கூத்தருக்குக் கொடுத்துவிடுகிறார் மன்னர்.

அவ்வளவுதான்! குரங்கு கையில் கிடைத்த பூமாலை போல் நிலைமை ஆகிவிடுகிறது! 'புகழேந்திக்குச் சிறை' இது ஒட்டக்கூத்தர் உத்தரவு.

ஆம்! இப்போது புகழேந்தியின் இருப்பிடம் இரும்பிக் கம்பிகளுக்கிடையே! இருட்டறைக்குள்ளே! உணவுக்கும் வழியில்லை! வாடுகிறார்; பாடுகிறார்...நாடிவருவோர் யாருளர்? தேடிவருவதற்கு எவருளர்?

ஒரு நாள்!

உறையூரைச் சுற்றிப் பார்க்க உலா வருகிறான் விக்கிரம சோழன்! அவனோடு கூத்தர்! அப்போது புகழேந்தியுள்ள சிறைக் கூடத்தின் வழியாகப் பாவலனும் காவலனும் வருகின்றனர்.

புகழேந்தி பார்க்கிறார்? எங்கிருந்து தெரியுமா? சிறைக் கம்பிகளின் பின்னே நின்று!

சோழன் சிறையிலேயுள்ள புகழேந்தியைப் பார்க்கிறான்? உடனே கூத்தரிடம், "கூத்தர் பெருமானே! புகழேந்தி... பெரும்புலவரல்லவா?!' என்கிறான்.

ஒரே சிரிப்பு?

கூத்தரிடமிருந்து வந்த ஆணவச் சிரிப்பு!

"மன்னா! ஆத்திமாலை அணிந்துள்ள அடலேறே! இந்த வரியிட்ட வேங்கை முன்னே புள்ளிமான் போன்ற புகழேந்தி நிற்க முடியுமா? கொழுந்துவிட்டு எரிகின்ற

தீயின் முன்னே, இந்த ஈரமற்றுக் கிடக்கின்ற காய்ந்த காடு நிலைத்து நிற்க இயலுமா? இந்தச் சூருவளிச் சுருவின் முன்னே, எந்நேரமும் சமுத்திரத்துக்குள் அடங்கிக் கிடக்கும் மீன்கள் என்ன செய்ய முடியும்? கதிரவனுடைய ஒளிக்கு முன்னே பனித்துளி நிலைத்து நிற்குமா? இருக்காது... இருக்கவே இருக்காது! புகழேந்தியும் அப்படித்தான்!'' என்கின்ற அடிப்படையில்,

70. ''மானிற்கு மோவிந்த வாளரி வேங்கைமுன்; வற்றிச்செத்த
காணிற்கு மோவிவ் வெரியுந் தணல்முன்; கனைகடலின்
மீனிற்கு மோவிந்த வெங்கண் சுருமுனம்; வீசுபனி
தானிற்கு மோவிக் கதிரவன் முற்றத்தில் தார்மன்னனே!'

என்று பாடி முடிக்கிறார்.

(அ-ள்) மானிற்குமோ—மான் நிற்குமோ; வாள்சுரி வேங்கை-ஒளிபெருந்திய வரிகளையுடைய புலி; செத்தகான்-காய்ந்த காடு; கனைகடலின்-முழங்குகின்ற கடலில்;

'மான் நிற்குமோ, கான்நிற்குமோ, மீன் நிற்குமோ, பனிதான் நிற்குமோ, என்ற சொற்களில் நகைச்சுவை அமைந்துள்ளது.

அதுகேட்டுப் புரவலன் புன்முறுவல் காட்டினான்!

புகழேந்தி தம் குரல் காட்டத் தொடங்கினார்! அந்தக் குரலொலியோடு சிரிப்பொலியும் கலந்து வந்தது!

''மன்னா! இந்தக் கூத்தனின் கொட்டத்தை அடக்க வெட்டிப் பாடவா அல்லது ஒட்டிப்பாடவா?''

விழித்தான் கூத்தன்!

''புகழேந்தியாரே! வெட்டுவது வேண்டா! ஒட்டிப்பாடுவதே சாலச் சிறந்தது!'' என்றான் மன்னன்.

அந்தப் பாடலிலிருந்த கருத்தை அப்படியே மாற்றி, ''மணமிகுந்த மலர்மாலையை அணிந்துள்ள அரசே! கூத்தன் மான்போன்றவன்; அவனை எதிர்க்கும் யான் வரிப்புலியை ஒத்தவன்! அவன் என் அறிவுக்கு முன்னே காய்ந்து நிற்கும் காடு போன்றவன்; நானோ, அந்தக் காட்டையும் எரிக்கின்ற எரிதணல் போன்றவன்; அன்னவன், கடலுக்குள் அமிழ்ந்

திருக்கும் மீன் போன்றவன்; அந்த மீனின் முன்னே சென்று விழுங்கும் சுரு மீனையொத்தவன்; மார்கழித் திங்களிலே பெய்யும் பனியை ஒத்தவன், இந்தக் கூத்தன்; அந்தப் பனியைப் போக்க வந்த பகலவன் யான்!'' என்ற முறையில்,

71. மானவ ஞனந்த வாளரி வேங்கைமுன் வற்றிச்செத்த
கானவ ஞனவ் வெரியுந் தணன்முன் கனகடலின்
மீனவ ஞனந்த வெங்கண் சுருமுனம் வீசுபனி
தானவ ஞனக்க திரவன் ஞேற்ற நற்ருர்மன்னனே

தம்மை வேங்கையாக்கிக்கொண்டு, கூத்தனை மானாக்கித் தம் சிறப்பை எடுத்தோதுகிருர். புகழேந்தி காட்டியுள்ள திருப்பத்திலும் அந்த நகைச்சுவை அமைந்துள்ளது. ஒட்டிப்பாடும் நிலைமை ஏற்பட்டதால்.

அதையே, உதாரணமாக வைத்துப் பாடியுள்ளார். அவ்வாறு படி இருப்பதிலிருந்து அவருடையகருத்து நமக்குத் தெள்ளத்தெளியத் தெரிய வருகிறது.

அந்தப் பாடலிலுள்ள கருத்தைக் காவலன் உணர்ந்திருந்த போதிலும் கூத்தரிடம் வைத்துள்ள பேரன்பால் பேசாமல் போய்விடுகிருன்.

சில நாட்கள் கழிகின்றன!

ஒரு நாள்! இரவு மணி எட்டு இருக்கும்! குகை போல சிறைச்சாலை இருந்தது. புகழேந்தியின் அறைக்கு முன்னேயிருந்த அறையிலிருந்து அழுகையொலி வருவதைக் கேட்டுத் திடுக்கிட்டார். பெரும்புலவர்! 'யார், யார்?' என்ருர்.

அழுகை நின்றது!

அரை விநாடி கழிந்தது!

திரும்பவும் தேம்பித் தேம்பி அழும் ஓசை கேட்டது! ஆம், அவர்களும் 'புலவர்களே! ஆனல், அழுகின்றவரனைவரும் புலவர்களென்பது புகழேந்திக்குத் தெரியாது.

மீண்டும், "யாரப்பா, அழுவது?" என்ருர்.

"நாங்கள்தாம்!" என, ஏகோபித்த குரல் வந்தது!

நாங்கள் தாம் என்ருர் – என்ருர் அவர்.

"புலவர்கள்! கூத்தனல் அடைபட்டுக் கிடக்கிறேம். எதிர்காலத்தில் எங்களுக்குள்ள பரிசைக் கண்டு அஞ்சி அழுகிறேம்!" என்றனர்.

"எதற்காக அடைக்கப்பட்டீர்கள்? என்ன நிகழ இருக்கிறது?" எனக் கேட்டார்.

"புகழேந்தியாரே! புலவர் பெருமானே! நாங்கள் அனைவரும் பரிசில் பெரும் பொருட்டு மன்னன் முன்னே வந்து நின்றோம். எங்களுக்குத் தெரிந்த முறையிலே கவிதை புனைந்து நின்றோம்; அவ்வாறு இயற்றிப் பாடப்பெற்ற பாட்டிலே குற்றம் உள்ளதெனக் கூத்தன் கூறி, எங்களை யெல்லாம் சிறையிலிட்டான். இந்தச் சிறைச்சாலையும் இன்னமும் சில நாட்கள் வரையில் தான். பிறகு—?"

"பிறகென்ன புலவர்களே! சொல்லுங்கள்...சொல்லுங்கள்" என்றார்.

"எங்கள் தலையை அறுப்பதற்கென்று ஒரு நாள் நிர்ணயித்துள்ளான்; அந்நாளில் ஒருவரோடு ஒருவரை இணைத்து, குடுமியோடு குடுமியைக் கட்டி அவைக்கு அழைத்துச் செல்வானாம்! அங்கே பாட்டாலே கேள்வி கேட்பானாம்; அதற்குப்பாட்டின் வாயிலாகவே பதில் சொல்லவேண்டுமாம். அவ்வாறு சொல்லும்போது குற்றமிருந்தால் தலையைக் கொய்துவிடுவானாம்! இது, அவன்கட்டளை...அந்தக்கட்டளை நிறைவேறும் நாளும் வந்து விட்டது; அதனால்தான்..." என, ஓவென அலறினர்.

புகழேந்தி பொங்கியெழுந்தார்!

'கூத்தன்! அவன் குரல்வளையை ஒடுக்கும் வரையிலே என் இமைகள் மூடமாட்டா. கொலை செய்வதைக் கலையாகக் கொண்டுள்ள அக் கயவனைப் பழிவாங்க உங்களையே தயாராக்குவேன்! உங்களிடத்திலேயே அவனைத் தலைவணங்கும்படி செய்வேன்! எனச் சூளுரைத்து, அன்று முதல் அங்குள்ள பல புலவர்களுள் நால்வரைமட்டும் தேர்ந்தெடுத்துக் கொண்டு இலக்கண இலக்கியத்தைக் கற்றுத் தந்து வருகிறான்.

நாள் நெருங்குகிறது!

நால்வரும் நல்ல புலவர்களாகிவிடுகின்றனர்!

சிறைக் கதவு திறக்கப்படுகிறது...! நால்வரையும் அழைத்துப்போகின்றனர். அப்போது புகழேந்தியைப் பார்த்து,

"போகிறோம், புலவரே? வெற்றி, வெற்றி!" என, வீரவொலி காட்டியவாறு அவைக்குச் செல்கின்றனர்.

அங்கே கூத்தன்!

கொலையாளிகள் இருவர்!

அரசன் அரியாசனத்தில்!

"கூத்தர் பெருமானே! ஆரம்பமாகட்டும் அர்ச்சனை!"

அவ்வளவுதான்!

அடலேறுபோல் எழுந்தான் கூத்தன்!

அவன் முன்னே குயவன்! அதுவும் கொலையாளிகளின் பக்கத்தில்!

கூத்தன்,

72. * மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முன்வந் தெதிர்த்தவ னரடா?"

என்றான்.

அதுகேட்டக் குயவன்,

கூனையும் குட முங்குண்டு சட்டியும்
பானையும் வனை யங்குசப் பையல்யான்"

என்றான்.

(அ-ள்) கூனையும்-வளைந்த பானையும்; குடமும்-மண்ணாலே குடமும்; சட்டியும்-சட்டியையும்; அம்-அழகிய; பையல் யான்-இளைஞன் யான்,

எழுத்தனைத்தும் குழைவுடையன: அவன் குயவன் என்பதையும் புலமை பெற்றுவிட்டவன் என்பதையும் அந்த வழி காட்டிற்று. 'முதலிலேயே மூக்கறுத்துவிட்டானே!' என்று எண்ணியவாறு,

"சரி, நீ சற்று விலகி நில்!" என்றான் கூத்தன்.

---

* 'மோனை எதுகை முதலிய தொடையும், தொடை விகற்பமுடைய வெண்பா, அகவற்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற பாவும்; தாழிசை, துறை, விருத்தம் என்ற இனமுமாகிய யாப்பினையுள்ளிட்ட இயல், இசை, நாடகமென மூவகைப் பட்ட தமிழாகிய மும்மதங்களைப் பொழிகின்ற இந்தக் கவியானைக்குமுன் அச்சமில்லாமல் வந்து எதிர்த்து நிற்கின்ற நீ ஆரடா?—விநோதரசமஞ்சரி.

அவன் போனுன்; அந்த இடத்திற்குத் தட்டான் வந்தான்! அவன் விட்டானு?

" நீ யாரடா?" என்ருன்.

அவனே,

73. "திகிரி வட்டக் குடைச்செங்கோ லபயன் செழுஞ்சிலம்பிற்
பகுதி யொட்டக் கூத்தபட்டனை நாணப் பணைக்கவியில்
மிகுத வொட்டத் தட்டிவிட்ட கையோட்டி லுருக்கிக்குத்திப்
புகுத வொட்டித் தட்டிமே லணுகாவண்ணம் போர்
[செய்வனே"

என்ருன்.

(அ-ள்) திகிரி வட்டம்-வட்டமான சக்கராயுதம்; குடை-வெண் கொற்றக்குடை; செங்கோல் - நீதி நெறியை அளந்துகாட்டும் அறம்; செழுஞ் சிலம்பில்-செம்மை பொருந்திய மலைபோன்ற அவையில், பட்டன் - பாவலன்; பணை-கொம்பு; புகுத-நுழைய அல்லது நகை செய்ய; போர் செய்வனே-சொல்லாலே போர் தொடுப்பேனே!

(இ-ள்) வட்டமாகவுள்ள சக்கராயுதத்தையும், வெண் கொற்றக் குடையையும், நீதிநெறியையும் தம்மதாகக்கொண்ட மன்னர் முன்னே, செந்தமிழ்ப் பாவலர்கள் ஒருங்கே கூடியுள்ள, இந்த மாபெரும் அவையின் முன்னே ஒட்டக்கூத்தப் பாவலனை, யான், அந்தப் பாட்டாகிய் கொம்பினுலே அடித்து, ஒடிந்துவிழுந்த சிறிய ஓட்டுத்துண்டில் வைத்து, உருக்கி, ஆணவத்தை அடக்கி, நகை செய்வதற் கொப்பச் சேர்த்து, மறுமுறையும் தவருன சொல்லைச் சொல்லா சொற்போர் செய்வேனே!"

குறிப்பு:—தட்டுகின்ற தொழிலுடைய தட்டான், என்பதைக் கூத்தனுக்குச் சுட்டிக் காட்டும் முகத்தான், நகை செய்யத் தட்டுவதைப்போல எழுத்தைக்கூட்டி, கூத்தனுடைய ஆணவத்தை ஒடுக்குகிருன்.

கூத்தன், கொற்றவனைப் பார்க்கிருன்!

கொற்றவன், கூத்தனைப் பார்க்கிருன்!—இவ்விருவரையும்

அவையிலுள்ளவர்கள் பார்க்கிருர்கள். பார்த்து என்ன செய்ய? அந்தோ, பரிதாபம்தான்!

அதோடு, அந்தக்கூத்தன் அடங்கித் தொலைந்தானு? அதுதான் இல்லையே? எல்லோரிடத்திலும் கெட்ட பெயர் வாங்கவேண்டியதாக இருக்கிறதே! ஆகவே, அந்த இடத்திலே இருந்த தட்டானை விலக்கி அம்பட்டனைக்கொண்டு வந்து நிறுத்தினுன்.

அந்த அம்பட்டனுக்கு உள்ளுக்குள் அச்சம்! அதன் காரணமாகவே அவனுடைய கையும் காலும் நடுங்கின. அவ்வாறு விலவிலத்து நிற்கும் அம்பட்டனைப் பார்த்து, "பொட்டைக்கண் உடையவனே! என்னைப்பார்த்தவுடன் வல்லூறைக் கண்டு அஞ்சும் கொக்கைப்போல் கைகால் நடுநடுங்க-நெஞ்சு தடுமாறி நிற்கக் காரணமென்ன?" என்னும் முறையில்,

74. "விண்பட்ட கொக்கென வெல்லும் வல்லூறின் விலவிலத்து
புண்பட்ட நெஞ்சொடு மிங்குநின்ருய் பொட்டையாய்
[புகலாய்"

என்ருன்.

அதற்கு அவன் சொன்னுன்......?

"கூத்தா! கண்பொட்டையானுலும் கல்விமான்! புலவர்களுக்கு முன்னே நின்று, பண்பமைந்த செந்தமிழ்க் கவிதைகளை நீயும் திடுக்கிடப் பாடுவேன்!" என்கின்ற வகையிலே,

"கண்பொட்டை யாயினு மம்பட்ட ஞன்கவி வாணர் முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப் பாடுவனே"

என்ருன்.

(ப-ரை) கண் பொட்டை - குருடாகிவிட்ட கண்; அம்பட்டன் - அழகிய பாக்களைப் புனைபவன்; அம்+பட்டன்—'அம்பட்டன்' என்று ஆயிற்று.

அவன் போனுன்!

தச்சன் வந்தான்!

"ஓய், கூத்தரே! நீர் பாடியபடி அனைவருமே சந்தக் கவி பாடுவர். அஃதொன்றும் கடினமல்ல! இப்போது யான் சொல் நயமும், பொருள் நயமும் வைத்துப் பாடப்போகின்ற பாட்டில் குறையுண்டெடன யாரேனும் கூறினுல், அவர்களைப் பகை

யாகக் கொள்வேன்! அவ்வாறு கொள்வதோடு மட்டுமல்ல, அவர் தம் முகம் மாறவும் வளமை குலையவும், என் கையிலே யுள்ள மரம் வெட்டும் 'வாய்ச்சி'யினுல் அவர்களது வாயைக் கிழித்து, செவித்துளைகளிலே என் பாவாகிய ஆப்பினை அடித்து வைப்பேன். இது எச்சரிக்கை!'' என்னும் கருத்தை.

75. ''சொன்ன சந்தக் கவியாவருஞ் சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்ன சந்தக் கவியேதென்ற போதி லெதிர்த்தவரை
வன்னசந்தங் கெடவாயைக் கிழித்திந்த வாய்ச்சியினுல்
கன்ன சந்தங் களினிற் கவியாப்பைக் கடாவுவனே.''

என்றவமைப்பில் கூறி முடிக்கிருன்.

(அ-ள்) வன்ன சந்தம் கெட - நிறமும் அழகும் கெடும்படி யாக; கன்ன சந்தங்களினில் - செவித்துளைகளில். வாய்ச்சி - மரஞ்செதுக்குங் கருவி;

அவனுகவே அந்த இடத்தை விட்டு விலகினுன்!

தானுகவே வந்து நின்ருன் கொல்லன்! அப்படித் தானுகவே வந்த அவன், ''செல்லப்பனுடைய மகன் யான்; என் பெயர் திருவேங்கடம்; உலகிற்கே கொல்லன் தொழிலைக் கற்றுக்கொடுத்த ஆசிரியரிடம் பாடம் பயின்றவன்! அந்த கைய ஒப்பற்ற ஆசிரியரிடம் பாடங் கேட்டுப் பாட்டுப் பாடும் என் பாட்டில் குற்றம் இருக்கிறதெனக் குறை சொல்லுபவரை எளிதில் விடமாட்டேன்! குறடுகொண்டு பல்லைப் பிடுங்குவேன்; பருந்தாட்டம் போல் ஆட்டுவேன்; பகைவர்கள் முன்னே பாட்டாகிய இரும்பாணியாலே அல்லும் பகலும் அடித்துத் துன்புறுத்துவேன்'' என்னும் முறையில்,

76. ''செல்லன் புதல்வன் றிருவேங் கடவன் செகத்தருவாம்
கொல்லன் கவியைக் குறைசொல்லு வோரைக்
குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர் முன்னே
அல்லும் பகலுமடிப்பேன் கவியிருப் பாணிகொண்டே!''

என்கிருன்.

இவ்வாறு யாவரும் கூற முனைவதைக் கண்ட கூத்தனுக்குப் பெரிதும் வியப்பு! 'ஒன்றுமே தெரியாமல் இருந்த இவர்களுக்கு எப்படி வந்தது இந்தப் புலமை?' என, தம்மைத்

தாமே கேட்டுக் கொண்டார். விஞடிகள் சில தேவைப் பட்டன; அப்போதுதான் அவருடைய அறிவு வேலே செய்தது! 'புகழேந்தி தந்த புலமை!' என்று புலப்பட்டது. அந்த எண்ணத்தின் பேராற்றலால் அனேவரும் விடுதலே பெற்றனர் புகழேந்தியைத் தவிர!

காலத்தின் வேகத்தில் அரசியருக்குத் தன் ஆசிரியர் சிறையிலுள்ளார் என்ற செய்தி தெரியலாயிற்று. அன்று முதல் அவளுள்ள அந்தப்புரத்திற்கு அரசன் வருவதற்கு வழியில்லாமல் போயிற்று! உட்புறத்தில் தாழ்ப்பாளிட்டுப் பேசாமல் இருந்தாள். அவன் வந்தான்! யார்? அவளுக் குரியவன்; சோழர்குல மணிவிளக்கு! கதவு மூடப்பட்டிருக்கும் கொடுமையைக் கண்டான். பெருங்கவலே கொண்டான். 'இத்தனே நாள் இல்லாத ஒரு செயல் இன்று மட்டும் நிகழக் காரணமென்ன?' என்று எண்ணிஞன். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லே. கூத்தரை அழைத்தான். அவரும் வந்தார்.

"புலவர் பெருமானே! அந்தப் புரத்தின் கதவு தாளிடப் பட்டுள்ளது. கேட்ட கேள்விக்குப் பதிலில்லே. காரணமென்ன?" என்ருன்.

கூத்தருக்கும் புரியவில்லே! ஆழ்ந்த ஆலோசனே! அதனுலும் புலஞகவில்லே. 'என்ன செய்வது? எப்படி இந்த ஊடலே தீர்த்து வைப்பது?' என்ற ஆலோசனே அவருக்கு! ஆனுல்...?

ஒன்றுமே புலஞகவில்லே. ஆனுலும் எதையோ ஒன்றைப் பற்றிச் சிந்தித்தவாறு அமர்ந்திருந்தார்.

"கூத்தரே! இந்த ஊடலேத் தீர்த்து வைக்கத் தங்களால் தான் முடியும். அரசியாரிடம் சொல்லுங்கள்! 'காவலனிடம் கண்ட குறை என்ன?' என்று கேளுங்கள்! சீற்றத்தை மாற்றச் சொல்லுங்கள்!" என்கிருன் அரசன்.

'மன்னன் சொல்லுவதிலும் நியாயம் இருக்கிறது' என்று எண்ணி, அங்கிருந்து அந்தப்புரத்திற்கு வருகிருர். 'அம்மையே!' என்கிருர். 'யாரது?" என்கிருள், அரசி! "நான் தான்...கூத்தன் வந்திருக்கிறேன்!" என்கிருர்.

அந்தப் பெயரைக் கேட்டதுதான் தாமதம். கட்டுக் கடங்காத கோபத்தோடு, பேசாமல் இருக்கிருள். கூத்தரோ, தம் பேச்சைத் தொடங்குகிருர்.

நளின மலர் தேன் போன்ற இன்சொல்லை, எம்மன்னருக்கு அள்ளி அள்ளித் தருகின்ற அணங்கே! இனியேனும், உன் வாயிற் கதவைத் திறந்து விடுவாயாக! அவ்வாறு திறக்க முன்வராமல் போனுல், நானும் பணிந்து கேட்டுக் கொள்வதிலே பொருளில்லாமல் போய்விடும். கருமேகத்திற்குள் புகுந்து கொண்ட பகைவர்கட்கு முன்னே இடிபோல இடித்து, வெற்றி காட்டும் ஞாயிறு போல, வீற்றிருக்கும் ஞாயிறுகுல முதல்வன், உன் வாயிலுக்கு வந்தால், தாமரை யொத்த விரல்கள் கதவைத் தானே திறந்துவிடும்! பிறர் சொல்லாதவாறு செய்!" என்கிருர்.

77. நானே யினியுனை வேண்டுவ தில்லை நளினமலர்
தேனே கபாடந் திறந்திடுவாய் திறவா விடிலோ
வானே றனைய விரவிகு லாதிபன் வாயில்வந்தால்
தானே திறக்குநின் கையித ழாகிய தாமரையே.

இந்தப் பாட்டைக் கேட்டதும் 'குமுறும் எரிமலை வெடிப்பது போல், கொந்தளிக்கும் கடலானது பெருஞ் சத்தம் செய்வது போல், அவளது கோபமானது சட்டென்று ஒன்றைச் செய்து முடித்தது. கூத்தரின் காது செவிடாகும்படி, 'ஒட்டக் கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்' எனப் போட்டாள்.

வெட்கித் தலைசாய்த்தார் கூத்தர்!

மனம் வேதனைப் பட்டது!! பேசாமல் திரும்பி வந்தார்! அவருடைய முகத்தைக் கண்ட அரசன், "புலவரே! என்ன நடந்தது? எதற்காக இந்த முகவாட்டம்?" என்ருன்.

"என்ன சொல்வது, மன்ன! ஒட்டக் கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள் என்று மற்றுமொரு தாளிட்டு உள்ளே சென்ருர்" என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டு அகன்ருர். காரணம், கூத்தருக்கு நன்கு தெரியும். 'புகழேந்தியைச்

சிறையில் போட்டு வைத்திருப்பதால் வந்த விளைவு, என்பதும் புரியும்; அதனுல்தான் பேசாமல் போய்விட்டார்.

அவர் சென்ற அரைமணி நேரத்திற்குப் பிறகு புத்தொளி பெற்ருன் புரவலன். புத்தொளி பெற்ற முகத்தோடு காவலரை அழைத்தான்; புகழேந்தியை விடுவிக்க உத்தர விட்டான். அதோடு அழைத்து வருமாறும் பணித்தான்.

காவலர் சென்றனர்!

சிறையைத் திறந்தனர்!

புலவரை அழைத்து வந்து புரவலன் முன்னே நிறுத்தி விட்டு, அவ்விடத்தைவிட்டு விலகினர்.

"பாண்டிநாடு பெற்றெடுத்த தண்டமிழ்ப் புலவரே! இந்தக் கொடியவனை மன்னித்து விடுங்கள்! பொல்லாத சிறையிலிட்டுக் கொல்லாமல் கொன்ற இந்தக் கொடியவனை மன்னித்து விடுங்கள்!" என்ருன்.

"மன்ன நடந்ததைப் பற்றி நினைந்து நெகிழ வேண்டாம். உண்மைக்கு என்றேனும் ஒரு நாளைக்கு உயர்வு உண்டு என்பது எனக்குத் தெரியும்" என்ருர்.

"புலவரே! தங்களைச் சிறையிலிட்ட செய்தி அறிந்த அரசியர், அந்தப்புரத்திற்குத் தாளிட்டு, நாளெட்டு நாட்களாக என் நெஞ்சை வஞ்சித்து வருகிருள். அருள் கூர்ந்து...?"

"தூது போக வேண்டுமா?"

"கன்னித் தமிழ்ப் புலவரே! அவள் உள்ளத்தின் ஊடலை நீக்கி வைத்தால் போதும்...!"

"அரசே! மனவுறுதி கொள்ளுங்கள்! நல்ல செய்தியோடு வருவேன்!" எனக்கூறி, அந்தப்புரத்திற்கு வருகிருர். அரசன் சொன்னதுபோல் அந்தப்புரக் கதவு மூடிக்கிடப்பதைக் காணுகிருர்.

உடனே, 'மெல்லிய நூலிழை ஒன்றை, இரண்டாகப்பிரித்தது போன்ற மிக நுண்ணிய இடையை உடையவளே! பொன்னுலான குழைகளை ஏந்தியுள்ள செவிகளை தொடுவது போன்ற விழிகளையுடையவளே! உன் சீற்றத்தைச் சற்றுக் குறைத்துக் கொள்வாயாக! உன் அந்தப்புரத்தை நாடி

முன்னொருநாள் மன்னன் வந்துள்ளான். அவன் எத்தகையவன் தெரியுமா? கைம்மாறு கருதாமல் மழை பொழியும் மேகம்போல், கொடை கொடுக்கும் கைகளை யுடையவன், மானத்தையே சிறந்த அணியாகப் பூண்டு இங்கே வந்தவன். அப்படி வந்த அரசனை-உன் அந்தப்புரத்தை நோக்கி ஆவலோடு வந்தவனை மதிக்காத வகையிலே கதவை தாழிட்டுக் கொண்டாய்! உயர் குடியில் பிறந்த உன்னைப் போன்றவர்கள் இரண்டொரு குற்றத்தைகூட மன்னிக்க மாட்டார்களா?'' என்னும் பொருள்பட,

78. "இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்துவள்ளைக்
குழையொன் றிரண்டு விழியணங்கே கொண்ட கோபந்தணி
மழையொன் றிரண்டு கைமாறு பரணனின் வாயில்வந்தால்
பிழையொன் றிரண்டு பொருரோ குடியிற் பிறந்தவரே"

எனப் பாடுகிருர்.

அந்தப் பாட்டைக் கேட்டதுடன் ஓடோடி வந்து தாளிட்டு வைத்திருந்த கதவைத் திறக்கிருள். கைகூப்பித் தொழுதவாறு அரியாசனத்தில் அமர்த்துகிருள்.

"குழந்தாய்! ஞாயிறுகுல முதல்வன் முன்னே பாய்ந்தாயாமே!"

"எங்கள் தலைவ! உங்களை உள்ளன்பின்றிச் சிறைச்சாலையிலிட்டுள்ள செய்தி, என் செவிக்குச் சில நாட்களுக்கு முன்பாகத்தான் தெரியும். அதன் பொருட்டே..."

"ஊடலா?! கூடாது...அம்மையே! கொடிது! ஊடல் தேவைதான், அதற்காக வெறித் தனம்கூடாது. தெரிகிறதா?"

"அறிந்து கொண்டேன் புலவரே!" எனக் குழைந்த முறையில் கூறி, ஆசிரியருக்குச் செய்யத்தக்க பணிகளைச் செய்கிருள். பிறகு—?

பிறகென்ன! ஊடல்போயிற்று! ஒட்டக் கூத்தருக்கு வாடல் தோன்றிற்று...!

அன்றுமுதல் என்றுமில்லாத அன்பு அரசனுக்கு! யார் மீது தெரியுமா? புகழேந்தியின் உள்ளன்பின் மீது. அதோடு

மட்டுமன்றி அவைக்களப் புலவர்களுக்குத் தலைவராகவும் ஆக்கினர்,

கூத்தர், இருக்குமிடம் தெரியாமல் போனர் !

புகழேந்தி, பாவைப் புனைந்து பரணி பாடிவந்தார்.

இது கதை இந்தக் கதையிலே சிற்சில இடங்களில் கற்கண்டொத்த இனிமையும் நகைச்சுவையும் பொருந்தியிருக்கக் கண்டிருப்பீர்கள். கதையிலேயே நகைச்சுவையென்ருல் கவிதையைப் பற்றித் தனித்த முறையிலே விளக்கதேவையா ?

இருக்காது ! இரு புலவர்கள் ! அவர்களிலே அடக்கமானவர் புகழேந்தி ஆணவமிக்கவர் கூத்தர் !

---

## படிக்காசுப் புலவர்

பதினேழாம் நூற்றுண்டில் (1686-1723) வாழ்ந்த புலவர் இவர். வைத்தியநாத நாவலர் அவர்களிடம் பாடங் கேட்டுப் புலவரானவர். சந்தப்பாட்டு பாடும் அளவிற்கு ஆற்றல் வாய்ந்தவர். அவர்தம் புலமைக்கு நகைச்சுவை யூட்டும் முறைக்கு நல்லோர் கடப்பாடு தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். இரகுநாத சேதுபதி வாழ்ந்த காலத்திலிருந்த காயற்பட்டினத்து சீதக்காதியைப் போற்றிய பாவலர். அம் முகம் மதிய வள்ளலின் நிழலிலே களைப்பாறியவர். இதோ, அவர் பாடிய சில பாடல்கள் :

**இரக்கின்ருயே !**

79. அடகெடுவாய் பல தொழிலு மிருக்கக்கல்வி
அதிகமென்றே கற்றுவிட்டோ மறிவில்லாமல்
திடமுளமோ கனமாடக் கழைக்கூத்தாடச்
செப்பிடுவித் தைகளாடத் தெரிந்தோமில்லைத்
தடமுலைவே சையராகப் பிறந்தோமில்லைச்
சனியான தமிழைவிட்டுத் தையலார்தம்
இடமிருந்து தூது சென்று பிழைத்தோமில்லை
என்னசென்ம மெடுத்துலகி லிரக்கின்ருேம் !

(இ-ள்) அட, பாழும் நெஞ்சமே! விரைவிலே நீ கெட்டொழிந்து போவாய்! இந்நாட்டில் எத்தனையோ வகையான தொழில்கள் உள்ளன. அவற்றையெல்லாம் நாம் கற்றுக் கொள்ளாமல், கல்வியே பெரிதென்றெண்ணி அதனைத் தெரிந்து கற்றும் கொண்டோம். என்ன பயன்? பிறரை மயங்க வைக்கும் தொழிலைத் தெரிந்து கொள்ளவில்லை, கம்பத்தின் மீது நின்று ஆட்டங் காட்டும் தொழிலிலும் ஈடுபாடு கொள்ளவில்லை. செப்பிடு வித்தைகளிலும் தேர்வு பெறவில்லை ; கற்கவில்லை. மிகப்பருத்த கொங்கைகளை உடைய விலைமகளிரைப் போலவாவது பிறந்

தோமா ? அதுவு மில்லை! வறுமையைத் தருகின்ற தமிழைக் கைவிட்டு, காதலிக்கும் மடைந்தையிட மிருந்து காதலனிடம் சொல்லும் தூதாக நின்று உயிர் வாழக் கருதினேமா ? ஊம்...அந்த எண்ணமே வர வில்லை என்ன செய்ய ? எந்த வகையான பிறப்பில் பிறந்து இவ்வுலகில் பிச்சையெடுத்து உண்ண நேர்ந்தது? சே ! வெட்கம், வெட்கம் !

(அ-ள்) கழைக்கூத்தாட-உயர்ந்த கம்பத்தின் மீது நின்று வேடிக்கை காட்ட; செப்பிடு வித்தை-கண்கட்டி வித்தை; பருத்த கொங்கை.

'அடகெடுவாய்' என்பதும். 'தடமுலை வேசையரரக' என்பதும், 'தையலார்தம் இடமிருந்து தூதுசென்று' என்பதும் நகைச்சுவைக்குப் பொருந்தி வருவனவாகும்.

## காளத்தியே, கறவை கொடு !

காளத்தி என்கின்ற பெயர் பெற்றவர், பெரியதொரு கொடையாளி-தம்மால் முடிந்தவரையில் பிறருக்கு உறுதுணை யாக இருப்பதைப் பணியாகக் கொண்டவர். அவரிடம் படிக்காசுப் புலவர் போனராம். 'போனவர் என்ன ஆனராம் ?' என்று என்னைக்கேட்டு விடாதீர். இப்போது அவரே பேசுவார், உங்களிடத்தில்ல; கொடைவள்ளலிடத்தில்!

"வல்லமா நகரில் வாழும் காளத்தி வள்ளலே ! உங்களி டத்தில் வெட்கத்தை விட்டுச் சொல்கிறேன். என்னுடைய மனைவி ஒரு குழந்தைக்குத் தாயானள்; அக்குழந்தைக்கோ தாய்ப்பாலில்லை. காஞ்சியாகிலும் கொடுக்கலாமென்ருலோ ஒரு மாதம்கூட நிரம்பவில்லை. எங்கேனும் பசுவின்பால் பிச்சையெடுத்துக் கொண்டு வருவதற்குக்கூட ஆளில்லை. இவ்வகையான கவலைகள் நீங்க, தாங்கள், கன்ருேடு கூடிய கறவையை எனக்களிக்க முடியுமா ?" என்னும் கருத்தடங்க,

80\. பெற்ருளொருபிள்ளை யென்மனையாட்டி யப்பிள்ளைக்குப்பால்
பற்ருது; கஞ்சி குடிக்குந் தரமல்ல; பாலிரக்கச்
சிற்ருளு மில்லை; இவ்வெல்லா வருத்தமுந் தீரவொரு
கற்ருதர வல்லையோ வல்ல மாநகர்க் காளத்தியே.

எனப்பாடி நின்ருர்.

அந்தப் பாட்டைக் கேட்டு அவருள்ளம் உருகியது; கண்ணீர் பெருகியது, புலவரே! கறவையோடுங் கூடிய கன்றுமா வேண்டும்?''

''ஆமாம், வள்ளலே!'' என்ருர் புலவர்.

அப்போதே கொடுத்தார் காளத்தி; அதைப் பெற்று பெரு மகிழ்ச்சி கொண்டார் புலவர் அதற்கு நன்றி தெரிவிக்கும் முகத்தால், ''வல்லமா நகர் காளத்தி வள்ளலே! வாழி, வாழி! இனியும் நான் திரும்பி வருகின்ற வழியிலே விழியைப்பதியவைத்து நிற்கும் என் மனைவி வருந்தாமலும், பிறர் பழித்துப் பேசாமலும், என் மகன் பால் கேட்டு அழாமல் இருக்கவும், என்னை இங்கு அனுப்பிய ஏழையின் மனைவி வெறுங்கையைக் கண்டு கவலை கொள்ளாமலும் அதன் காரணமாக மெலிந்துபோகாமல் இருக்க விரும்பியதைக் கொடுத்தீர். இஃதென்றே போதும்'' என்ற இன்பக் கருத்தை,

81. ''வழிமேல் விழிவைத்து வாடாம லென்மனையாளுமற்ருேர்
பழியாமற் பிள்ளையும் பாலென் றழாமற் பசீரெனுஞ்சொல்
மொழியாம லென்னை வரவிட்ட பாவிமுசித் துச்சதை
கழியாம லாவளித்தாய் வல்லமா நகர்க் காளத்தியே!''

என்ற பாட்டாகப் பாடிச் செல்கிருர்.

'மொழியாமல் என்னை' என்பது நகைச் சுவைக் குரியது.

சீதக்காதி-படிக்காசுப் புலவர் காலத்தில் வாழ்ந்த பெருங் கொடையாளர். வாரி வாரி வழங்கிய வள்ளல்; கேட்போர்க்கு இல்லையென்று சொல்லாது கொடுத்தவர் அவர். அவரிடத்திலேதான் அடிக்கடி பரிசில் பெற்று வருவதை வழக்கமாக வைத்துக் கொண்டிருந்தார். அவர் மட்டுமல்ல! அவ்வூரின் கண் வாழும் அனைவரும்தாம்.

அத்தகைய சீதக்காதியிடம் வந்தார், புலவர். ஒரு தட்டிலே பொன்னையும், மறு தட்டிலே நெல்லையும் வைத்து நிறுக்கும் உயர் பண்பைக் கண்டார். 'இதிலென்ன வியப்பிருக்கிறது!' என்று, உங்களுக்குக் கேட்கத் தோன்றும். உண்மை இருக்கிறது. அப்போது பஞ்சகாலம்! மழையின்மையால் மக்கள் வதைபட்டுக் கொண்டிருந்த நேரம் அது!

அந்தக் காலத்தில்தான் அவர் அப்படி நிறுத்து நெல் கொடுத்தார். அதைத்தான், புலவர், ''மழை தவறிப்போன பஞ்சம் நிறைந்த காலத்திலும் கைம்மாறு கருதாமல் வாரி வாரி வழங்கும் வள்ளலோய்! எவர் தடையாக நின்றாலும் சொந்தமான வேலையிலேயே ஈடுபாடு கொண்ட பெருந்தகைமையோய்! அன்றாடம் அன்னமளிக்கத் தவறாமல், பிறர் எதைச் சொன்னாலும் பிறழாது அவர்கட்குத் தைரியஞ்சொல்லி அள்ளிக் கொடுக்கும் வள்ளலே : சீதக்காதி வரோதயனே!'' என்றார்.

82. ஓர்தட்டி லேபொன்னு மோர்தட்டி லேநெல்லு மொக்கவிற்கும்
கார்தட்டி யபஞ்ச காலத்தி லேதங்கள் காரியப்பேர்
ஆர்தட்டி னுந்தட்டு வாராம லேயன்ன தானத்துக்கு
மார்தட்டி யதுரை மால்சீதக் காதிவ ரோதயனே.

அம்மட்டுமா?

அடுத்த பாட்டும் அவரைப் பற்றியதே!

சீதக்காதியரே! அருளுள்ளம் படைத்துள்ளவரோ! அன்றாடம் உம் மீது அன்பு கொண்டு வருவோர்க்கும், பெரும்புலவர்களுக்கும், உம்முடைய வழிபடும் கரத்திலுள்ள பொருளானது போய்ச் சேரும்; ஆனால், கயவர்களுடைய கரத்திலுள்ள பொருளானது விலைமகளிர்க்கும், அவர்களுக்குத் தூதாக உள்ளவர்களிடத்திற்கும், பரத்தைக்கும், பரத்தையின் பிரியத் தோழிக்கும் உதவியாக நிற்கும்.'' என்னும் அளவிலே,

83. ''நேசித்து வந்தகவி ராசர்தங்கட்கு நித்தம் நித்தம்
பூசிக்குநின்கைப் பொருளொன்றுமே மற்றப்புல்லர் பொருள்
வேசிக்குஞ் சந்துநடப் பார்க்கும் வேசிக்கு வேலை செய்யும்
தாசிக்கு மாகுங் கண்டாய் சீதக்காதி தயாநிதியே!'

என்று பாடினர்.

(அ-ள்) கவிராசர்-கவியரசர்; பூசிக்கும் நின் கை - வணங்கும் உன் கை; நேசித்து - அன்புகாட்டி.

வேசிக்கும், *சந்து நடப்பார்க்கும்' என்பது மறை பொருளாக நின்று நகைச்சுவையை அளிக்கக்கூடியது.

---

*சந்து-தூது, சமாதானம்; பகைமையைப் போக்கிக் கூட்டுறவு ஏற்படுத்துவதற்குச் சந்து செய்தல் என்று பெயர்

அந்தப் பாட்டின் தொடர்ச்சியாக மற்ருெரு பாட்டும் உள்ளது:—

''பிறருக்கு உதவி புரிய கயவர், இம் மண்ணிலே இருந்தாலும் ஒன்றே; இறந்தாலும் ஒன்றே; எட்டிமரம் காய்த்துப் பயனென்ன? காய்க்காமல் இருந்தால்தான் என்ன? ஒன்றுமில்லை! யாருக்கும் பயன்படாத கனி அது, 'ஐயா! உம்மை அணுகி வந்துள்ளேன்!'' என்று இரப்போர்க்கு, இல்லையென்று சொல்லாது கொடுக்கும் வள்ளல் ஒருவரே! அவரே சீதக்காதி. அவர்தான் தம் கையால் இடைவிடாது பொற்காசுகளை அள்ளி அள்ளித்தருபவர். அவருக்கு நிகராக எவருமில்லை'' என்பதை,

84. ஈயாத புல்ல ரிருந்தென்ன போயென்ன? எட்டிமரம்
காயா திருந்தென்ன காய்த்துப் பலனென்ன? கைவிரித்துப்
போயா சகமென் றுரைப்போர்க்குச் செம்பொன் பிடிபிடியா
ஓயாம லீபவன் வேள்சீ தக்காதி யொருவனுமே.

என்று கூறினுர்.

குறிப்பு:—'ஈயாத புல்லர்' என்ற சொற்ருெடர் நகைச்சுவையோடு அமைந்துள்ளது.

புலவருடைய புலமையைக் கண்டு புளகாங்கித மடைந்தார் சீதக்காதி, வேண்டிய பரிசினம் கொடுத்தார். கொடுக்கும்போது சீதக்காதியின் இருகரத்தையும் கண்டார். ''கண்ட நினைவோடு வழியில் வந்து கொண்டிருக்கிருர்.

அவ்வாறு. வந்துகொண்டிருக்கும் வழியிலே ஒருவர்! அவரும் புலவர்! அயலூர்க் கவிராயர். அவர். ''படிக்காசுப் புலவரே! சீதக்காதியை நாடிச் செல்கிறேன். எனக்கு ஏதேனும் பொருள் வழங்குவாரா?'' என்ருர்.

அதற்கு அவர், ''கவிராயரே! சூரிய காந்திப் பூ கதிரவனுடைய வெப்பத்தாலே சிவந்தது; பெண்களுடைய கூரிய கண்கள், ஆண்களோடு சேர்ந்து கலவி செய்ததால் சிவந்தன; நம்மைப்போன்ற பாவாணர் கண்கள், பழந்தமிழ் இலக்கியங்களை ஆய்ந்து பார்த்ததால் சிவந்தன; ஆனுல், சீதக்காதியின் கைகளோ அன்ருடம் கொடுத்துக் கொடுத்து

சிவந்துபோயின. நேரில் சென்ருல் நீர் காணலாம்.'' என்று சொல்லி அனுப்புகிருர்.

85. காய்ந்து சிவந்தது சூரியகாந்தி கலவியிலே
தோய்ந்து சிவந்தது மின்னுர்நெடுங் கண்கள்தொல் பலநூல்
ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்ச மனுதினமும்
ஈந்து சிவந்தது மால்சீதக்காதி யிருகரமே.

'கலவியிலே தோய்ந்து சிவந்தது' என்ற வரி, நகைச்சுவைக் குரியது.

ஒரு நாள்! எதிர்பாராதவிதமாக ஏற்பட்ட இடர்ப்பாட்டால் வள்ளலை அணுகிவந்தார், புலவர். அப்போது, விலைமகளொருத்தி தன் குறையை வள்ளலாருக்கு விளக்கி, வேண்டிய பொருளைப் பெற்றுக்கொண்டு போவதைக் கண்டார். அவ்வளவுதான்! அந்நேரத்திலேயே அதைப் பாட்டாக்கி வள்ளலிடம் கொடுத்தார். அவர் படிக்கத் தொடங்கினுர்.

86. தினங்கொடுக்குங் கொடையானே
தென்காயற் பதியானே சீதக்காதி
இனங்கொடுத்த வுடமையல்ல
தாய்கொடுத்த வுடமையல்ல வெளியாசை
மனங்கொடுத்து மிதழ்கொடுத்து மபிதானந்
தனைக்கொடுத்து மருவிரண்டு
தனங்கொடுத்த வுடமையெல்லாங் கள்ளர்கையிற்
பறிகொடுத்துத் தவிக்கின்றேனே.

(இ-ள்) தினந்தோறும் இரந்து வருவோர்க்கு வழங்கும் வள்ளலே! தென்காயல் பட்டினத்திற்குப் பதியே! சீதக்காதி! வள்ளல் பெருமானே! என் குறையைக் கேளுங்கள்! எனக்கிருந்த செல்வமெல்லாம் சுற்றத்தார் கொடுத்ததல்ல; தாய் கொடுத்தச் சொத்துமல்ல; ஏழையாகிய யான், வேறு வழியற்ற நிலையிலே பிறருடைய வேட்கைக்கு என் நெஞ்சைக் காணிக்கை யாக்கினேன்; வந்தோர்க்கெல்லாம் என் உதட்டைக் கொடுத்தேன்; வெட்கத்தை விட்டுச் சொல்கிறேன். மர்மமான இடத்தைக் கொடுத்தேன். தழுவத் தக்க கொங்கைகளை அன்னவர்க்கு அர்ப்

பணித்தேன். இப்படியெல்லாம் கொடுத்துச் செல்வம் சேர்த்தேன். அந்தச் செல்வத்தைக் கள்வன் கவர்ந்து சென்று விட்டான். அவனிடத்தில் பறிகொடுத்துவிட்டுக் கண்கலங்கி நிற்கிறேன்.

இந்தப் பாடலே நகைச்சுவைக்கு உரியது. வெட்கத்தை விட்டவள் விலைமகள் என்பது அனைவருக்கும் தெரிந்தவொன்று. ஆனால் சீதக்காதியினிடம் வந்தவளோ எல்லாவித வெட்கத்தையும் விட்டு விட்டவள் என்பதை, இப்பாடல் உணர்த்துகிறது. அதுவே நகைச்சுவை.

இவ்வாறு செவ்விய முறையிலே பாடுபவருக்கும் பரிசு கொடுப்பவருக்கும் இடையே நடைபோட்டு வந்தது காலம். அந்த நடையில்தான் எவ்வளவு மிடுக்கு! அப்பப்பா! சொல்லால் சொல்லக்கூடியதா? எதற்காக வந்தது தெரியுமா? சீதக்காதியின் உயிரைக் கொத்திக்கொண்டு போக! ஆம்... அதற்கும் உதவி செய்ய எண்ணினார், தம் உயிரைக் கொடுத்து உலகைவிட்டுப் பிரித்தார். ஆனால்...?

அந்தோ! பரிசில் பெற வருவோர்க்குப் பெருந்துன்பம்; சொல்லொணா துக்கம்!

சீதக்காதி இறந்தார்! காட்டுத்தீயைப் போல நாடெங்கும் பரவியது! அந்தந்த ஊரிலுள்ள அருங்கவிப் புலவரெல்லாம் அழுத வண்ணம் காயல் பட்டினத்தை நோக்கி வந்துகொண்டிருக்கின்றனர். படிக்காசுப் புலவருக்கும் செய்தி எட்டுகிறது. சொல்லவும் வேண்டுமா? 'கோ'வெனக் கதறியபடி இடுகாட்டிற்கு வருகிறார்.

வந்தவர், "விண்ணுக்கும் மண்ணுக்கும் மன்னனாக விளங்கும் புகழோய்! உன் உடல் உயிரை இழந்ததா? மறந்துங்கூட பிறருக்கு அரைக்காசு கொடுக்க மனமற்ற மனிதர்கள் இருந்தென்ன? இறந்தென்ன? இவ்வுலகைவிட்டு, வேறு எவ்வுலகிலோ வாழ்கின்ற சீதக்காதி வள்ளலே! காயற் பட்டினத்துக் காவலா! மீண்டும் நீர் உயிர்பெற்று வந்தாலன்றி புலவர்களுக்கு வழியில்லை: வறுமை நீங்க வகையில்லை" எனச் சொல்கிறார்.

37. மறந்தாகிலு மரைக்காசுங் கொடா மடமாந்தர் மண்மேல்
இறந்தாவ தென்ன இருந்தாவ தென்ன இறந்துவிண்போய்ச்
சிறந்தானுங் காயற் றுரைசீதக்காதி திரும்பி வந்து
பிறந்தாலொழியப் புலவோர் தமக்குப் பிழைப்பில்லையே!

'மறந்தாலும் அரைக்காசும் கொடா மடமாந்தர்' என்னும் வரியில், இழிவுச் சிறப்பால் நகைச்சுவை இன்பம் இருக்கிறது.

அவருடைய மனம் அந்த அளவோடு அமைதி கொள்ளவில்லை. "பொருளீட்டும் முறையிலே பெயர்பெற்ற பெருவள்ளலே! காயற்பட்டினத்தில் வாழ்ந்து, பிறரையும் வாழவைத்த சீதக்காதி வள்ளலே! சிறப்புப் பொருந்திய வச்சிர நாட்டுக்குத் தலைவனாக விளங்கியவனே! புகழென்னும் பெருந்தூணை நிலைநாட்டிவிட்டுச் சென்றேனே! தமிழ்ப் பாவலர்களையெல்லாம் ஓடெடுத்து உண்ணச் செய்து அவரவர் வாயிலே ஒரு பிடி மண்ணைக் கொட்டிவிட்டுச் சென்று விட்டாயே! பாரீர். புலவர்காள்! நம்மையெல்லாம் இரந்து உண்ணச் செய்துவிட்டு மண்ணுக்குள் புகுந்து கொண்ட சீதக்காதியைப் பாருங்கள்! கல்லறைக்குள்ளே நுழைந்து கொண்டு, நம்மையெல்லாம் அழவைக்கும் வள்ளலைப் பாருங்கள்!" என்று கண்ணீர் வடித்தபடி கூறுகிறார்.

38. தேட்டாளன் காயற்றுரை சீதக்காதி சிறந்தவச்ர
நாட்டான் புகழ்க்கம்ப நாட்டிவைத்தான் தமிழ் நாவலரை
ஒட்டாண்டி யாக்கியவர் கன்தம்வாயி லொருபிடிமண்
போட்டா னவனுமொளித் தான்சமாதிக் குழிபுகுந்தே.

'ஓட்டாண்டி ஆக்கியவர்' என்ற சொற்றொடரில் சொற்சுவையும் நகைச்சுவையும் பொருந்தியுள்ளது.

சிறையிலே அறைகூவல் :

திருமலை நாயக்கன்!

அவன் நாட்டிலே சிறைத்தண்டனை! யாருக்குத் தெரியுமா? படிக்காசுப் புலவருக்குத்தான், அப்போது அவர், திருமலை நாயகனைப் பார்த்து, "நாட்டில் சிறந்த திருமலையா! போற்றத்தக்க பண்பிற்கு உறைவிடமாய் உள்ளவனே! உன் செயலென்ன! தமிழ் நூல்களிலெல்லாம்

தேர்ச்சி பெற்று விளங்கும் இந்தப் படிக்காசை, பைங்கிளியை சிறையில் அடைத்து வைத்துள்ளாய்! பல வேறு இடங்களுக்குப் போகாவண்ணம் சிறைக் கம்பிகளுக்குள்ளே புகுத்தி வைத்துள்ளாய். அந்தப் பைங்கிளிப் புலவருக்குப் பசி வந்து விட்டது; உன்னைப் பார்த்து 'இரைதா' எனக் கூப்பிடுகின்றாரே" என்கிறார்.

குற்றமென்ன செய்தாரோ தெரியவில்லை!

ஆயினும் கொடுஞ்சிறை!

89. நாட்டிற் சிறந்த திருமலையா துங்க நாகரிகா
காட்டில் வனத்திற் றிரிந்துழலாமற் கலைத் தமிழ்தேர்
பாட்டிற் சிறந்த படிக்காச னென்னுமோர் பைங்கிளியைக்
கூட்டி லடைத்து வைத்தா யிரைதாவென்று கூப்பிடுதே.

'இரைதா என்று கூப்பிடுதே' என்ற வரியே, நகைச்சுவை புரிகிறது!

## புலவர் வேடத்திலே புல்லர்கள்

நாட்டிலே வாழும் புவவர்களைப் பற்றிப் பாடியது! "அக்காலத்தில் கேட்ட கேள்விக்குத்தக்க பதில் தரவில்லையென்றால் தலையைப் பார்த்துக் குட்டி, கண்டிப்பான். யார்? பிள்ளைப் பாண்டியன். அவனில்லை இப்போது!

அக்காலத்தில் வில்லிபுத்தூராழ்வார் இருந்தார். அவர், குற்றம் நிறைந்த கவிதைகளைத் தம்முன் படித்தால், அவர்களுடைய காதை. குறும்பிவரை குடைந்து, தோண்டி, வெட்டும் குணமுடையவர்; அவர், இன்றில்லை.

இருதலைக் குடுமிகளையும் ஒன்றாக முடிபோட்டு வெட்டும் கவியான ஒட்டக்கூத்தன், இன்றில்லை! அதனால் தான் வேடிக்கையாகப் பாடல் புனைந்து, நிரம்பப் பிழைகளோடுங் கூடிய பாடல்களைப் பாடிக்காட்டி ஏய்த்துப் பிழைக்கின்றனர் பலர். அவர்களுக்கென்று சில அதிபதிகளும் இருக்கின்றனர். அத்தகையவர்கள் இல்லாத காரணத்தால் அவரவரும் புலவரெனத் திரிகின்றனர். தூய கல்வியறிவு இல்லாதவரெல்லாம் தம்மைக் கல்விமான்களென்று கூறிக்கொண்டு திரிகிறார்கள், பாண்டியனும், ஆழ்வாரும் கூத்தரும் இல்லாத

காரணத்தால் இவர்களும் சுற்றலாம்! இவர்களே ஏனை யோரையுங் கூட்டிக்கொண்டு சுற்றலாம்.

90. குட்டுதற்கோ பிள்ளைப்பாண்டிய னிங்கில்லைக்
குறும்பியளவாக்காதைக் குடைந்துதோண்டி
எட்டினமட்டறுப்பதற்கோ வில்லியில்லை
இரண்டொன்ருமுடிந்துதலை யிறங்கப்போட்டு
வெட்டுதற்கோகவியொட்டக் கூத்தனில்லை
விளையாட்டாக்கவிதைதனை விரைந்துபாடித்
தெட்டுதற்கோவறிவில்லாத் துரைகளுண்டு
தேசமெங்கும்புலவரெனத் திரியலாமே!

'புலவரெனத் திரியலாமே!' என்ற வரி, இழிவையும், அதே நேரத்தில் நகைச்சுவையையும் முறையோடு நமக்குக் காட்டு கிறது.

இதுபோன்ற பல பாடல்கள் பாடி, நாட்டுக்கும் நற்றமி ழுக்கும் தொண்டு புரிந்து என்ருே மறைந்தார் படிக்காசு: ஆனுலும், அவர் இன்றும் வாழ்கிருர் தமிழுலகில்.

---

# புலவர் சொக்கநாதர்

'சோழவளநாடு சோறுடைத்து' என்பது உண்மை! அந்த உண்மையோடு மற்ருெரு உண்மையும் சேர்ந்தாக வேண்டும். பெரும்பாலான புலவர்களைப் பெற்றுத் தந்ததும், சோழ வளநாடுதான்.

அந்தச் சோழவளநாட்டின் அண்மையில் உள்ள கொண்டைவள நாட்டிலுள்ள வளங்கொழிக்கும் சிற்றூரிலே பிறந்து தவழ்ந்து வளர்ந்தவர்தான், புலவர் சொக்கநாதர். தொண்டு செய்வதையே பெருங்கடனுகக்கொண்ட பல புலவர்களுள் இவரும் ஒருவர். அவர் தம் பாடல் ஒவ்வொன்றும் அற்புதம்! அந்தப் பாடல்களுள் சில :—

91. மெய்யிலே யொருபாதி யுமைக்களித்த
செங்காட்டு விமலனுரே!
மையிலே தோய்ந்தவிழிச் சந்தனமான்
றலைக்கறியை வளமாயாவி
நெய்யிலே தான்சமைத்துக் கொடுத்திருந்தும்
படைத்திருந்து நீர்தானின்று
கையிலே மழுவெடுத்தாற் பொய்யாமோ
பிள்ளைகொன்ற களவுதானே.

(இ-ள்) உடம்பிலே ஒரு பாதியை உமையாளுக்குத் தந்த திருச்செங்காட்டுச் சிவனே! உம்மை விளையாட்டுக்காரர் என்கின்றனர். அப்படியானுல் நீர் குழந்தையா? குழந்தைக்குத்தான் நன்மை இது, தீமை இது என்பது தெரியாது; புரியவும் புரியாது. உமக்குமா? 'இல்லையே!' என்பீரானுல் சிறுத்தொண்டர் புராணத்தை முன்னே வைத்துக் கேட்கிறேன்; பதில் சொல்லும்.

மைகூட்டி, மெருகேற்றி வைத்துள்ள மானையொத்த விழியாளின்—சந்தன முகத்தாளின் பிள்ளையைக் கேட்டீர். அக்குழந்தையின் தந்தையான சிறுத்தொண்டரும் ஒப்புதல்

தந்தார். அதற்கொத்த முறையிலே அந்த அம்மையார், தம் பிள்ளையை அறுத்து, கறியாக்கி, தலைக்கறியைச் சிறப்பான முறையிலே—தூய பசுவின் நெய்யிலே தாளித்துப் படைத்தார். உமக்காகப் போடப்பட்ட இலையிலேயும் படைத்தார். நீரோ. இன்று கையிலே மழுவை வைத்துக் காட்டுகிறீர், அதனாலேயே நீர் செய்த திருட்டுத்தனம் மறைந்து விடுமோ? குழந்தைச் செயல் பொய்யாமோ?

'மழுவை ஏந்தி இருப்பதாலேயே நீர் செய்த கள்ளத்தனம் கறையற்றுப் போய் விடுமோ? உயிர்களிடத்தில் அன்பு வைத்துள்ளவர் என்ற பட்டம் வந்து ஒட்டிக் கொள்ளுமோ?' என்ற பொருள்படி அமைப்பிலே நகைச்சுவை இருக்கிறது.

92. அடிபட்டீர் கல்லாலு மெறிபட்டீ
ரத்தனைக்கு மாளாயந்தப்
படிபட்டும் போதாம லுதைபட்டீ
ரிப்படியும் படுவாருண்டோ
முடிபட்ட சடையுடையூர் கழுக்குன்றீர்
முதற்சோணன் முட்டக்கோண
லிடிபட்டும் பொறுத்திருந்தீர் சிவசிவா
வுமைத்தெய்வ மென்னலாமே.

(இ-ள்) திருக்கழுக் குன்றத்தின் மீது ஏறிக் கொண்டோரே! கேளும், கேளும்! பாண்டியனுடைய கைப்பிரம்பாலே அடிபட்டீர்! சாக்கியனோ கல்லாலே உன்னைத் தாக்கினான்; அத்தனை துன்பத்திற்கும் ஆளாகி, அடிபட்டதும் போதாமல் கண்ணப்பனுடைய காலாலே உதைபட்டீர்! சே! இப்படியும் துன்பப் படுவோர் உலகிலுண்டோ?

முடியுடைய சடையுடையீர்! திருக்கழுக் குன்றத்தில் வீற்றிருப்போரே! முதல் கோணல்; முற்றும் கோணல்! இடிபட்டு இருந்தீர்! ஐயோ, சிவசிவா! உம்மையும் ஒரு கடவுளென்று கூறலாமோ? வெட்கம், வெட்கம்!

'இப்படியும் படுவாருண்டோ?' என்ற வரியில் ஏளனமும் நகைச்சுவையும் பொருந்தியுள்ளன.

93. நல்லாளை யிடமருவுந் தியாசையா
வுமதிடத்தினி யாயங்காணேம்
கல்லாலே யெறிந்தோர்க்குஞ் செருப்படியா
லுதைத்தோர்க்குங் கடந்துபோரில்
வில்லாலே யடித்தோர்க்குங் கொடுத்தீரே
யல்லாமல் விழிநீர்சோர
எல்லாமுன் செயலென்றே யிருப்போருக்
கியாதேனு மீகிலீரே !

(இ-ள்) உமையவளை இடப்பாகத்திலே பொருத்திவைத்துக் கொண்டுள்ள தியாகராசா! உம்மிடத்திலே நேர்மையைக் காண இயலவில்லை. இதிலிருந்து எனக்குத் தோன்றும் கருத்தே சரியானதென்ற முடிவுக்கு வருகிறேன்! நடுநிலைமை என்பதை நீர் அறிந்திருக்க வழியில்லை. கல்லாலே உம்மைத் தாக்கிய சாக்கியனுக்கும், செருப்பாலே அடித்த கண்ணப்பனுக்கும், வில்லினாலே போரிட்ட விசயனுக்கும் அருள் செய்தீரெனப் புராணம் சொல்லுகிறதே யொழிய, நல்லோருக்கு - 'எல்லாம் உன் செயல்' என்றிருப்போர்க்குச் செய்ததாகத் தெரியவில்லை. அத்தகைய அடியார்க்கெல்லாம் அருள் காட்டாதிருக்கிறீரே, ஏன்? இந்தக் கேள்வியே வீண்தான் ! ஊம்...!?

செருப்படியால் உதைத்தோர்க்கும்' என்ற வரியில் நகைச் சுவை உள்ளது. காண்க!

இப்படி எத்தனையோ பாடல்கள் உள்ளன. அவை யாவும் இவை போன்றவையே!

சொக்கநாதப் புலவர் !

ஆம்! அவர் பாட்டில் சொக்கிப்போகாதார் உண்டோ? பாட்டுக்கேற்ற பெயர் ; பெயருக்கேற்ற பாடல்!

---

# அந்தகக்கவி வீரராகவர்

பத்தொன்பதாம் நூற்ருண்டு!

இவரும் தொண்டை நாட்டவரே! பொன் விளைந்த களத்தூரிலே பிறந்து வண்ணக் கவிவாணராக மிளிர்ந்தவர். இலக்கண இலக்கியப் பயிற்சி பெற்று நற்றமிழ் நூல்களை நல்கியவர். குறிப்பாகத் திருவேங்கடக் கலம்பகம், திருக்கண்ணமங்கைமாலை, திருவேங்கடமுடையான் பஞ்சரத்தினம், பெருந்தேவித் தாயார் போன்ற மத நூல்களை யாத்தவர். அன்னவர் பாடிய தனிப்பாடல்களுள் நகைச்சுவையாக அமைந்துள்ள சில பாடல்களை ஈண்டு காண்போம்.

94. இல்லெனுஞ் சொல்லறியாத சீகையில்வாழ் தானனைப்போ
யாழ்ப்பா ணன்யான்
பல்லைவிரித் திரந்தக்கால் வெண்சோறும் பழந்தூசும்
பாலி யாமல்
கொல்லநினைந் தேதனது நால்வாயைப் பரிசென்று
கொடுத்தான் பார்க்குள்
தொல்லையென தொருவாய்க்கு நால்வாய்க்கு மிரையெங்கே
நுரப்பு வேனே.

(இ-ள்) நாடி வருவோர்க்கு, 'இல்லை' என்று சொல்லத் தெரியாத சீகைவாழ் தானனிடம் சென்றேன். யாழ் வாசிக்கும் பாணனுகிய யான், அவன் முன்னே பல்லைக் காட்டினேன்; நயந்து இரந்து கேட்டேன். அதற்கு அவன் வெண்சோறும், பழைய உடையும் கொடுக்காமல் என் உயிரானது வெகு சீக்கிரம் போகத் தக்க முறையிலே நால்வாயையுடைய தன் களிறை வெகுமதியாகக் கொடுத்தான். பாருக்குள் பசிப்பிணியால் வாடுகின்ற என் வாயோடு, இன்னுமுள்ள நான்கு வாய்களுக்கு, எங்கிருந்து உணவு கொண்டு நிரப்புவேன்?

குறிப்பு. 'பல்லைவிரித்து, 'நால்வாயைப் பரிசென்று கொடுத்தான் 'நால்வாய்க்கு இரை எங்கே துரப்புவேனே' என்பன போன்ற வரிகளில் நகைச்சுவை பொருந்தியுள்ளது.

95. பொய்யருக்குப் பொய்யுரைத்தால் வெற்றியா
மவருக்குப் பொய்யா காத
மெய்யருக்குப் பொய்யுரைத்தால்
றவங்குறையு மிடியுண் டாகும்
துய்யதாய் தந்தையார்க்குப் பொய்யுரைத்தால்
வறுமைபிணி தொலையா வென்றும்
உய்யவரு டேசிகற்குப் பொய்யுரைத்தா
னரகமது வுண்மை தானே

(இ-ள்) பொய் பேசுவோரிடத்தில் பொய்யைச்சொன்னால், அப்படிப் பொய் சொல்வோருக்குச் வெற்றியுண்டாகலாம்; பொய்யை விரும்பாத மெய்யறிவாளர்கட்கு முன்னே பொய் சொன்னால், தேயும் திங்களைப்போல் அறம் தேயும்; பொய் சொன்னவர் மீது கொண்டிருந்த நல்லெண்ணம் நாள் ஆக ஆகத்தேயும். அதன் விளைவால் வறுமை தோன்றும்; பெற்று வளர்த்துப் பெயரிட்டழைத்த பெற்றோரிடத்தில் பொய் சொல்லப் புகுந்தால் இல்லாமையும் நோயும் நீங்கா. கல்வி கற்றுத்தந்த நல்லாசிரியரிடம் பொய் கூறினால் கொடுந்துன்பமே வந்துநம்மைச் சூழ்ந்துகொள்ளும்.

'பொய்யருக்குப் பொய்யுரைத்தால் வெற்றியாம்' என்ற ஒரு வரியே நகைச்சுவைக்கு உரியதாக உள்ளது.

## பலபட்டடைச் சொக்கநாதர்

தொண்டைவள நாட்டார்!

பண்பமைந்த பாவலர். படிக்காசுப் புலவரின் கவிதையைப் புகழ்ந்து பாடிய பாவாணர்! 'அழகர் கிள்ளைவிடு தூது' என்கின்ற சிறுகாப்பியத்தை உருவாக்கித் தந்தவர், அவர்தம் தனிப்பாடல்கள் நகைச்சுவையுடையன. இதோ சில பாடல்கள்

மணக்கிழத்தி ஒருத்தி! அவளுக்கென்றமைந்த ஒருவன்.

இருவருமே ஒருவராகத் திகழ்ந்தனர். எவ்வளவு காலமாகத் தெரியுமா ? ஓராண்டு ? அதன்பின்—?

புரிந்துகொள்ளுங்களேன்!

குழந்தை பிறந்தது ! அவள் அங்கமெல்லாம் சற்றுத் தளர்ந்து இருந்தது என்றே சொல்லவேண்டும். அதை அவன் பார்த்தானே என்னவோ ? அவன் சரியாக வாராததிலிருந்து அப்படித்தான் தோன்றுகிறது. இவ்வளவு எதற்கு ? தன் குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு என்னவோ சொல்கிருள். அதை உற்றுக் கவனிப்போம்.

"என் அருமைச் செல்வமே! உன்னைப் பெறுவதற்கு முன்பாக உன் தந்தையும் நானும் மலரும் மணமும் போலவும், கரும்பும் அதன் தனிச்சுவை போலவும், எள்ளும் எண்ணெயும் போலவும், ஒருமித்து இருந்தோம். யார் ? உன் தந்தையும் நானுந்தான் ! இன்றோ, அப்படி இணைந்து, உயிரும் உடலும்போல பிணைந்து இருந்தவரை, அன்னமானது பாலிலேயுள்ள நீரைத் தனியாகப் பிரிப்பது போலவும், வண்டானது மலரிலிருந்து தேனைப் பிரித்து எடுப்பது போலவும், கற்றறிந்தோர் நல்லதில் கலந்துள்ள தீயனவற்றைக் களைந்தெறிதலைப் போலவும், காலனானவன் உடலிலிருந்து உயிரைப் பிய்த்தெடுத்துக் கொண்டு போவது போலவும், செக்கானது எள்ளிலிருந்து எண்ணெயைப் பிரித்து எடுப்பது போலவும் என்னிடமிருந்து அவரைப் பிரிப்பதற்குப் பிறந்தாய்! நீ பிறந்தாய்...அவர் பிரிந்தார் ! என்ன கொடுமையடா, இது !" என்ற முறையிலே,

96. அரும்பாலகா முனம்பூமணஞ் சொற்பொரு ளாகமுயிர்
கரும்பாஞ்சுவை யெள்ளுமெண் ணெயும்போலொத்த
[காதலரைப்
பெரும்பாலி னல்லன்னங் கங்காசலத்தைப்பிரிப்பதுபோல்
சுரும்பாம் புலவர்யமனூலை செக்கெனத் தோன்றினையே.

(அ-ல்) முனம்-முன்னே; பூ மணம்-பூவும் மணமும் ; ஒத்த காதலரை-ஒருமைப்பட்டு இருந்த எங்களை ; சுரும்பு-வண்டு; ஆம் புலவர்-கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கும் ஆற்றலுடையவர்,

'தோன்றினையே!' என்கின்ற சொல்லில் நகைச்சுவை தோன்றுகின்றது.

அதோடு இருந்தாளா அவள்?

ஊகூம்...! மேலும் பேசத் தலைப்பட்டாள்;

''மகனே! முல்லை மொட்டுபோன்ற முலைகளைப் பால்மயமாக்கிக் கொண்டும், உன் தந்தையின் நெஞ்சத்தை இரும்பாக்கியும், என்னுடைய இதயத்தைப் பித்தளைபோல அடிபடும்படி செய்து வைத்துள்ளாய்! இப்போது அவரால் விரும்பப்படுகின்ற பெண்ணைக் கரும்பாக்கியும், என்னை அவருக்கு வேம்பாக்கியும் வைத்துள்ளாய்! இவ்வித வேறுபாட்டை உண்டாக்கி இருக்கிறாய். நீ, இம்மண்ணின் மீது பிறந்ததாய் எனக்கேற்பட்ட நன்மை என்ன? பெருமையாது'' என்று சொல்லும் வகையிலே,

97. அரும்பாக்கிய கொங்கை பாலாக்கியு முங்களப்பனெஞ்சை
இரும்பாக்கி யென்னெஞ்சைப் பித்தளையாக்கிவ் வேங் [கிழையைக்
கரும்பாக்கி யென்னையும் வேம்பாக்கி யிவ்வண்ணங் [கண்டனையே
பெரும்பாக்கிய மல்லவோமகனே யுனைப்பெற்றதுவே.

என்ற பாடல் அமைந்துள்ளது.

## பொய்கைக் குளம்

பொய்கைக் குளம்!

ஆம்! அக்குளத்தைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம்; ஆனால், சொக்கநாதப் புலவர் ஒரு பொய்கைக் குளத்தைக் காட்டுகிறார். அவர் காட்டும் குளத்திலே ஆழம் உண்டு! அதிகமாக நீர் இருக்காது! இப்போது பாருங்கள்!

ஒரு பெண்! அவள் அழகி! அவருக்கு அவள் அழகி; அந்த அழகிக்கும் சொக்கநாதருக்கும் காதல்! பல நாட்களாய்க் காதல்! ஆனால், அன்றென்னவோ ஊடல்! அந்த ஊடல் எதன்பொருட்டு வந்ததோ, யாமறியோம் பராபரமே!

''கண்ணே! பெண்ணே! வண்மை பொருந்திய மென்மையரன மயிலை யொத்த சாயலுடையவளே! இப்போது

யான் என்ன தீங்கிழைத்தேன்! நீ ஏன் வீண் கோபங் கொண்டிருக்கிறாய்! உன்னைப் பிரிய நேரிடுங்கால், அடர்ந்த காட்டிடையேயுள்ள மலையின் மீது ஏறி குதிக்க எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்தது ஒன்றே ஒன்று தான்! எனக்கென்றமைந்துள்ள வட்டமாகப் பருத்தெழுந்து நிற்கின்ற மலையொத்த முலை மீது ஏறி, உன்னுடைய அல்குலாகிய பொய்கைக் குளத்தில் குதிப்பேன்; களிப்பேன்! இது தான் எனக்குத் தெரியும். வேறு குளத்தில் குதிக்க யான் பயிற்சி பெறவில்லை. ஆகவே, வா, வா, வா!'' என்ற இன்பக் கருத்துக்களுக் கொப்ப,

98. உனக்கின்றி யான்செய்த குற்றமொன்றில்லை யுனைப்பிரிந்தால்
வனக்குன்றி லேறிவிழவறியேன் வண்மைசேர் மயிலே
எனக்கென்று வட்டமிட்டண்ணுந்து விம்மியிருக்கு முன்றன்
தனக்குன்றி லேறிவிழுவேனின் னல்குற்றடாகத்திலே!

என்ற பாடலை இயற்றியுள்ளார்.

'தனக்குன்றில் ஏறி விழுவேன், அல்குல் தடாகத்திலே" என்ற ஒரு வரிதான் நமக்குப் பெரியதொரு நகைச்சுவையை நல்கியவாறு நிற்கிறது.

பொருந்துமா இது ?

தில்லையிலே ஒரு நாள்!

சொக்கநாதப் புலவர் சென்றார்! அங்கே ஒரு கோயில் தென்பட்டது! அதுவும் சிவன் கோயில்! அப்போது,

99. குண்டைக்கொருத்தனைக் கூத்தாடும் பித்தனைக்குண்டுணியைக்
கண்டங்கறுப் பனைப்பிள்ளையைத் தின்னியைக் காணவயன்
மண்டைக் கரத்தனைக் கண்ணப்ப னெச்சிலை வாரியுண்ட
பண்டைப் பறையனையோ தேவனென்று பகருவதே!

எனப்பாடி, தன் ஆவலைப் பூர்த்தியாக்கிக் கொண்டார்.

(இ-ள்) காளையை வாகனமாகக் கொண்டுள்ள கடவுளை கூத்தாடும் பித்தனைப், புறங்கூறி வாழ்பவனை, கழுத்திலே கருநிறத்தைப் பெற்றுள்ளவனை, பிள்ளைக்கறி தின்றவனை, எல்லோரும் அறியும்படி நான்முகனுடைய மண்டை ஓட்டைத் திருக்கையில் வைத்துள்ளவனை, கண்ணப்பன் தந்த எச்சில் உணவை

உண்டவனை, இடப்பாகத்திலே பார்வதியை வைத்துள்ளவனைக் கடவுளெனச் சொல்லத் தகுமா? முறையா? நெறியா?

'கூத்தாடும் பித்தனை' என்ற சொல்லுக்குள் நகைச்சுவை உள்ளது.

அடுத்த பாட்டு!

இந்தப் பாட்டு வெறும் பாட்டல்ல! படிக்காசுப் புலவரின் ஏட்டுச் சுவடியைக் கண்டு புகழ்ந்த பாட்டு! நல்ல ஏடுகளை நாவாறப் புகழ்ந்து பாடிய பாட்டு!

100. மட்டாருந் தென்களந்தைப் படிக்காச னுரைத்த தமிழ்
வரைந்த வேட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலு மூவுலகும் பரிமளிக்கும்
பரிந்தவ் வேட்டைத்
தொட்டாலுங் கைம்மணக்குஞ் சொன்னாலும் வாய்மணக்கும்
துய்ய சேற்றில்
நட்டாலுந் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே பாட்டினது
நளினந் தானே.

(இ-ள்) தேன் மிகுந்த சோலைகளுள்ள தென்களந்தை ஊரிலே பிறந்த படிக்காசுப் புலவர் புனைந்து வைத்துள்ள ஓலைச் சுவடியைப் பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது. அந்தச் சுவடிகளைப் பட்டாடையாலே மூடிவிட்டாலும் மூவுலகிற்கும் சாலப்பரவி மணக்கும்; அன்புள்ளத்தோடு அந்தச் சுவடியைத் தொட்டால், தொட்ட கை மணக்கும்; அப்பாட்டை வாயாரப் பாடினால் வாய் மணக்கும்; துய்ய சேற்றில் நட்டாலும், பாட்டிலுள்ள நயத்தால் பயிராகும். பலருக்குப் பலனளிக்கும் முறையிலே நிற்கும்.

இப்பாட்டின்கண் கற்பனைத் திறனும் சொற்சுவைப் புலனும் மிகுதியாக உள்ளன. 'தொட்டால் கைமணக்கும்' என்ற அமைப்பாலே நகைச்சுவை மிளிருகிறது.

"இவர் பாட்டு இவ்வளவுதானா?" என்று கேட்டால் எவ்வளவோ இருக்கிறதெனக் கூறமுடியும். ஆனாலும் நாம் கொண்டுள்ள கருத்திற்கேற்ப பார்க்கும்போது 'இவ்வளவு

தான்' என்று சொல்ல இயலுகிறது. ஆயினும் இறுதியாக ஒரு பாட்டு!

மலர்த்தோட்டம்!

மங்கையர் கூட்டம்!

அவர்களுள் ஒருத்திக்கு மட்டும் எதன்மீதோ நாட்டம்! 'காதலனைக் காண முடியவில்லையே!' என்பதாலோ, என்னவோ? இருக்கும், இருக்கும்! வயது பதினறு தானே!

அவளோடு இருக்கின்ற கன்னியர்களுக்குச் செய்தி தெரியும்; ஆனாலும், தெரிந்ததுபோல் காட்டிக் கொள்ளவில்லை. அதனாலேதான் அவள் சொல்கிருள்!

அன்புள்ள தோழியரே! மலை போன்ற வட்டமான முலையுடைய தோழியரே! இந்நிலாவைப் பார்த்தீர்களா? என் உடம்பைத் தொட்டுப் பார்த்தீர்களா? எவ்வளவு வெப்பம்? நெருப்பைப் போன்ற இந்த வட்டமான நிலா ஊரையெல்லாம் எரித்துவிடுமா? உலகத்தைக் கொளுத்திவிடுமா? இன்னமும் யார் யாரைச் சுட்டெரிக்குமோ, எனக்குத் தோன்றவில்லை" என்கிருள்.

நிலவை நெருப்பாக்கினுள்!

காரணம்?

காதலன் வந்து கட்டித்தழுவ முன்வராததால்! இல்லையென்ருல் இப்படி ஏன் அப்பட்டமான பொய்யைச் சொல்ல வேண்டும்?

101. ஊரைச் சுடுமோ வுலகந் தனைச்சுடுமோ
ஆரைச் சுடுமோ வறியேனே—நேரே
பொருப்பு வட்டமான முலைப்பூவை யரேயிந்த
நெருப்பு வட்டமான நிலா.

நிலவை நெருப்பாக்கிக் காட்டி இருப்பதே நகைச்சுவைக்குரியது என்ருல், வேறென்ன சொல்லவேண்டி இருக்கிறது?!

## இராமச்சந்திரக் கவிராயர்

பத்தொன்பதாம் நூற்ருண்டு !

ஆம் ! அந்த நூற்ருண்டில் பிறந்து, தவழ்ந்து பல பாடல் களைக் குழந்தைகள் உருவத்திலே உலவ விட்டுச் சென்றவர், சிங்காரச் சென்னையெனச் சொல்லப்படுகின்ற இம்மண்ணிலே பிறந்தவர்தான், நாடக முறையிலே சகுந்தலை விலாசம், தாருகா விலாசம், இரங்கோன் சண்டை நாடகம் போன்ற பனுவல்களை, நமக்கொரு பாமாலையாக்கி விட்டுப் போனவர். 'சதபங்கி, 'நவபங்கி' போன்ற சித்திரக் கவிகளை முத்துக் களாக்கித் தந்தவர். அத்தகைய அருங்குணத்தோர் பாடல் களிலே சில வற்றைக் காண்டோம்.

நல்ல வெய்யில் !

எங்கெங்கோ சென்று வீட்டுக்கு வருகிருர் ; உணவருந்தி விட்டு வெற்றிலைப் பெட்டியோடு வந்து ஆசனத்தில் அமருகிருர்.

பெட்டியைத் திறக்கிருர் !

பாக்கு பெட்டியைத் தவிர மற்றெல்லாமே பெட்டிக்குள் இருந்தன. அங்கிருந்து எழுந்து அறைமுழுமையும் தேடிப் பார்க்கிருர். காணவில்லை. அங்கிருந்து திரும்பி வந்து. "அடுப்புக்காக விறகு வெட்டவும். காய்கறிகளை வெட்டவும். வெறுஞ்சோற்று உப்புக்காக அடகுவைத்து உப்பு பெறவும். அடகு வைக்கப்பட்டதை மீட்டுக் கொண்டுவந்து, கொட் டைப்பாக்குக் கிடைத்தால், நாலாருகப் பிளந்து கொள்ளவும், உடம்பிலே தினவெடுத்தால் 'பறக் ,பறக்' கென்று சொரிந்து கொள்ளவும், பயன்பட்ட பாக்கு வெட்டிக்கு இறகு ஏதேனும் முளைத்ததோ ? அதனுல்தான் பறந்து போயிற்ருே ?" எனக் கூறிவிட்டு. அங்குள்ளவரைப் பார்த்து, "யாரேனும் எடுத்தி ருந்தால் கொடுத்து விடுங்கள் !' 'என்னும் முறையிலே,

102. விறகுதறிக்கக் கறிநறுக்க வெண்சோற்றுப்புக் கடகுவைக்கப்
பிறகுபிளவு கிடைத்ததென்ரு ஞலாருகப்பிளந்து கொள்ளப்

பறகுபறகென்றே சொறியப் பதமாயிருந்த பாக்குவெட்டி
இறகுமுளைத்துப் போவதுண்டோ வெடுத்தீராயிற் கொடுப்பீரே !

எனப்பாடி முடிக்கிருர்.

'பறகுபற கென்ற' சொல்லின்கண் நகைச் சுவை இருக்கிறது.

## செய்த குற்றம்

103. கல்லாத வொருவனைநான் கற்ரு யென்றேன்
காடெறியு மறவனைநா டாள்வா யென்றேன்
பொல்லாத வொருவனைநா னல்லா யென்றேன்
போர்முகத்தை யறியானைப் புலியே யென்றேன்
மல்லாரும் புயமென்றேன் சூம்பற் ரேளை
வழங்காத கையனைநான் வள்ளலென்றேன்
இல்லாது சொன்னேனுக் கில்லை யென்ருன்
யானுமென்றன் குற்றத்தா லேகின்றேனே !

(இ-ள்) படிப்பின் வாசனை அறியாத பாவியை, 'கற்றறிந்தோன்' என்றேன்; காட்டை வெட்டி எறிகின்ற மறவனை, 'நாட்டை ஆளும் நாயகனே!' என்றேன்; தீயகுணத்தையே கொள்கையாகக் கொண்டுள்ளவனை, 'நற்குணமுடையோன்!' என்றேன்; போர்க்களத்தைப் பார்த்தறியாத புல்லனை, வேங்கை!' என்றேன்; ஒடுங்கிப்போன தோளுடையவனை, 'திடமுள்ள தோள் உடையவன்!' என்றேன்; ஈயாதவனைக், 'கொடைவள்ளல்!' என்றேன்; இவ்வாறு பொய் சொன்ன தற்காக அவன் "இப்போது கொடுப்பதற்கு ஒன்றுமில்லை'" என்ருன்; யானும் என் குற்றத்தை உணர்ந்து பேசாமல் வந்துவிட வேண்டிய வனுனேன்.

'கற்ருய், நாடாள்வாய், நல்லவன், புலியே, மல்லார்புயம், வள்ளல், போன்ற சொற்களிலே நகைச்சுவை உள்ளன. இவற்றையெல்லாம்விட என்றேன்!' என்ற சொல்லிலே தெளிவாக நகைச்சுவை அமைந்துள்ளது.

## தொத்திவரும் துன்பங்களுக்கிடையே...!

" வாழ்க்கை !

'சேச்சே! அந்தச் சொல்லை நினைத்தாலுமே வெறுப் புணர்ச்சிதான் மேலிடுகிறது! 'ஒரு மனிதன், எவ்வளவு துன்பங்களுக்கிடையே உழலவேண்டியவனாக இருக்கிறான்?' என்று, துன்பத்திலுள்ளோர் சொல்வதைக் கேட்கிறோம்; ஆனால், இராமச்சந்திரக் கவிராயரோ, நமக்கெல்லாம் தெரிந் திருக்க முடியாதவொன்றைக் காட்டிவிட்டுப் போயுள்ளார்.

"எனக்கென்று வந்ததோ? என்னை இன்னலுக்கு உட்படுத்தவேண்டுமென்று எண்ணியதோ தெரியவில்லை. ஒன்றன்பின் ஒன்றாகத் துன்பமானது தொடர்ந்து வந்து கொண்டிருந்தது என்னசெய்வேன்! பசுவானது கன்று போடுகின்ற நேரத்திலே 'சோ'வென மழைபெய்யவும், அதன் விளைவால் மண்வீடு விழவும், வீட்டிற்குத் தேவையான வேலைகளைச் செய்பவன் பிணியால் அவதிப் படவும், நிலத் திலே உழுது வேலை செய்பவன் இறந்துபோக, மழையால் ஈரம் பட்டுள்ள நிலமானது காய்ந்து போகக்கூடிய நிலை ஏற்படுமுன் விதையைத் தூவ அவசர அவசரமாக எடுத்துச் செல்லும்போது, கடன்காரன் எதிர்ப்பட்டு 'கொடுக்க வேண்டிய பணத்தை ஒழுங்காகக் கொடுத்துவிட்டுச் செல்!' என்றுசொல்ல, இறந்துபோன செய்தியை ஏந்தி வந்து ஒருவன் கூற, புறக்கணிக்க முடியாத விருந்தினர் வரவும், அவ்வேளையிலே வீட்டுக்குரிய ஒருவரைப் பாம்பு தீண்ட, அந்த வேதனைத் தீயிலே வெந்து கொண்டிருக்கும்போது, மன்னன் நிலவரி வந்து கேட்கவுமான நிலைமை இருக்கிறது. இப்படி இருக்கும்போது குருக்கள், 'காணிக்கை செலுத்து!' என்று கூவுகிறார்களே! அவர்களை என்னவென்று சொல்லு வது?" என்ற கருத்துக்களையடக்கி.

104. ஆவின மழைபொழிய இல்லம் வீழ
அகத்தடியாண் மெய்ந்நோவ அடிமை சாவ
மாவீரம் போகுதென்று விதைகொண் டோட
வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ளச்
சாவோலை கொண்டொருவ னெதிரே செல்லத்
தள்ளவொண்ணா விருந்துவரச் சர்ப்பந் தீண்டக்
கோவேந்த ருழுதுண்ட கடமை கேட்கக்
குருக்களோ தட்சணைகள் கொடுவென் றாரே!

(அ-ள்) ஆ ஈன—பசுவானது கன்றுபோட ; இல்லம் வீழ-வீடு விழவும், அடிமைசாவ-உழுவோன் செத்துப் போக ; மறித்துக்கொள்ள-தடுத்து நிறுத்த ; சாவோலை-இறந்த செய்தியைக் குறிக்கும் ஓலை, தள்ளவொண்ணு விருந்து-புறக்கணிக்க முடியாத உறவினர்கள் ; சர்ப்பம்-பாம்பு ; கோவேந்தர்-நீதிநெறி அறிந்த அரசன் ; தட்சணை-காணிக்கை.

'குருக்களோ தட்சணைகள் கொடுவென்ருரே! என்ற வரியிலே நகைச்சுவை பொருந்தி உள்ளது.

வறுமை உறவு கொண்டபோது...

"நான்முகம் என்ற ஒரு கடவுள் இருந்திருப்பானுனல் அவன் கொடூரமானவனுகத்தான் இருக்கவேண்டும். இல்லை யென்ருல் என்னைப் படைத்து, அதோடு வறுமையையும் படைத்திருப்பானு ?

"கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான் குடிக்கத் தான் கற்பித்தானு ? வீட்டையும் செலவழிக்கப் பொருளையும் எனக்குத்தான் கொடுத்தானு ? ஒவ்வொரு நேரத்திலும் அடைகின்ற துன்பத்தை யாரிடத்தில் கூறி ஆறுதல் பெறுவது ? யாரைத்தான் நோவது ? ஐயோ! எல்லோரிடத்திலும் பல்லைத்தான் திறக்கத்தான் புவியில் தான் என்னைப் படைத் தானே ? சே!" என்ற கருத்தை அடக்கி,

105. கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
குடிக்கத்தான் கற்பித் தானு ?
இல்லைத்தான் பொன்னைத்தா னெனக்குத்தான்
கொடுத்துந்த னிரட்சித் தானு ?
அல்லைத்தான் சொல்லித்தா னுரைத்தா
னேவத்தா னையோ வெங்கும்
பல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான்
புவிமிற்ருன் பண்ணி னுனே.

'பல்லைத்தான் திறக்கத்தான்' என்னும் சொல்லிலே பாவலர் பிழைப்பும் நகைச்சுவை நயமும் ஒருங்கே அமைந்துள்ளன.

**கடவுளுக்கும் கஷ்டகலாம்!**

"ஐயோ! ஏமாற்றிப் பழக்கப் பட்டவர்களிடத்திலே இரக்கச் சென்றேன். அதற்காக அயராது அலைந்தேன். ஆனால், வெறும் கால் நோயைத்தான் பரிசாகப் பெற்றேன்; ஒவ்வொரு தலைவாசலை நோக்கிச் சென்ற போதெல்லாம் இடிபட்டேன்; அதன் காரணமாகத் தலை நோகிறது; 'கவிதைக் குரிய நெறியோடு எழுதியுள்ள பாட்டுக்களை ஏறெடுத்துப் பார்க்க எவரும் இல்லையே!' என்று எண்ணுகின்றபோது அதனால் தோன்றும் மனநோய்; இவ்வளவையும் தீர்த்து வைப்பார் என்று சிவன் கோயிலிலே முறையிடப் போனேன்; ஐயா!" என்று, தம் முன்னே உட்கார்ந்திருந்தவரிடத்தில் சொன்னார். அதற்கு அவர், "ஊ...ம்! அதற்கு என்ன மருந்து கிடைத்தது?" என்றார்.

"மருந்தா? அதையேன் கேட்கிறாய்! அந்தப் பரமசிவன் பிரம்படியால் பட்டநோயும், பஞ்சவரில் ஒருவன் வில்லால் அடித்த புண்ணும், வேடனான கண்ணப்பன், தன் காலால் கண்ணைப் பொத்தியதால் ஏற்பட்ட புண்ணும், பார், பார்!" என்று காட்டி நின்றான். இந்தக் குறையை யாரிடத்தில் சொல்லுவேன்? என்றார்.

அதுகேட்டு, அவர் சிரித்துக் கொண்டே போனார்; நீங்களும் சிரித்துக் கொண்டே பாடலைப் பாருங்கள்.

106. வஞ்சகர்பா னடந்தலைந்த காலிற் புண்ணும்
வாசருறை முட்டுண்ட தலையிற் புண்ணுஞ்
செஞ்சொல்லை நினைந்துருகு நெஞ்சிற் புண்ணுந்
தீருமென்றே சங்கரன்பாற் சோர்ந்தே னப்பா
கொஞ்சமல்ல பிரம்படியின் புண்ணும் வேடன்
கொடுங்காலா லுதைத்தபுண்ணுங் கோப மாகப்
பஞ்சவரி லொருவன்வில்லா லடித்த புண்ணும்
பாரென்றே காட்டிநின்றான் பரமன் றானே.

'பார் என்றே காட்டி நின்றான் பரமன் தானே' என்ற வரியில் நகைச்சுவை உள்ளது.

இப்படி ஒவ்வொரு பாடலும் பாடி பலரை நாடியவர்! ஆனாலும் வறுமையிலேயே வாழ்ந்து, வறுமையினாலே இறந்தவரென்பது அவருடைய பாட்டுக்கள் மெய்ப்பிக்கின்றன.

## சீர்காழி அருணாசலக்கவிராயர்

பதினெட்டாம் நூற்றுண்டின் முற்பகுதிப் பாவலர்! தருமபுரத்திலிருந்துவந்த அம்பலவாணக் கவிராயர் அவர்களிடம் முறையாகக் கல்வி பயின்று பல பாடல்கள் இயற்றியவர். நாடகத் தமிழுக்கு உயிரளித்த உத்தமர்! சீர்காழி புராணம், அசோமுகி நாடகம், சீர்காழிக்கோவை, அனுமார் பிள்ளைத் தமிழ் போன்ற பனுவல்களை ஈந்தவர். அத்தகைய அருங்குணக் கவிராயர் பாடிய பாடல்களுள் சில :—

107. மிகப்பட்ட வெம்பசியால் வெம்பருந்தின் வாயில்
அகப்பட்ட கோழிப்பார்ப் பானேன்—நகப்பட்ட
கல்லையோ கைதொழுதேன் காகமணு காமலையில்
இல்லையோ ரத்நகிரியே.

(இ-ள்) அளவுகடந்த கொடிய பசித்துன்பத்தால் மிகக் கொடிய பருந்தின் வாயில் கிடைத்த கோழிக்குஞ்சு போல் ஆனேன். யான் கல்லையா கடவுளெனக் கும்பிட்டேன்? இல்லையே! காகமும் அணுகாத இரத்னகிரி மலையை அல்லவா நானும் வணங்கினேன்; அந்த ரத்னகிரி போன்ற சிவன் இப்போது இல்லையோ ?!

'அகப்பட்ட கோழி' என்ற சொல்லடக்கத்துள் நகைச் சுவை உள்ளது.

108, கால்வீழ்ந்து நம்மைக் கவிபாடச் சொன்னனே
மேல்வீழ்ந்து நாமே விளம்பினும்—நூலறிந்து
தந்தக்காற் றந்தான் றராக்கா னமதுமனம்
நொந்தக்கா லென்னுகு மோ ?

(இ-ள்) ஏ, மடநெஞ்சே! நம்முடைய காலிலே விழுந்து, 'கவிராயரே! ஒரு பாட்டுப் பாடுங்கள்!' என்று, எவனேனும் ஒரு செல்வன் வந்து கேட்டானு? இல்லை...நாமாகவே சென்று, விரும்பிப் பாட்டு பாடினேம்! அவ்வாறு பாடப்பட்ட பாட்டிலுள்ள நயத்தை அறிந்திருப்பானுனல் வேண்டிய பரிசு

கொடுத்திருப்பான்! ஆனால், அவன் அப்படித் தராதபோது வீணாக நீ வருந்தி என்ன பயன்? சொல்! ஏதேனும் முடியுமோ?

'கால்வீழ்ந்து நம்மைக் கவிபாடச் சொன்னானே!' என்ற முழுவரியும் நகைச்சுவை பயக்கிறது.

109. வெண்ணெயுற்று நெய்தேட வேண்டுமா தீபமுற்று
நண்ணு கனறேட னன்றாமோ—எண்மனத்தை
நாடிச் சிவனிருக்க நாடாம னூர்தோறும்
தேடித் திரிவதென்ன செப்பு?

(இ-ள்) ஏ, உள்ளமே! உனக்கு என்ன பேதமை? வெண்ணெய் கையிலிருக்கும்போது நெய்யைத் தேட வேண்டிய அவசியம் என்ன வந்துள்ளது? தேவையில்லை. விளக்கு இருக்கும்போது அனலைத் தேடிப் பிடிக்க முனைவது சரியா? என் மனத்தை நாடிச் சிவன் இருக்கும்போது, அவனை அகத்துக்குள் பார்க்காமல் ஊரூராய்ச் சென்று, கோயில்களுக்குள் நுழைந்து பார்ப்பது ஏன்? அதற்குக் காரணம் கூறுக!

'தேடித் திரிவதென்ன செப்பு?' என்று மனத்தைக் கேட்கிறார்; நமக்கு, அதன் மூலமாகச் சிரிப்பை உண்டாக்குகிறார்.

110. ஞானம் பெருமை நயங்கருணை யுண்மையபி
மானம் பொறுமை வணக்கமுயர்—தானமுடன்
சற்குணமா சாரந் தகுகல்வி நீதிநெறி
துர்க்குணருக் கில்லென்றே சொல்.

(இ-ள்) அறிவு, பெருமை, நியாயமோடு பேசுதல், இரக்க குணம், உண்மை, விருப்பம், பொறுமை, வணக்கம் போன்றவைகளோடு உயர்ந்த ஈகை, நல்ல குணம், ஒழுங்கு, தக்க கல்வி, நடுநிலையான வழி போன்றவைகள்.

'இல்லென்றே சொல்' என்பது வருவித்துக் கொள்ளத் தக்க நகைச்சுவை,

அருணாசலக் கவிராயர் தந்த அரியபாடல்கள்! இவர் தம் பாடல்கள் நன்னெறி புகட்டுவன!

## சுப்ரதீபக் கவிராயர்

111. படைத்தமதன் றனையெரித்த பழமலையார்
நன்னாட்குற் பாவை யாடன்
கடையரிக்கண் ணான்மருட்டி மயல்பூட்டி
வரவழைத்துத் கைக்குள் ளாக்கி
இடைதுவள முலைகுலுங்க வெனையணைத்த
சுகத்தைநினைத் தேங்கி யேங்கி
அடைமழையு முளைவழியும் பொதியெருது
மொருவனும்போ லலைகின் றேனே !

(இ-ள்) படைத்தமதனை-அதாவது மன்மதனை எரித்த பழமலையார் உள்ள நாட்டிலே வாழும் பதுமை போன்ற மங்கை. இருக்கிறாளே, அவள் பலேகெட்டிக் காரி; வரிகள் பரவியுள்ள கடைக்கண்ணால் நல்லிளை ஞர்களை மயக்கி, மோக தாகம் ஏற்பாடும்படியாக காமவிலங்கிட்டுத், தன்னிடம் வருமாறு வயப்படுத்தி, வேடிக்கை செய்யும் விஷமக்காரியிடம் நானும் சிக்கி னேன் ! இடைதுவளவும் முலை குலுங்கவும் நடந்து வந்து, என்னை ஆலிங்கனம் செய்து கொடுத்த சுகத்தை நினைந்து ஏங்கி ஏங்கி, அடாது பொய்யும் மழையில் உளைச்சேறு நிறைந்தவழியில் பொதி சுமக்கும் மாட்டை ஓட்டிச் செல்லும் மனிதனைப்போல அலைகின்றேனே !

'ஏங்கி ஏங்கி' என்பதிலே நகைச்சுவை ! அவ்வளவுதான் 'இவ்வளவுதானா ? என்று கேட்டுவிடாதீர். அவர் காட்டினது அந்த அளவுதான்.

### குழந்தையும் விலைமகளும்

அண்ணாமலை என்ற பெயருடையோன் ! அவன், தன் காதலியிடம் காட்டி இருந்த அன்பு கரும்பைவிடச் சுவை யானது ! அது இப்போது எங்கேஎன்று கேட்டுவிடாதீர்கள்.

அதற்குப் பதிலளிக்க அவனுடைய காதலியே வருகிருள் கேளுங்கள் :—

"அண்ணுமலை அரசனுக்கு, அப்போது, நான் அழகாயிருந்தேன். கச்சு இறுக்கத்தால் முலை விம்மிக்கொண்டிருந்த நேரத்தில் கரும்புபோலச் சுவைஉள்ளவளாக அவருக்கு இருந்தேன். கைக்குழந்தை ஒன்று பிறந்தது. அதன்பிறகு அவருக்கு நான் மருந்துபோல் பயன்பட்டேன் ; இப்போது-?

நஞ்சுடைய கண்களைத் தம்மகத்தே பெற்றுள்ள விலைமகளிரெல்லாம் அன்னவர்க்குக் கரும்பானுர்கள் ; நானே வேம்பு போலக் கசப்பவளாகி விட்டேன். என் செய்வது ?"

இனி, பாட்டைப் பாருங்கள் !

112. கச்சிருக்கும் போது கரும்பானேன் கைக்குழந்தை
வச்சிருக்கும் போது மருந்தானேன் — நச்சிருக்கும்
கண்ணுர் கரும்பானுர் காணவுநான் வேம்பானேன்
அண்ணு மலையர சுக்கு !

'கச்சிருக்கும்போது' என்று தொடங்கியுள்ள சொற்ருெடரி, லேயே நகைச்சுவை ஒட்டிக் கொண்டிருக்கிறது.

---

## சுந்தரக் கவிராயர்

### விடை எங்கை ?

சுந்தர கவிராயர்; வறுமைக்கு ஆட்பட்டவர் ! அவர் போனர் ! எங்கே தெரியுமா ? திருவிரிஞ்சையிலே உள்ள மார்க்கேசனைக் காண ! அப்போது...?

"தேன் பாயும் சோலைக்குப் பேர்போன திருவிரிஞ்சைக் கோயிலிலே குடிகொண்டுள்ள மார்க்க சகாயா ! பாவியாகிய யான், உன் அருள் பெற வந்தால், 'பாவியே! நீ ஏன் இங்கு வந்தாய் ?" என்று கேட்காமல், தலைகுனிந்த வண்ணமல்லவா உள்ளீர் ? இந்நாள், உம்மைத் தவிர உதவி புரிபவர் யாருமில்லையே !" என்கிருர்.

பேசினுல்தானே ! ஆனுலும் கடனுக்கு ஒரு பாட்டு !

113. தேன் பாயுஞ் சோலைத் திருவிரிஞ்சை மார்க்கேசா
நான்பாவி வந்துன்னை நாடினுல்—ஏன்பாவி
என்றுபே சாம லிருந்தீர் தலைவளைத்து
இன்றுதுணை யாரு மிலையே.

'நான்பாவி' என, தன்னைத்தானே நொந்துக் கொண்டிருப்பதிலேதான் நகைச்சுவை உள்ளது ;

"துணை எனக்கு யாரும் இல்லையே ! ஈசா ! மார்க்கேசா ! நீ தலைகுனிந்து இருப்பது தகுமா? அலையும் என் மீது இரக்கங் கொள்ளாமல் இருப்பது நல்லதா ? நீர் தானு மார்க்க சகாயர் என்ற பெயருடையவர்?" என்கிருர்.

114. இலையே துணையெனக் கீ சாமார்க் கேசா
தலையே வளைக்கத் தகுமோ ?—அலையுமென்மேல்
ஏனேதா னேவென் றிருப்பதழ கோநீர்
தானே வழித்துணை நாதன் ?

'ஈசா ! மார்க்கேசா !' என்ற இருசொல்லுக்குள் நுழைந்து கொண்டிருக்கிறது நகைச்சுவை !

"பத்து கால்களைக்கண்டேன்; மூன்று தலைகளைக் கண்டேன்; ஆறுவாய்களைக்கண்டேன்; நான்கு கண்ணும் கண்டேன்; இவ்வளவையும் ஓரிடத்தில் கண்டேன்; விரும்பிப் பார்த்தேன்! களிப்படைந்தேன்! உலகத்தில் இதைக் கண்டு கூறுவயாக!"

715. பத்துக்கான் மூன்றுதலை பார்க்குங்கண் ணாறுமுகம்
இத்தரையி லாறுவா யீரிரண்டாம் — இத்தனையும்
ஓரிடத்திற் கண்டேனுகந்தேன்; களிகூர்ந்தேன்
பாரிடத்திற் கண்டே பகர்

(அ-ள்) பத்துக்கான் - பத்துக்கால்கள்; கண்ணாறும் - ஆறு கண்ணும்.

இந்தப் பாட்டுக்குள் இரு காளை மாடுகளும் ஒரு மனிதனும் புகுந்து கொண்டிருக்கின்றனர். வேறொன்றுமில்லை. கலப்பையிலே இரு காளைகளைப் பூட்டி ஓட்டுகின்ற மனிதனோடு பத்துக் கால்கள்; மூன்று தலைகள்; இரண்டு காளைகளின் நான்கு கண்களும் ஓட்டுவனுடைய இரண்டு கண்களும் சேர்த்து ஆறு கண்கள்; குறிப்பின் வாயிலாக 'காளை மனிதன் முகத்தோடு கொழு முகம் மூன்றும் சேர்த்து முகம் ஆறு-இம்மூன்றும் வாயுடன் நாழிவாய் ஒன்று சேர்த்து வாய் நான்காவது காண்க' என, கா. சுப்பிரமணியம் எழுதி இருத்தலைக் காண்க.

## பொதுவுடமை

"மயிலையொத்த சாயலுடைய மங்கையே! இந்த நாட்டில் பொதுவுடமையாக ஆறு, குளம், மாந்தோப்பு போன்றவைகளும், அழகிய தெரு, ஒழுங்கான சத்திரம் போன்றவைகளும் செப்பனிடப்பட்டுள்ள பாதை அந்தப் பாதையின் ஓரத்திலே காய்த்துக்குலுங்கும் கனிநிறைந்த மரங்கள்; அம்மரங்களின் நிழல் போன்றவையும், கோட்டமும், அடிக்கடி மாற்றமடைகின்ற மனமுடைய விலைமகளிரும், அவையும், நீர்ப்பந்தலும், அரசனும் உலகிற்குப் பொதுவானவர்கள்." என்ற கருத்தை அமைத்து,

116. ஆறு குளந்தோப்பு மணிநியமஞ் சத்திரம்
கூறுவழித் தாறுநிழற் *கோட்டமுடன்—மாறுமன
வேசிசபை நீர்ப்பந்தல் வேந்தன் மடமயிலே
காசினிக்கு ளேபொது வாங் காண்

'வேசிசபை' என்றதொரு அமைப்பிலே நகைச்சுவை உள்ளது.

117. சுயவரெலாங் கூடியொரு காரியத்தைச் செய்தும்
பயனடைவ துண்டோவிப் பாரில்—வியலில்லுறும்
சோதினிமுன் பின்னுஞ் சோர்ந்து தேய்ந் தும்பயனே
யாது மடையாது போல்.

(இ-ள்) கீழ்க்குணம் உடையவர்களெல்லாம் ஒன்று கூடி ஒரு காரியத்தைச் செய்தாலும். பாருக்குப் பயனுடையதாக இருக்குமா? பரந்த வீட்டின்கண் உள்ள விளக்கு, முற்றிலும் மாறுபாடானது; முன்னும்பின்னும் நிலத்தில் உறைந்து குறைவு பட்டபோது ஒரு பயனும்பெருது!

'சுயவரெலாம்கூடி' என்பதில் கூடியிருக்கிறது நகைச்சுவை.

இவ்வளவுதான் பாட்டு.

---

## முத்துச் சுப்பையர்

118. அண்டின பேரைக் கெடுப்போருமொன்றுபத் தாய்முடிந்து
குண்டணி சொல்லுங் குடோரிகளுங் கொலையேநிதஞ்செய்
வண்டரைச் சேர்த்தின்ப சல்லாபம் பேசுமறையவருஞ்
சண்டிப் பயல்களுமே கலிகாலத்திற் றுட்டிகரே.

(இ-ள்) தம்மை அணுகிக் கிடப்பவரைக் கெடுப்பவரும், ஒன்றைப் பத்தாக்கி முடித்து, பெருக்கிப் பொய் கூறி பகைமை வளர்க்கின்ற கோடாரிக் காம்பை ஒத்தவர்களும், அனுதினமும் கொலை செய்வதையே தொழிலாகக் கொண்டுள்ளவரோடு ஊடாடி, அவரோடு ஒன்று கலந்து இருக்கின்ற வேதமோதுவோரும் குதர்க்க வாதிகளுமே இந்தக் கலியுகக் காலத்தில் இருப்பவர்கள்.

'சல்லாபம் பேசும் மறையவரும்' என்ற வரிதான் நகைச் சுவைக்குப் பொருந்தியுள்ளது.

119. ஊசிக்கும் நூலுக்கு மாகாற் செய்தொழிலுள்ளவெகு
தோசிக்குஞ் சாமித் துரோகிகட்குந் தொலையாவழக்காய்ப்
பேசிக்கொள் வோருக்குங் கற்பா லிலங்கிய பேதையரை
யாசிக்கும் பேர்கட்குமே கலிகாலம் யதார்த்த மதே.

(இ-ள்) ஊசியோடு நூலை பொருந்தும்படிச் செய்யாதது போல, பொருந்துங் காரியங்களைப் பொருந்தவிடாமல் செய்கின்ற கயவர்களுக்கும், முதலாளிகளுக்குத் துரோகமிழைப்பவர்களுக்கும், தொலையாத வாழ்கைப் பற்றி ஆவலாகப் பேசுகிறவர்களுக்கும், கற்பொழுக்கத்தில்உயர்ந்து இருக்கும் பெண்களைப் பிச்சையாகத் தந்தருள்வேண்டும் என்பவர்களுக்கும் கலிகாலம் பொருத்தமுடையது.

'பேதையரை யாசிக்கும் பேர்கட்குமே!' என்னும் வரியிலே நகைச்சுவையானது மெல்ல தன்புன்னகையைக் காட்டுகிறது.

120. அள்ளித் திரவிய மீந்தாலும் பொய்யுரையா தவரை
கள்ளரென் றேதுங் கலியுகத்தே கடைந்தே யெடுத்துத்
தெள்ளமு தொக்க நொடிக் காயிரம் பொய் செலுத் துமதி
யுள்ளவரே பெரியோர் புவியோர்க்கு முவந்தவரே

(இ-ள்) வந்து கேட்போருக்கெல்லாம் அள்ளி அள்ளித்தந் தாலும், பொய்யைச் சொல்லாதவரைக் கள்வரெனக் கூறும் இந்தக் கலியுகத்திலே, கடைந்தெடுத்த தெள்ள முதுபோல உருவெடுத்துள்ள உண்மையான பொய்ச் சொற்களை விநாடிக்கு விநாடி ஆயிரம் சதவிகிதம் சொல்கின்ற மெய்யறிவுடையவர்களே உயர்ந்தோர் களாகத் திகழ்கிறார்கள். உலகத்திலுள்ளவர்களுக்கு இனிமையானவர்களாக அவர்களைத்தான் கருதுகிறீர் கள். காரணம், கலிகாலம் !

'ஆயிரம் பொய் செலுத்துமதி' என்ற வரியில் நகைச்சுவை அமைந்திருக்கிறது.

121. ஊட்டி யினித்தசொல் லுத்தமி யென்றுள் ளொருத்திவரக்
காட்டிக் கணவனைக் கண்ணுறக் காட்டிக் கனத்தமதக்
கோட்டி கொண்டா ளரையுமே குடிமாதர்கள் கூடுவதால்
ராட்டுவைத் தார்களின்றே கலியிற்றுசி நங்கையரே!

விலைமகளின் கூற்று இது !

நுனித்தொண்டையால் பேசும் இனிய சொல்லோடுங் கூடிய ஒரு பெண், தெரிந்தவளொருத்தி வீட்டுக்கு வந்தாள்; அவ்வாறு வந்தவளை, அந்த வீட்டிலிருக்கும் ஒருத்தி, தன் கணவனுக்குச் சுட்டிக் காட்டினாள்! கணவன் புணரும்படி யாக ஒரு குறிப்பைக் காட்டினாள் ; காமப்பித்துக்கொண்ட அந்தப் பிற ஆடவனைக் குடும்பப் பெண்கள் கூடுவதால், இக் கலியுகத்தில் விலைமகளிருக்கு வேறு வேலையின்றி இராட்டி னத்தை வைத்து நூற்பாராயினர். என்னே, நிலை !

'இன்றே ராட்டு வைத்தார்கள்'—என்ற வரியிலே இனிய நகைச்சுவை உள்ளது.

122. வில்லாய் வளைந்து நிசங்காட்டி வாங்குவர் மீளவந்தே
யல்லும் பகலுங் கடன்கொடுத் தோர்க ளலைந்திடினும்
வல்லங்கம் பேசுவ ரில்லையென் றேதுவர் வாளுருவிக்
கொல்லவும் பார்ப்பர் கலிகாலத்தே கடன் கொள்ளிகளே !

(இ-ள்) பிறரிடத்தில் கடன் வாங்கும்போது வில்லைப்போல் வளைந்து, திரும்பவும் கொடுப்பதுபோல் நடித்துக் கடன் பெறுபவர்கள்; அதன்படி கொடுப்பதில்லை; அல்லும் பகலும் கடன் கொடுத்தவர்கள் கடன் வாங்கியவர் வீட்டிற்கு அலைந்தாலும், கலிகாலத்துக் கடன் கொள்ளிகள் (வாங்கிகள்) இல்லாத தெல்லாம் பேசுவர்; வாங்கினதே கிடையாதென்பர்; வாளை உருவிக் கொல்லவும் முனைவர் எல்லாம் கலிகாலக் கூற்று !

'கொல்லவும் பார்ப்பர் கலிகாலத்தே'—என்ற வரி ஒன்றே நகைச்சுவைக்குப் போதும்.

---




# மாயூரம் வேதநாயகம்

கி. பி. பத்தொன்பதாம் நூற்ருண்டு!

ஆம்! இந்தக் காலத்திலே தோன்றிய கவிவாணர்கள் ஏராளம்! அவர்கள் படைத்துத் தந்த தத்துவங்கள் முத்துக்கள் போன்றவை. அம்முத்துக்களில் சிறந்த முத்தாக விளங்குபவர்தாம் மாயூரம் வேதநாயகனுர். வேளாண் குளத்தூரிலே பிறந்தவர். சீர்காழி, மாயூரம் போன்ற இடங்களில் மாவட்ட நீதிபதி (District Munsif) ஆகப் பணியாற்றியவர்.

சர்வ சமய கீர்த்தனைகள், நீதிநூல், பெண்மதி மாலை, பிரதாப முதலியார் சரித்திரம், சுகுணசுந்தரி வரலாறு போன்ற நூல்கள், இவரால் இயற்றப் பெற்றவை. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுடைய மாணுக்கருள் ஒருவரேவேதநாயகமும். இத்தகைய ஒப்புயர்வற்ற கவிவாணரை கி.பி. 1889-ஆம் ஆண்டானது கவ்விக்கொண்டு போய்விட்டது. ஆயினும் அவரால் இயற்றப் பெற்ற நூல்கள், இன்றும் நின்று நிலவுகின்றன. அவர் காண்பித்த நகைச்சுவைகளை ஈண்டு காண்போம்:-

128. தறைநீங் கினவுத்தி யோகத்தைக் கைவிட்ட தன்மையினுற்
சிறைநீங் கினம்பல தீயர்க்குள் ளாகிச் சிறுமையுறுங்
குறைநீங் கினந்துட்டர் கூட்டமு நீங்கினங் கூடுந்துன்பப்
பொறைநீங் கினநங்கறை நீங்கினமகிழ் பூணெஞ்சமே!

(இ-ள்) ஏ, மனமே! தறைநீங்கின தொழிலைக் கைவிட்ட காரணத்தால்-ஓரிடத்திலேயே ஒட்டிக் கொண்டிருந்த நிலைமையிலிருந்து நீ விலகியதால் உண்மையிலேயே கட்டுப்பாட்டை விட்டு விலகியவர்களானேம்; தீயவர் பலருக்கு உட்பட்டிருந்த இழி நிலையிலிருந்து விலகினேம்; தீயவர்களுடைய கூட்டத்திலிருந்து விடுபட்டோம்; தொலையாது வந்துசேரும் இடுக்கண்களிலிருந்தும் விடுதலை பெற்ருேம். நம்முடைய உள்

ளத்திலிருந்த குற்றமும் நீங்கப் பெற்றோம். இதயமே! இனியேனும் இன்புறுவாயாக!

'சிறை நீங்கினம்! என்பதிலே நகைச்சுவை உள்ளது.

124. வீடு நிலங்கள் பொருளை விற்பாரிந்த மேதினியில்
நீடு மெண்சாண் மெய்யை யோர்சாணுதர நிமித்தம்விற்று
நாடு மரசர்க் கடிமையென றே முன்பு நாங்கொடுத்த
ஏடு கிழிபட்ட தன்றோ வுத்யோக மிழந்ததுவே!

(இ-ள்) மனமே! வீடு, நிலங்கள், பொருள் ஆகிய அனைத்தையும் இவ்வுலகில் விற்பார். எண்சாண் 'உடம்பை' ஒரு சாண் அளவுள்ள வயிற்றுக்காக விற்பனைசெய்து' தொழிலின் பொருட்டு நாடிவரும் அரசருக்கு நான் அடிமையிலும் அடிமையெனக் கூறி, தொழிலின் காரணமாக ஈடுபடுத்தி வைத்திருந்த அடிமை ஏடு தொழில் இழந்த காரணத்தால் கிழிபட்டு விட்டது.

'உத்தியோகம் இழந்ததுவே' என்ற சொல்லமைப்பின்கண் நகைச்சுவை இன்பம் உள்ளது.

வேதநாயகனாரின் பாடல்களனைத்துமே அனுபவத்துக்குள் அடங்கி உள்ளவையாகும். தாம் கண்டதும் அனுபவித்ததுமே பெரும்பாலான பாடல்களாக அமைந்துள்ளன. இம் மேதினியிலுள்ளோர் தொழிலிருந்தால் மதிப்பதும், அத் தொழிலை இழந்தால் மதியற்றுத் தூற்றுவதும் தொழிலாகக் கொண்டிருப்பதை,

125. நீருள்ள மட்டுங் குளநாடும் பக்கி நிதிமடவார்
சீருள்ள மட்டுந் தொடர்வாருத் யோக சிலாக்கியமாம்
பேருள்ள மட்டுமுறைவாடிப் பின்பு பிரிந்திடுவார்
பாருள்ள மட்டும் பழிச்சுமை தாங்கிய பாதகரே!

என்ற பாடலால் புலப்படுத்திப் போயுள்ளார்.

குளத்திலே நீர் இருக்கின்ற வரையிலே பறவைகள் அனைத்தும் மிகவும் விரும்பிச் செல்லும்; செல்வரிடத்திலே பதுங்கியுள்ள பணம் ஒழியும் மட்டும் பெண்கள் ஒன்றி இருப்பர்; கீழான காரியங்களைச் செய்து கயவரெனப் பெயர் பெற்றோர், உலகம் உள்ளவரையில் பழிச் சுமையைத் தாங்கிக் கொண்டுதான் இருப்பார்கள்; அத்தகைய தீயவர், ஒருவர்,

தொழில் துறையிலே நின்று பணியாற்றும் வரையிலே இணைந்து இருப்பர்; பின்னர்...? விலகிக் கொள்வார்!

கயவர் குணம் அது! இந்த அடிப்படையைக் கொண்டதே மேலுள்ள வெண்பா.

திருவாடு துறையிலே வாழ்ந்தாரொரு பண்பாளர்; அவர் பெயரோ சுப்பிரமணியதேசிகர். அன்னவருக்கும் வேதநாயகனுருக்கும் நீண்ட தொடர்புண்டு. அந்தத் தொடர்புக்கு இடையே காலவெள்ளம் கரைபுரண்டு ஓடியது; அதனுலேயே சுப்பிரமணிய தேசிகரைக் காணுமல் இருந்தார் நாயகம்.

ஒரு நாள்!

எல்லா வேலையையும் ஒதுக்கி வைத்துவிட்டுத் தேசிகரைப் பார்க்கச் சென்ருர். சென்ற நேரத்தில் அவரில்லை. அவரில்லை என்று தெரிந்திருந்தும், வருவதற்கு மனமின்றி அங்கேயே தங்கினுர். இரவு முழுமையும் உறங்காமலேயே விழித்திருந்தார். அப்போதும் வரவில்லை.

மறுநாள் காலை!

வழிமேல் விழிவைத்தபடி காலத்தைக் கழித்தார். மாலையும் வந்தது! அவர் எதிர்பார்த்திருந்த தேசிகரும் வந்து சேர்ந்தார். 'அப்பாடி!' என்றதொரு பெருமூச்சு! வண்டியிலிருந்து இறங்கினுர் தேசிகர். அப்படியே அணைத்துக் கொண்டு, 'அப்பப்பா! உங்களுக்காக எவ்வளவு காலத்தைச் செலவழித்தேன்!' என்று சொன்னுர்.

தேசிகருடைய பல்லெல்லாம் வெளியே தெரியத் தொடங்கியது.

இருவரும் தெருத் திண்ணையில் அமர்ந்தனர். தேக்கி வைத்திருந்த தீத்தமிழ்ச் சொற்களைப் பரிமாறிக் கொண்டனர். 'எவ்வளவு நாழிகை?' என்று என்னைக் கேட்டு விடாதீர்கள்?

எப்படியோ விடைபெற்ருர்!

விடு வந்து சேர்ந்தார்!

படுக்கையில் படுத்தார்! தூக்கம் வரவில்லை. எதையோ ஒன்றை இழந்து வந்ததாகவே வேதநாயகனுருக்குத்தெரிந்தது. அதனுலேயே இரவெல்லாம் உறக்கமில்லை!

பொழுது விடிந்தது!

ஓலை எடுத்தார்! எழுத்தாணியை அதன் மீது பதிய வைத்தார். நான்கு வரிகளையுடைய வெண்பாவை எழுதினார். அந்த வெண்பாவே கீழே வருவது!

126. சூர்வந்து வணங்குமேன் மைசுப்பிர மணியதேவே
நேர்வந்து நின்னைக்கண்டு நேற்றிராத்திரியே மீண்டேன்
ஊர்வந்து சேர்ந்தேனென்த னுளம்வந்து சேரக்காணேன்
ஆர்வந்து சொலினுங்கேளே னதனையிங் கனுப்புவாயே!

(இ-ள்) அனைவரும் வந்து வணங்கத்தக்க அளவிலே ஆற்றல் மிகுந்த சுப்பிரமணியதேவே! நேற்றைய நாள் நும்மைக் கண்டு, இரவே என்னுடைய சொந்த ஊருக்கு வந்து சேர்ந்தேன்; இல்லத்தைச் சேர்ந்தேன். ஆனால், என் உள்ளம் மட்டும் வந்து சேரவில்லை. 'ஏன்?' என்று எனக்குப் புரியவில்லை. நீங்கள், 'அங்கு இல்லை' என்று சொன்னாலும் கேட்க மாட்டேன். ஆகவே அதை இங்கு அனுப்புவீராக!'

'ஆர்வந்து சொல்லினுங் கேளேன்; அதனை இங்கு அனுப்புவாயே' என்ற வரியில், நகைச்சுவை அமைந்துள்ளது.

127. சட்டியகந்தல் புதிதென்று விற்பர் கணக்கிற்றொகை
யொட்டியெழுதுவர் கைமேல் விலையை யுடன்றரினும்
வட்டியிலா பங்களொன்றுக்கும் நூறெென வாங்குமந்தச்
செட்டிகட் கஞ்சியலவோ நம்மீசன் றிகம்பரனே!

(இ-ள்) இடுப்பிலே கட்டி அவிழ்க்கப்பட்ட பழந்துணியைப் புதுத் துணியென்று விற்பார்; யார்? வியாபாரிகள். அத் துணியைக் கடனுக்கு எடுத்தால் கணக்கெழுதுவதற்காக இருக்கின்ற ஏட்டில், கூடுதலான விலையைப் போட்டு எழுதிவைப்பர்; வாங்கக்கூடிய துணிக்கொத்த பணம் கொடுத்தாலும் வட்டியும் இலாபமும் சேர்த்து ஒன்றுக்கு நூறுபங்கு வாங்குகின்ற செட்டிகளுக்குப் பயந்தல்லவோ நம்மீசன் திக்கையே உடையாக அணிந்து கொண்டான். ஐயகோ! பரிதாபம்!

'செட்டிகளுக்கு அஞ்சி அல்லவோ?' என்ற வரியிலே இன்பம்! அதுவே நகைச்சுவைக் குரியது.

தம்மால் இயன்றவரையில் வாரி வழங்கும் மனம் படைத்தவர் ஒருவர். அவர் முன்னே ஒரு புலவர் நின்றார். 'தாங்கள் யாரோ?' என்றார் அந்த வள்ளல்!

"ஐயா! நானொரு புலவன்...பாடல் புனைந்து பணம் பெற்றுப் போக வந்த பாவலன்!" என்றார்

"அப்படியா! பாடுங்கள் பார்ப்போம்!" என்றான்.

அவர் பாடத்தொடங்கினார்! என்ன வென்று பாடத் தொடங்கினார் தெரியுமா?

"கன்னா! பொன்னா! காமா!" என்பனபோன்ற சொற்களை அமைத்துப் பாடினார்.

அதுகேட்ட அவர்,

128. கன்னாபொன் னாவெழிற் காமாவென் றேகவி கட்டியென்முன்
னுன்னாதிரக்குங் கவிப்புலவீ ருமக்கொன்றுங்கொடேன்
முன்னாநும் பாடலெனக் கலக்கன்னன் முதலியர்க்கே
யன்னாரி டஞ்சென் றரங்கேற்றிக் கொண்மினருநிதியே!

(இ-ள்) 'கன்னனே! பொன்னனே! அழகான காமனே!' என்றெல்லாம் புகழ்ந்து பாட்டெழுதி என் முன்னே வந்து பொருளுதவி கேட்கும் புலவீர்! உமக்கு யாதொன்றும் கொடுத்துதவ மாட்டேன். முன்னிரண்டு வரிகளிலுள்ள பெயர்கள், என்னைக் குறிப்பிடுவனல்ல! கன்னன், பொன்னன், காமன் போன்றவர்க்கே அப்பாடல் உரியது. ஆகவே அவர்களை அணுகி, இப்பாடலை அங்கு ஒப்புவித்து உயர்ந்த பொருள்களைப் பெற்றுப் போவீராக!

'கன்னா பொன்னா' என்ற இரு சொல்லுக்குள் நகைச்சுவை உள்ளது. அறிக!

நல்ல வெய்யிற் காலம்!

வேதநாயகத்தால் தாள முடியவில்லை! அப்போது மேகத்தைப் பார்த்தார்.

"ஏ, மேகமே! நீ தேக்கி வைத்திருந்த நீரையெல்லாம் கள்வன் கவர்ந்து கொண்டு போய்விட்டானா? நீரை உதவாமல் இருப்பது நெறியாகுமா? உனக்கு நேராகத் தானே கடல் உள்ளது! ஆகவே கடலிலிருந்து முகந்து,

அள்ளி அள்ளிக் குடித்து, வானத்து வழியாகச் சென்று, கருமுகிலாக மாறி, இடி முழக்கம் செய்து, ஒன்று திரண்டு 'சோ'வெனப் பெய்!'' என்னும் பொருளில்,

129. காரேயுன் னீரையெல்லாங் கள்ளன் கவர்ந்தானோ
நீரே யுதவாய் நெறியாமோ—நேரேதான்
வாரியுண்டு வாரிமொண்டு வாரியுண்டு வானிருண்டு
பேரிகொண்டு நீதிரண்டு பெய்.

என, எழுதி முடித்துள்ளார்.

'வாரியுண்டு வாரிமொண்டு வாரியுண்டு வானிருண்டு பேரி கொண்டு நீதிரண்டு பெய்! என்ற இருவரிகளிலும் நகைச்சுவை பொருந்தி உள்ளது.

அவர் பாடினார்!

'மழை பெய்ததா ?'—என்றால் இல்லை,

இரண்டு நாட்கள் கழிந்தன! உருண்டு திரண்டு மேகம் வந்தது! இருண்டு கிடந்தது! அது கண்ட அவர் "பெரு முகிலே! 'உனக்குத் தருகிறேன்!' என்று கூறி, கொடுக்காமல் இருக்கின்ற கொடியவரைப் போல, மழை பெய்வதுபோல வெளிக்குக்காட்டி, இருண்ட வானவீதியில் போவாய்; சற்று நிற்பாய்; பெருமுழக்கம் செய்வாய்; மின்னல் காட்டுவாய்! நீண்ட நேரமாக வானிலேயே தங்கி இருப்பாய்! ஆனால்—?

மழை பெய்யாமல் இருந்துவிடுவாய்!

என்னே உன் செயல்!'' என்ற முறையில்,

130. செய்வே னெனச்சொல்லிச் செய்யாவு லோபரைப்போற்
பெய்வே னெனக்காட்டிப் போர்முகிலே—மைவானி
லோடுவாய் நிற்பா யுருமுவாய் மின்னுவாய்
நீடுவாய் பின்பெய்யாய் நீ.

எனப் பாடியுள்ளார்.

'ஓடுவாய் நிற்பாய் உருமுவாய் மின்னுவாய்; நீடுவாய் பின் பெய்யாய் நீ' என்ற வரிகளிலே நகைச்சுவை கலந்துள்ளது.

இது வரையிலே வேதநாயகனாருடைய பாடல்களில் கலந்துள்ள நகைச்சுவையைக் கண்டோம். இது போல எத்தனையோ வெண்பாக்கள். அவைகளனைத்திலும் நகைச் சுவை உண்டு; அவர் தம் திறமைக்கு எத்தனையோ எடுத்துக் காட்டுகள் உண்டு. அவற்றுள் சிலவற்றையே ஈண்டு கண்டோம்.

# இரட்டையர்

பதினைந்தாம் நூற்ருண்டு! இரட்டையர்!

இரட்டையர்!—நாட்டிற்கோர் இலக்கணம்! அன்பிற் கோர் எடுத்துக்காட்டு! பூமாலை சூட்டினுலும் விண்மாரி பொழிந்தாலும் இருவருமே ஒருவர் போலத் திகழ்வர். பிரியாத பாசம்; கண்ட கண்ட இடத்திலெல்லாம் இருவருக்கும் வாசம்; முடவரென்பர்; குருடரென்பர். இருவருக்கும் இயற் கையாகவே இருகுறை! பாதை காட்ட முடவரும், அக்கம் பக்கம் நடக்கின்ற செய்திகளைக் கேட்கக் குருடரும் உதவியாக நின்றனர்.

முதல் இரண்டு வரிகளை ஒருவரும், இறுதி இரண்டு வரிகளை மற்ருெருவரும் பாடி முடிப்பர். அதுவே அவர்க ளுடைய திறன்!

இவர்களது சொந்த ஊர் ஆலந்துறை.

குருடர், முடவரைச் சுமப்பார்!

முடவர், தமக்குள்ள கண்களால் வழி காட்டியவாறு செல்வார். அவர்கள் இயற்றிய நூல்களான திருவாமாத்தூர்க் கலம்பகம், தில்லைக் கலம்பகம், ஏகாம்பரநாதருலா, கச்சிக் கலம்பகம் போன்றவைகள் நயமிக்கவையாகவும் நகைச்சுவை நிரம்பியதாகவும் உள்ளன.

கலம்பகத்திற்கு இரட்டையர்கள்!' என்றதொரு அமைப்பி லிருந்து அவர் தம் ஆற்றல் தெளிவாக விளங்கும். அவ் விருவர் சேர்ந்து பாடிய தனிப்பாடல்களும் உண்டு. அவற் றுள் சிலவற்றைக் காண்போம்.

கூவராயன், விரசம்பு—இருவருமே இரத்தபாசத்திற் குரியவர்கள்!

கூவராயன்—மூத்தவர்; வீரசம்பு—இளையவர். இவ்விரு வருள் மூத்தவரான கூவராயரே இரட்டையர்களை ஆதரித்து வந்தவர். வேண்டியபோதெல்லாம் வேண்டியதைக் கொடுத்த வள்ளல் அவர்! 'கேளுங்கள் கொடுக்கப்படும்; தட்டுங்கள்

திறக்கப்படும்' என்ற ஏசுநாதர் வாக்குப்போல் வள்ளலும் இருந்தார்.

தட்டுவார், இரட்டையர்!
திறப்பார், கூவராயர்!!
கேட்பார், இரட்டையர்!

கொடுப்பார், கூவராயர்!! — அத்தகைய வள்ளல், தமக்குப் பரிசு வழங்கும்போது வலது கையால் அதைப் பெறுவர். யார்? இரட்டையர்தாம்!.

கூவராயர் உள்ளம் இன்பத்தில் குளிக்கும்!

அக் காட்சியைக் காணும் பேறு பெற்ற முடவருடைய வாயிலிருந்து செந்தமிழ் வெள்ளம் பொங்கும்! குருடருடைய வாயிலிருந்து தீந்தமிழ்ச் சொற்கள் துள்ளும்!—இப்படியே பாடிப் பாடிப் பொருளைத் திரட்டுவர்.

ஒரு வேளை! கூவராயன் குடிலுக்கு இரட்டையர் வந்தனர். அவரோ, குடிலில் இல்லை. வெளியே சென்றிருந்தார். அதுகண்ட இரட்டையர் வெளியே வந்தனர். கூவராயர் வீட்டிற்கு எதிர் வீட்டிலிருக்கும் வீரசம்பு வெளியே வந்து, இரட்டையரைக் கண்டு வணங்கி, 'வாருங்கள், ஐயா!' என்றார்.

'யார், இவர்?'—என்றார், குருடர்!

அது கேட்ட முடவர், 'மூத்தவருக்கு இளையவர்!' என்றார்.

'அப்படியா? என்ன செய்தி?' என்றார் குருடர்.

அது கேட்ட வீரசம்பு, "இரட்டை மணிகளே! எங்கள் இல்லத்திற்கு வருகை தந்து போக விழைகிறேன்" என்றார்.

இருவரும் வீரசம்புவின் பின்னே சென்றனர்!

வீட்டுக்குள் நுழைந்தனர். இரட்டையரை அரியாசனத்தில் அமரச் செய்தார். வீரசம்பு! உள்ளே சென்றார்! இரும்புப் பெட்டியிலிருந்த செல்வத்தை அள்ளிக்கொண்டு வந்து, "இரட்டையரே! இந்தாரும் பொற்காசுகள்" என்றார்!

அந்த இரட்டையர் இடது கையால் அதை வாங்கினர். அதுகண்ட வீரசம்பு, "கல்வியிற் சிறந்து, இன்சொல்லால் வெண்பாவைப் புனையும் இரட்டைப் புலவர்களே! வீரசம்பு

ஒரு சிறந்த தலைவனென்றும் எண்ணுமல், ஈகை உதவினுல், வலக்கைத்தலத்தில் பெற்று களிப்புக்கொள்ளாமல், உம் முடைய இடக் கையால் வாங்கிக்கொண்டதற்குக் காரண மென்ன'வென்று வினுவெழுப்பும் முறையில்,

131. பதிவீர சம்புவென்று பாராமற் கல்விக்
கிதமுடைய ரெட்டையரே யீகை—உதவில்வலக்
கைத்தலத்திற் கொண்டு களிக்காம லும்மிடது
கைத்தலத்திற் கொள்ளுவதேன் காண்?

என்ருர்.

அதுகேட்ட இரட்டையர், "பூவுலகில் மின்னலும் பணி யத்தக்க அளவிலே ஒளி பொருந்திய மங்கையர்களுக்கு மன் மதன் போன்றவரே! கூவராயனுடைய தியாகமான மனத்தை —அவன் தரும் பரிசை, எங்களுடைய வலக்கையால் ஏற்றுப் போற்றிப் புகழ்வோம்; முடியணிந்த எவரும், எதைக் கொடுத் தாலும், அதனை இடக்கையாலேதான் ஏற்றுக்கொள்வோம். இனிமேல் நாங்கள் அவரிடத்தில் கண்ட அன்பைப்போல் வேறு எவரிடத்தில் காணப்போகிறேம்?" என்ற கருத்தை வைத்து,

132. "கூவரா யன்றியாகங் கொள்வோம் வலக்கைமுடி
யாவர் தரினுமிடக்கை கொள்வோம்—பூவுலகில்
மின்பணிமின் ஞர்மதனே வீரசம்பு வேயினிநாம்
அன்பெவர்பால் காண்போ மடுத்து.'

என்று ஒரு வெண்பா பாடினர்.

அவ் வெண்பாவைக் கேட்ட வீரசம்பு, "இரட்டையரே! நீவிர் இருவரும் என்னைப்பற்றி நன்கறிவீர்! பேரும் புகழும், சீரிய நெறியையும் அறிந்தவர்கள்; கொடைவளம் பொருந்திய குணத்தை உணர்ந்தவர்கள்! அப்படி இருக்கும்போது எப்படி என் அண்ணுவை, என்னைவிடச் சிறப்புடையவராகக் கருதிச் சொன்னீர்? கூவராயனுடைய இயல்பு என்ன? எனக்குக் கூறுக!" என்ற அடிப்படையில்,

133. என்னுடைய பேரும் புகழு மிருஞ்சீரும்
என்னுடைய வீகையுங் கண்டெப்படிநம் முன்னவனை
ஆவலுடனே யதிகமாச் சொன்னி ரெட்டையரே
கூவராயன் னியல்பென்கூறு?

என்ருர்.

வீரசம்புவினுடைய அறியாத்தனமான வினுவைக் கண்டு சீற்றமிருப்பினும், பொறுத்துக் கொள்ளும் ஆற்றல் பெற் றிருந்ததால், "வீரசம்புவே! மாதாவும் பிதாவும் அவன்; ஆசிரியரும் ஆண்டவனும் அவன்; வள்ளலும் அவன்;

எங்களுக்கு வரும் புகழுக்கு முழுமுதல்வனும் அவன்; தியாக சமுத்திரமவன்! கூவராயனுடைய கொடைவளப் பெருமையைக்கூற இயலா! அது அவ்வளவு எளிதல்ல! கூறமுயன்ருல் இன்றளவோடு முடியாது'' என்னும் முகத்தான்,

184. மாதா பிதாவுமவன் மன்னுகுரு தெய்வமவன்
தாதாவவனே தருங் கீர்த்தி—காதாரன்
தியாக சமுத்திரன் றென்கூவ ராயன்றன்
ஈகைதனைச் சொல்லவெளி தோ?

எனக் கூறிவிட்டு அங்கிருந்து புறப்பட்டனர்.

இதுவரையில் கண்ட நிகழ்ச்சியில் நகைச்சுவை இல்லையென்பது வெள்ளிடைமலை. இனிவரும் பாடல்களிலேதான் நகைச்சுவை.

அக்காலத்தில் கால்நடை பயணத்தைத்தான் நம்மவர் கொண்டிருந்தனர். போக்குவரத்துச் சாதனமில்லாத காலம். அந்தக் காலம்! இரட்டையர் இருந்த காலம், ஐந்து நூற்ருண்டுகளுக்கு முன்பு! இன்றிருப்பதுபோல் அன்றில்லை என்பது அனைவருக்கும் தெரிந்த செய்தியே. அந்தக் காலத்திலேதான் திருநங்கூர் வரையிலே கால் நடையாக நம்முடைய இரட்டையர் சென்றனர். அங்கு ஆதரிப்பாரில்லை. என்ன செய்வார்கள்?

ஒவ்வொரு குக்கிராமத்திற்குள்ளும் நுழைந்து நுழைந்து வந்தனர். இறுதியில் எங்கிருந்தோ வரும் மேளதாள ஓசையைக்கேட்டு அங்குச் சென்றனர்.

ஆம்! சிவபெருமான் திருவீதி வலம் வருவதைத் கண்டனர். அவ்வேளையில் இருவருக்கும் சொல்ல முடியாத அளவுக்குப் பசி! அச்சமயத்தில், ''மண்டிக் கிடக்கும் புகழுக்கிடையே உழலும் ஊரின்கண் குடியிருக்கும் சிவனே! இரவிலேயும் எங்களைக் காக்கும் அப்பனே! நாங்கள் இருவரும் பசியோடு இருப்பது நீதியா? என்ருர். இங்கு யாவராலும் புகழ்ந்து பேசப்படுகின்ற சங்கு, பறை, பேரிகை போன்றவைகள் முழங்கும் ஒலியேயன்றி சோறுகண்ட பேர்வழி யார்? போங்காணும்!'' என, வயிறெரிந்து சொல்கின்ருர் முடவர்.

135. தேங்குபுக ழாங்கூர்ச் சிவனேயல் லாளியப்பா
நாங்கள் பசித்திருக்கை ஞாயமோ—போங்காணும்
கூறுசங்கு தோல்முரசு கொட்டோசை யல்லாமல்
சோறுகண்ட மூளியார் சொல்.

'போங்காணும்' என்ற சொல்லிலே நகைச்சுவையையும் வெறுப்புணர்ச்சியும் இரண்டறக் கலந்துள்ளன.

அடுத்த பாட்டு!

சிதம்பரம்! இந்தச் சிதம்பரத்திலே இருக்கும் தில்லை நடரா சன் முன்னே தாம் கண்டதை எடுத்துரைக்க முற்படுகின்றனர்.

"நடனமாடும் பழக்கத்தைக் கைக்கொண்ட தில்லை வாழும் நடராசனே, அந்தகனே தலைவனாக வாய்ப்பின் மங்கையை, சிறப்பு வாய்ந்த பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்களிட்டு, செந்திருவைப் போல சிங்காரித்து யாது பயன்? அவனுக்குத்தான் அந்த அழகுக்குள்ள மதிப்புத் தெரியுமா? ஊம்! கொஞ்சம்கூடத் தெரியாது; புரியவும் புரியாது. அதுபோலவே மூடர் முன்னே பாட்டு மொழிந்தால் அப்பாடலிலுள்ள நயத்தை அறிவாரோ?" என்ற இன்பக் கருத்தை அமைத்து,

136. மூடர்முன் னேபாடல் மொழிந்தா லறிவரோ
ஆடெடுத்த தென்புலியூ ரம்பலவா—ஆடகப்பொற்
செந்திருவைப் போலணங்கைச் சிங்காரித் தென்னபயன்"
அந்தகனே நாயகனா னால்.

என்று பாடிப் போயுள்ளனர்.

'அந்தகனே நாயகனானால்!' என்ற இறுதிவரியிலே நகைச் சுவை மிளிருகிறது.

இரண்டாவது பாட்டு!

'இந்தப் பாட்டிலே தனிச்சுவை மிளிருகிறது' என்று நீங்களே சொல்லும் அளவில் வெண்பா இருக்கிறது.

மாங்காடு!

இந்த ஊரின் பெயர், இன்றும் நின்று நிலவுகிறது! அந்த ஊருக்கு இரட்டையர் சென்றனர். மாங்காட்டுக்கு அருகா மையிலே ஒரு வழி! அதுவும்! அடர்ந்த மரங்கள் உள்ள வழி! அந்தப் பாதையில் தந்தையும் மகளும்!

தந்தை தம்முடையமகளை மருமகன் வீட்டில் விட்டுவிட்டு வருவதற்காகப் போய்க் கொண்டிருந்தார். அதே வழியாக டையர் சென்று கொண்டிருந்தனர். அப்போது—

என்ன நடந்தது என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? அதற்கு விடை, என் வாயிலாக எதிர்பார்க்காதீர்கள். இப்போது இரட்டையருள் ஒருவர், உங்களுடைய ஆவலைப் பூர்த்தியாக்குவார்.

"நண்பரே! நாம் செல்லும் இவ்வழியில் ஒன்று நடந்து விட்டது!" என்றார் முடவர்.

"என்ன நண்பரே...அது?" என்றார் குருடர்.

"தந்தையாக உள்ளவர், தம் மகளை அப்படியே இறுக அணைத்துக் கொண்டார்" என்றார் முடவர்.

"ஓகோ !...நண்பரே ! மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பமென்பது வள்ளுவர் வாய்மொழியல்லவா ! அதை நிரூபித்துக் காட்டும் வகையில் இருக்கும் '" என்றார், குருடர்.

"இருக்கும், இருக்கும் !"

"அதுமட்டுமல்ல தோழரே ! மேலும் அவர்களுடைய சொற்களைக் கேட்டல் செவிக்கு இன்பமென்றும் வள்ளுவர் சொல்லிப் போயுள்ளார் ?"

"ஆமாம் ! ஆனாலும் அரிவை ஆயிற்றே அவள் ?"

"அதனாலென்ன ! பெற்றோர்க்குத் தம்மக்கள் வளர்ச்சி பெற்றிருந்தாலும் குழந்தையேதான் !" என்றார். இக்கருத்து அடங்கிய வெண்பாவே,

137. "மாங்காட்டு வேளாளன் மகளை மருமகன்பால்
போங்காட்டி லின்பம் புணர்ந்தானே—ஆங்காணும்
மக்கள் மெய்தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு"

இகழ்ச்சி தோன்றப் பாடினும் ஆராய்வோர்க்கு எளிதில் தெளிவாகும்' 'இன்பம் புணர்ந்தானே !' என்ற சொற்றொடரில் நகைச்சுவை மிளிருகிறது.

மூன்றாவது பாட்டு !

"நண்பரே ! செங்குத்தான மலைகளையும், தாழ்வாகவுள்ள பள்ளத் தாக்குகளையும் கடந்து செல்லும் காலம் என்றுதான் நம்மை விட்டு ஒழியுமோ ?' என்றார், முடவர்.

அதற்கு குருடர், "புலமை மிக்கவருக்கு யாதொன்றும் ஈயாத பேர்வழிகளைக் காமதேனு என்றும், கற்பகச் சோலை யொன்றும் ஏற்றிப்புகழ்ந்திருந்தால்நமக்கிந்த இன்னல் நேரிட்டிருக்குமா ? ஊம் ! என்ன செய்வது " என்றார். அக் கருத்தை உள்ளடக்கித்தான்,

138. குன்றும் குழியுங் குறுகி வழிநடப்ப
தென்று விடியுமெமக் கென்கோனே—ஒன்றும்
கொடாதானைக் கோவென்றுங் காவென்றுங் கூறில்
இடாதோ நமக்கிவ் விடி.

என, இருவரும் பாடினர்.

'இடி' என்ற சொல்லிலே நகைச்சுவை.

நான்காவது பாட்டு !

இதையே இரட்டையருடைய இறுதிப் பாட்டாக முடிக்கிறேன்.

காட்டைக் கடந்த இரட்டையர் நாட்டை அடைந்தனர். அதுவும் எந்த நாடு தெரியுமா ? பாண்டிய நாடு ! அம்மன்னனைக் கண்டு பரிசிலைப் பெற்று வரலாமென இருவரும் சென்றனர் ; மன்னனைக் கண்டனர். அவனும் பரிசிலைத்தர இசைந்து முத்தாரத்தைக் கழற்றினுன். அப்போது அந்நாட்டு அமைச்சன் தடுத்து நிறுத்தினுன். அவ்வளவுதான் ! இருவருக்கும் சொல்ல முடியாத சீற்றம். அந்தச் சீற்றத்தின் வேகத்தில் "தொன்மையான தமிழ்ப் புலவர்களை ஆதரித்து வந்த அவையே ! அவையிலுள்ள புலவர்களே ! இக் குரங்கு, மராமரத்தை விட்டு இங்கு வந்த காரணமென்ன வென்று நீங்கள் கேட்கவில்லையோ ? பூவுலகிலெல்லாம் வெற்றிக்கொடி நாட்டிய தமிழ் மன்னனுன பாண்டியனையும், அவரது இளையவரையும் இராமனென்றும் இலட்சுமண னென்றும் நினைத்து வந்ததுவோ ?" என்னும் முகத்தால்,

139. "புராதன மானதமிழ்ப் புலவீ ரிந்தப் புன்குரங்கு
மராமரம் விட்டிங்கு வந்ததென்னே வகை கேட்டிலையோ
தராதலம் வென்றதமிழ் மாறனையுந்தன் தம்பியையும்
இராக வனென்று மிலக்குவ னென்று மிருந்ததுவே"

என்று பாடினர்.

'புன்குரங்கு—என்ற சொல்லமைப்பிலே நகைச்சுவை அடங்கி உள்ளது. ஆற்றல் மிக்க அரசனிடத்தில், கோழை மனமும் குள்ளமனமும் படைததிருந்ததாகச் சொல்லப்படும் இராம இலட்சுமணனுடைய தூதுவன் ஏன் இங்கு வந்துள்ளான் ? வேழப்படையுள்ள நாட்டிலே கோழைக் கென்ன வேலை என்பது தெளிவாகிறது பாடல் முடிந்தது !

இப்படி எத்தனையோ வெண்பாக்கள் ! அவை யாவும் பொன்னேட்டிலே பொறிக்கப்பட வேண்டியவை !

இன்று இரட்டையர் இல்லை ! இருந்தாலும் அவர்களால் பாடப்பட்ட வெண்பாக்கள் உள்ளன. அவைகளே நமக்குப் போதுமானவை ! அம் மருந்தைக் காட்டிலும் வேறு எம் மருந்து நம்மவர் மனத்தைக் குணப்படுத்த வல்லது ?

இல்லவே இல்லை !

எனவே, இரட்டையரைத் தொழுவோம் ! அவர்களையொத்த புலவர்களுடைய பொன்னுரைகளைப் பாராட்டிப் பிறரையும் பாராட்டவைப்போம் !